உள்ளவை இந்த இனத்தில் சேரும். ஒரு மொழியின் உயிர், எழுத்திலும் சொல்லிலுமே இருப்பதாகாது. அது வாக்கிய அமைப்பிலே வாழ்வதாகும். இந்த உண்மையை மறந்தவர்கள் எழுதும் தமிழ் இப்படித்தான் நெளியும்.

ஆங்கிலம், இங்கிலாந்து, ஐரோப்பா முதலான பல சொற்கள் தமிழ் வடிவாக அமைந்துள்ள அழகு போற்றத் தகுந்தது. ஆனால் இக்காலத்துப் பத்திரிகை ஆசிரியர்கள் சில நூற்றாண்டுகளுக்கு முன் பிறந்திருந்தால், இங்கிலீஷ், இங்கிலாண்ட், யூரப் என்றே எழுதல்வேண்டும் என்று ஓர் இயக்கம் தொடங்கியிருப்பார்கள். நல்ல காலமாக அந்தச் சொற்கள் தப்பிப் பிழைத்தன. பிறமொழி எழுத்துக்களையும் அப்படியே பெயர்த்து எழுதவேண்டும் என்று இக்காலத்தினர் சிலர் விரும்புகின்றனர். அதைத்தான் எழுத்துப் பெயர்ப்பு எனல்வேண்டும். சீன மக்களிடம் சென்று 'கிரைஸ்ட்' என்று சொல்லுமாறு வற்புறுத்தினால் அவர்கள் நகைப்பார்கள். 'கிலிசெது' என்று ஒலிக்கக் கேட்பதில் தான் சீனர் மகிழ்வார்கள். சப்பானியரும் 'க்ரைஸ்ட்' என்பதில்லை; 'கிரிசெத்து' என்பார்கள். எழுத்துப் பெயர்ப்பிற்கு அவர்கள் மனம் பெயரவில்லை. ஆங்கிலேயர் 'திருநெல்வேலி' என்னாமல் 'டின்னவெலி' என்று தம் ஒலியியலுக்கு ஏற்பக் கூறுவர். எழுத்துப் பெயர்ப்பிலும் சொற்பெயர்ப்பிலும் நோக்கம் செலுத்தித் தாய்மொழியினை மறப்பவர் அவர்கள் அல்லர். தாயை வருத்திப் பேயும் பூதமும் களிக்க விருந்திடுவோர் அவர்கள் அல்லர்.

> ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை
> பெருஞ்செல்வம் உற்றக் கடை

என்று திருவள்ளுவர் வகுத்த பேதையர் இனத்துள் சேர்வோர் அவர்கள் அல்லர்.

நண்பர் கொணர்ந்த பாட்டில் எழுத்துப்பெயர்ப்போ, சொற்பெயர்ப்போ இல்லை. ஆயினும் பாட்டின்பம் பெருமைக்குக் காரணம் என்ன? மொழிபெயர்ப்பு என்று எவற்றையும் மொழிபெயர்த்திடல் முடியாது. திருவாசகத்தைப் பல ஆண்டுகள் படித்து உருகி உணர்ந்த அறிஞர் போப் என்பவரின் பேருழைப்பின் பயனாக வெளிவந்துள்ள ஆங்கில மொழிபெயர்ப்பான திருவாசகத்தை நோக்கினால் உண்மை விளங்கும். உயிரின் உணர்வு இன்றி மூளையின் உழைப்புமட்டும் கொண்டு வெளிவந்த நூல்களை மொழிபெயர்த்திடலாம். வரலாறுகள், நிலநூல் முதலியன, அவை பற்றிய ஆராய்ச்சிகள், அரசியல் சட்டங்கள், சங்க விதிகள், உலக நிகழ்ச்சிகள் முதலானவற்றை மொழிபெயர்த்தல் கூடும். உணர்வு மிகுதியாகக் கலந்த சிறந்த பாடல்களையும் நாடகங்களையும் கட்டுரைகளையும் மொழிபெயர்த்தல் எளிதன்று. இவற்றை அருளியுதவும் பேரறிவு வாய்ந்த புலவர் எல்லாவற்றையும் வெளிப்பட உரைப்பாரல்லர். சிலவற்றை வெளிப்பட உரைப்பர்; சிலவற்றைக் குறிப்பால் புலப்படுத்துவர்; சிலவற்றைக் கூறாது விடுத்து ஒழியிசை யாக்குவர். வெளிப்பட உரைப்பனவே மொழிபெயர்ப்புக்கு இயையும். மற்றவை இயையா. குறிப்பிலும் ஒழியிசையிலுமே புலவரின் உணர்வு கலந்து வாழும். ஆதலின், நண்பர் மொழிபெயர்த்த பாட்டில் உணர்வு இல்லா வறுமை கண்டேன். அதுபோன்ற பாட்டுக்களை உயிரில்லாப் பாட்டுக்கள் எனலாம். இயற்கையறிவு வாய்ந்தவர் இத்தகைய மொழிபெயர்ப்பில் காலம் கழித்தல் ஆகாது. மொழிபெயர்ப்பில் முனைந்தால் இயற்கையறிவினை இழந்துவிடுவர். இதனை நண்பருக்கு மற்றொருநாள் சுட்டிக் காட்டினேன்

தமிழ்மாணவர் எனப் புகழ்பெற விரும்பிய அறிஞர் போப் போன்றவர் மேற்கொண்ட முயற்சியைக் குறை கூறுதல் தக்கது அன்று. மொழிபெயர்ப்பின் குறையே அன்றி மொழிபெயர்ப்போர் குறை அன்று எனலாம். அறிஞர் போப் முயற்சியால்தான், இன்று ஆங்கிலம் அறிந்த பிறநாட்டினரும், தமிழ் அறியாத் தமிழ் நாட்டினரும் திருவாசகம், திருக்குறள், நாலடியார் என்பன என்ன என்று அறிய முடிகின்றது. அதுபோலவே, டென்னிசன் மொழிபெயர்ப்புப் பாட்டும் உணர்வு ஊட்டாவிடினும் இன்னது என்று அறிவிக்கும். கீதாஞ்சாலி ஆசிரியர் தாகூர் அதனை வங்காளி மொழியில் பாடினார். அவரே அதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார் ; நோபெல் பரிசும் பெற்றார் ; உலகப் புகழும் உற்றார். ஆனால் ஆங்கிலேயருள் அறிஞர் சிலர் மொழிபெயர்ப்பைப் படித்த அளவில் அமையாமல், வங்காளி மொழியினைக் கற்று, அம்மொழியில் அந்நூலைப் பாடி இன்புற்றனர். எனினும் அவர்கள் பெற்ற இன்பம், வங்காளியைத் தாய்மொழியாகக் கொண்ட அறிஞர் ஒருவர் பெறும் இன்பத்தில் ஒரு பகுதியே ஆகும்.

பிறநாட்டுக் கலைகளின் இயல்பை அறிவதற்காக மொழிபெயர்ப்பு நூல்களின் துணை வேண்டும். ஆனால் பாட்டின் இன்பத்திற்காக மொழிபெயர்ப்பை நாடுவதில் பயனில்லை. தமிழில் பாட்டுக்குப் பஞ்சம் இல்லை. புலமைக்குத் தமிழ் நாடு பேர்பெற்றது. திருவள்ளுவர், இளங்கோவடிகள், மாணிக்கவாசகர், ஆண்டாள், குமரகுருபரர் முதலானோர் பிறந்த நாட்டில் பிறந்து, அவர்கள் பேசிய மொழி பேசி, அவர்கள் வளர்த்த நாகரிகத்திலும் ஒருவாறு வளர்ந்து, அவர்கள் பாடிய பாட்டுக்களை அந்தத் தாய்மொழியிலேயே பாடி இன்புறும் பேறு பெற்றதை நினைக்க நினைக்க மனம் இறுமாப்பு உறுகின்றது.

# ஊருடன் கூடிவாழ்

'மாங்காய்ப்பழம் மாங்காய்ப்பழம்' என்று தெருவில் ஒருவன் விற்றுச் சென்றான். வீட்டுத் திண்ணையி லிருந்தவர் ஒருவர் அந்தக் குரலைக் கேட்டுச் சிரித்தார். அடுத்திருந் தவரை நோக்கி, "உங்கள் ஊரில்தான் இந்தப் பெயரைக் கேள்விப்படுகிறேன். எங்கள் ஊரில் இப்படி ஒரு பழம் விற்கப்படுவ தில்லை" என்றார். விற்பவன் மீண்டும் அவ்வாறே கூவினான். "பழக்காரரே! இங்கே வா அய்யா" என அழைத்தார். கூடை திண்ணையில் இறங்கியது. "இது என்ன பழம் அய்யா!" என்றார். "நீலம், மல்கோபா, பெங்களூரா..." என்று அவன் சில பெயர்களைச் சொன்னான். "நான் அதைக் கேட்கவில்லை. என்னவோ கூவி விற்றாயே" என்றார். அவர்முகத்திலும் அடுத்தவர்முகத்திலும் இருந்த புன்னகையைக் கண்டு பழம் விற்பவன் திகைத்தான்.

அப்போதும் விடாமல், அவர் "இது என்ன? மாங்காய்ப்பழமா? மாம்பழமா?" என்றார்.

"அப்படியும் சொல்வார்கள். இப்படியும் சொல்வார் கள். எங்களுக்குத் தெரிந்ததை நாங்கள் சொல்கிறோம். ஏழைகள்—எங்களுக்கு என்ன தெரியும்?" என்றான் பழம் விற்பவன்.

அவனை அவர் திருத்த முயன்றார். "இனிமேல் மாம் பழம் என்றே சொல். வாழைக்காய்ப் பழம், பலாக்காய்ப் பழம் என்று சொல்கிறாயா? இல்லையே. இதை மட்டும் ஏன் மாங்காய்ப்பழம் என்று சொல்கிறாய். இனிமேல் சொல்லாதே" என்றார்.

பழம் விற்பவன் அவருடைய திருத்தத்தைப் பொருட்படுத்தவில்லை. "எப்படிச் சொன்னால் என்ன சாமி! சொல்லிலே என்ன இருக்கிறது? பழம் நன்றாக இருக்கிறதா என்று பார்த்து வாங்குங்கள்" என்றான்.

அடுத்திருந்தவர் அவனைப் பார்த்து, "சொல்லிலே பயன் இருக்கிறது அப்பா! மாங்காய்ப்பழம் என்றால் பாதி காயாகவும் பாதி பழமாகவும் இருக்கிறது என்று வாங்குவோர் எண்ணிக்கொள்வார்கள். அரைப்பழம் ஆகையால் புளிப்பாக இருக்கும் என்று வாங்கமாட்டார்கள். மாம்பழம் என்றால் நன்றாகப் பழுத்த பழம் என்று தானே தெரிந்துவிடும்" என்றார்.

"அப்படியா? இனிமேல் ஆகட்டும் சாமி" என்றான் பழம் விற்பவன்.

உண்மையை நேரே சொல்லித் திருத்த முயன்றவர் தோற்றார். பொய்கலந்து வளைத்துச் சொன்னவர் வென்றார். நீதிநூல்களைவிடக் காவியங்களும் கதைகளும் மிகுதியாகப் பயன் தருவதற்கு இதுதான் காரணம் போலும்!

தண்ணறுஞ் சோலைகளும் இன்சுவைக் கனிகளும் குறைந்த ஒரு கிராமப் பகுதியில் வாழும் ஏழைக்குடும்பங்களைச் சார்ந்தவன் பழம் விற்றவன். வறுமையின் கொடுமையால் அறிவு வளர்ச்சிக்கும் வழியற்ற நிலையில் உள்ளவன் அவன். திங்கள்தோறும் இருபத்தேழுநாட்கள் கேழ்வரகுக் கூழும் களியும் அமாவாசையாகிய ஒருநாள்மட்டும் (அதுவும் இயன்றால்தான்) அரிசிச்சோறும் உணவாகக் கொள்பவனிடம் அறிவுநுட்பத்தை எதிர்பார்க்கமுடியுமோ? அதனால் தான் திண்ணையில் இருந்தவர்களின் புன்னகையின் பொருளையும் குறிப்பால் உணரமுடியாமல் திகைத்தான்.

அவன் வாழைக்காய்ப் பழம், பலாக்காய்ப் பழம் என்று சொல்வதில்லை என்பது உண்மைதான். அதற்குக்

காரணம் உண்டு. அவன் வாழைக்காயையும் நாள்தோறும் காண்கிருன்; வாழைப்பழத்தையும் நாள்தோறும் காண்கிருன். அதனுல் காய்க்கும் பழத்திற்கும் வேறுபாடு செய்து தனித்தனியே சொல்கிருன். பலாப்பழத்தை மட்டுமே காண்கிருன்; பலாமரம் இல்லாத பகுதியாகையால், பலாக்காய் என்னும் சொல் அவன் வாயில் பிறப்பதற்கே காரணம் இல்லை. வளமான வெளியூர்களுக்குச் செல்லும்போது வழியில் எங்கேனும் பலாமரத்தில் காய்கள் தொங்குவதைக் காண்பாஞயின், 'அதோ பலாப்பழம் தொங்குகிறது' என்றுதான் சொல்லுவான். அவனுடைய அனுபவத்தின் பயன் அது!

வாழையின் காயும் நாள்தோறும் காண்கிருன்; பழமும் நாள்தோறும் காண்கிருன். பலாவின் பழம் மட்டுமே காண்கிருன். ஆகையால் அவற்றைப் பொறுத்தவரையில் 'காய்ப்பழம்' என்று சொல்வதற்கு இடம் இல்லாமற் போகிறது. ஆயின், மாவைப் பொறுத்தவரையில் அவன் மிகுதியாகக் காண்பது காய்; என்ருே ஒருநாள் உண்பதும் அந்தக் காய் அரைகுறையாய்ப் பழுத்த பழமே. தான் உண்ண முடியாமல், வயிறு வளர்க்க அவன் வாங்கி விற்பது பழுத்த ஒட்டுமாம்பழம். ஆகவே அவன்நினைவில் ஆழப் பதிந்துள்ளது மாங்காய். அதன்மேல் வயிற்றுப் பிழைப்புக்காக ஒட்டி நிற்பது பழம். அதனுல் மாங்காய்ப் பழம் என்கிருன். அவன் ஒருவன்மட்டும் அல்லாமல், அந்தச் சூழலில் உள்ளவர்கள் பலரும் அதே நிலையில் வாழ்ந்து அவ்வாறே சொல்கின்றனர்.

இவ்வாறு தொடர்கள் அமைவதற்குத் தொடக்கத்தில் மனத்தில் தோன்றிய எண்ணங்களின் போக்கே காரணம் ஆகும். மிக்கும் குறைந்தும் தோன்றும் எண்ணங்களுக்கு ஏற்பச் சொற்கள் முன்னும் பின்னும் சேர்ந்து அமையும்.

தொடர்களின் பிறப்புக்குக் காரணம் இது. ஒருமுறை தோன்றி வழங்கியபிறகு, மற்றவர்கள் கண்மூடிப் பின்பற்றிப் பேசத் தொடங்கிவிட்டால், காரணம் மறைந்துபோகும்; காரணம் இல்லாமலே குறியீடுகள் போல் அவை வழங்கி வரும்.

நம்மிடமிருந்து ஒருவர் விடைபெறும்போது, "போய் வா" என்கிறோம். இதைச் சொல்லும்போது, அவர் போன இடத்தி லிருந்து திரும்பிவரவேண்டும் என்பது நாம் எண்ணுவதே இல்லை. 'வா' என்ற சொல்லின் பொருளையே மறந்துவிடுகிறோம். ஆனால் தொடக்கத்தில் அதைப் பொருளுணர்ந்தே சொல்லினர்; போகிறவர் திரும்பிவர வேண்டும் என்ற ஆவலுடனேயே சொல்லியிருக்க வேண்டும். பிறகு அந்தப் பொருள் மறைந்தது.

ஆங்கிலத்தில் பிரியும்போது goodbye என்று சொல்வது வழக்கம். 'உனக்குக் கடவுள்துணை இருக்க' (god be with you) என்பதே அதன் பொருள். தொடக்கத்தில் அந்தக் கருத்துடனேயே அதைக் கூறிவந்தனர். நாளடைவில் அது அந்தப் பொருளை இழந்து 'பிரிக' என்னும் பொருளைமட்டும் அன்புடன் உணர்த்துகிறது. Breakfast என்ற ஆங்கிலச் சொல்லுக்குக் 'காலையுணவு' என்பது இன்றைய பொருள். தொடக்கத்தில் பட்டினி நிறுத்தம் (இரவில் உண்ணுமல் இருந்த பட்டினியைக் காலையில் உண்டு தீர்த்தல்) என்ற பொருள் இருந்து பிறகு மறைந்தது.

ஆகவே, தொடக்கத்தில் இருந்த பொருள் முதலில் பேசிய மக்களின் எண்ணப்போக்கையே காட்டுவதாகும். 'புகையிலைச் செடி' என்பதற்குத் தொடக்கத்தில் புகைக்கப் பயன்படும் இலையைத் தரும் செடி என்று பொருள் இருந்தது. காரணம் என்ன எனின், அக்காலத்து மக்கள் முதலில் அதைக் கண்டு அறிந்தபோதும், நட்டு வளர்த்தபோதும்

புகைக்குப் பயன்படும் இலை என்ற எண்ணத்துடனேயே இருந்தனர். இன்று 'புகையிலைச்செடி' என்று சொல்பவரின் உள்ளத்தில் புகையைப் பற்றிய கருத்தே இல்லாமல் 'துளசிச் செடி' என்பதுபோல் ஒருவகைச் செடி என்ற எண்ணம் மட்டுமே உள்ளது. 'துளசியிலைச் செடி' என்று ஒருவரும் சொல்லாததற்குக் காரணம், அதை முதலில் இந்த நாட்டில் கண்ட மக்கள் செடியாகவே கண்டு பெயர் வைத்ததே ஆகும். செடிக்குத் துளசி என்று முன்னே பெயர் வைத்துப் பிறகே அதன் இலையைத் துளசி இலை என்றனர். ஆகவே துளசியிலைச் செடி என்பது, கைவிரல் நகம் என்று கூறாமல், விரல் நகக்கை என்று கூறுவதுபோல் பொருந்தாமல் போகிறது.

மாங்காய்ப்பழம் என்பதை இவ்வாறு ஆராய்ந்தால், புகையிலைசசெடி என்பதுபோல் பொருந்துவதாகத் தோன்றுகிறது. முன்னே காயைக் கண்டு பழத்தைக் கண்டவனுடைய மனம் படைத்த சொல் என்று காரணம் காட்டலாம்போல் தோன்றுகிறது. ஆயின், மாங்காய்மரம் என்று ஒருவன் சொல்லும்போது அவனுடைய அறியாமையே புலப்படுகிறது. ஏன் எனின், காயைக் கண்டு பழத்தைக் கண்டான் என்று அமைதி கூறியதுபோல், காயைக் கண்டு மரத்தைக் கண்டான் என்று கூறல் இயலாது. தமிழ்நாட்டில் மாமரம் இல்லாத ஊர் இல்லை ; வளம் குறைந்த பாலையிலும் வளரும் மரம் இது ; தொன்றுதொட்டே தமிழ்மக்களின் வாழ்வில் கலந்துள்ள மரம் அது ; தமிழர் போற்றும் மாமை என்ற நிறத்திற்குப் பெயர் அளித்தும், முக்கனியுள் ஒன்றுக இனிமை அளித்தும் நெடுங்காலமாக விளங்கிவருவது மா. ஆகவே காயைக் கண்டு மரத்தைக் கண்டான் என்று கூறி 'மாங்காய்மரம்' என்ற தவறுன தொடருக்கு அமைதிகூற முடியாது.

தென்னைமரங்களோடு தொடர்பு இல்லாமல் வளர்ந்த சிலர், தேங்காயை நன்கு அறிந்த காரணத்தால், 'தேங்காய் மரம்' என்று மரத்திற்குப் பெயர் வழங்குகின்றனர். இதுவும் தவறே ஆகும். 'தேங்காய் ஓலை' என்று கூறிக் காய்க்கும் ஓலைக்கும் தொடர்புபடுத்தல் பெருந்தவறு ஆகும். 'மாங் காய்மரம்' என்பதும் அத்தகைய தவறே.

'புகையிலைச் செடி' என்னும்போது, அந்தச் செடிக்கு வேறு பெயர் தமிழில் இல்லை; 'புகைச் செடி' என்று இலையை நீக்கிச் சொல்லலும் இயலாது. ஆயின், 'மாங்காய் மரம்' என்னும்போது, மா என்ற மரத்தின் பெயர் அதிலேயே உள்ளது; உள்ளதை உணர்ந்து பேசத் தெரியாத அறியாமையும் உள்ளது.

உள்ள சொல்லை உணர்ந்து வழங்கத் தெரியாத அறியா மையால் இவ்வாறு சில தவறான தொடர்கள் எல்லா மொழி யிலும் பிறப்பது உண்டு. அவை விரைவில் அழிந்து போகின்றன. ஒரு சில தவறான தொடர்கள் அழியாமல் நிலைத்துவிடுகின்றன. மக்கள் பேசும் மொழியிலும் குறை உண்டு என்பதை எடுத்துக்காட்டுவனபோல் அவை இலக் கியத்திலும் இடம் பெற்று நிற்கின்றன.*

தேங்காயெண்ணெய், கடலையெண்ணெய் என்பன அத்தகைய தவறான தொடர்கள்.

நெய் என்பது பொதுவாக நயப்பான நீர்ப்பொருளுக் குப் (oil) பெயர். பசுவின் பாலிலிருந்து அது எடுக்கப்

*Our words are too often signs for crude and hasty, for indefinite and indefinable generalisations......For the most part, we are loose thinkers and loose talkers, misled into error in an infinity of cases by our ignorance of the terms we glibly use.
—W.D. Whitney, The Life and Growth of Language, p. 34.

பட்டால் பசு நெய் எனப்படும். எருமையின் பாலிலிருந்து எடுக்கப்பட்டது எருமை நெய் எனப்படும். எள்ளிலிருந்து எடுக்கப்பட்டது எள்நெய் - எண்ணெய் - எனப்படும். அவ்வாறே தேங்காயிலிருந்து எடுக்கப்பட்டது தேங்காய்நெய் என்றும், கடலையிலிருந்து எடுக்கப்பட்டது கடலைநெய் என்றும் கூறப்படவேண்டும். இன்று வழங்கும் தவறான தொடர்களுக்கு உள்ளபடி பொருள் கண்டால், தேங்காயிலிருந்தும் எள்ளிலிருநதும் கலந்தெடுத்த நெய் தேங்காயெண்ணெய் என்றும், கடலையிலிருந்தும் எள்ளிலிருந்தும் கலந்தெடுத்த நெய் கடலையெண்ணெய் என்றும் கொள்ள வேண்டும். ஆயின் இத்தகைய கலப்பு நெய் எடுப்பதும் இல்லை ; வேறு வகையாக எடுக்கப்படும் கலப்புநெய்க்கு இத்தகைய பெயர்கள் வழங்குவதும் இல்லை.

'மாங்காய்ப் பழம்' 'மாங்காய் மரம்' என்னும் தொடர்களில் 'காய்' தவறாக உள்ளதுபோலவே, 'தேங்காயெண்ணெய்' 'கடலை யெண்ணெய்' என்னும் தொடர்களில் 'எள்' தவறாக உள்ளது. ஆனால் முன்னைய தொடர்கள் எள்ளி நகையாடப்படுகின்றன ; அவற்றை வழங்குவோரின் அறியாமையும் தவறும் தெளிவாகத் தெரிகின்றன. பின்னைய தொடர்கள் தடையின்றிப் பேசப்படுகின்றன, எழுதப்படுகின்றன ; அவற்றில் தவறு இருப்பதாகவும் உணரப்படுவதில்லை. காரணம் என்ன ?

மாங்காய் மரம் முதலியவற்றை வழங்கும் மக்கள் கல்வியறிவு இல்லாதவர்கள் ; இவர்கள் செய்யும் தவறு இன்னும் பெரும்பாலோரின் தவறு ஆகவில்லை. சிறுபான்மையோரின் தவறாகவே செல்வாக்கு இல்லாமல் உள்ளது.

கடலையெண்ணெய் முதலியவற்றைக் கற்ற மக்களும் வழங்குகின்றனர். இந்தத் தவறு பெரும்பாலோரின் தவறு ஆகிவிட்டது ; ஆகையால் செல்வாக்குப் பெற்றுவிட்டது.

இன்று செய்யத் தக்கது யாது? கடைக்குச் சென்று 'தேங்காய்நெய் கொடு', 'கடலைநெய் கொடு' என்று கேட்டால், கடைக்காரர் எள்ளி நகையாடுவர்; வழிப் போக்கரும் எள்ளி நகையாடுவர்; பித்தன் என்று பலரும் பழிக்கும் நிலை நேரும்; வாழ்க்கையில் கடமைகளைச் செய்ய இயலாமல் இடர்ப்பட நேரும். ஏன் இந்தத் தொல்லை? பெரும்பாலோர் செய்யும் தவறுகளை நாமும் செய்வோம்; கூடியவரையில் அவர்கள் பேசும் தொடர்களையே நாமும் பேசுவோம். ஊருடன் கூடிவாழ்வதே நம் கடமை.

# செவிச் செல்வம்

புதிதாகத் தமிழ் கற்றுக்கொள்பவர் யாராவது ஆண்மாடு, பெண்மாடு என்று சொன்னால் சிரிப்போம். எருது, பசு என்று சொல்வதற்கும் தெரியவில்லையே என்று அவருடைய அறியாமையை எள்ளி நகையாடுவோம்.

தருக்க முறைப்படி பார்த்தால் இவ்வாறு சொல்வதில் ஒரு குற்றமும் இல்லை. திணை பால் இலக்கணத்தின்படி பார்த்தாலும இவற்றில் ஒரு குற்றமும் இல்லை. ஆண், பெண், மாடு ஆகிய எல்லாம் தூய தமிழ்சசொற்கள். ஆண்புலி பெண்புலி என்பனபோல் இவை தெளிவாகவும் அமைந்துள்ளன. இவ்வளவு காரணம் கண்ட பிறகும், ஆண்மாடு பெண்மாடு என்ற தொடர்களைச் சொல்லிக் கேட்டால், குற்றம் குற்றமே என்று நம் செவி சொல்கிறது.

ஆங்கிலத்தில் ஒரு சொல் அல்லது சொற்றொடர் பிழை உள்ளது போல் தோன்றி, அந்தப் பிழை இன்னது என்று தெளிவாக உணர்த்த முடியாத நிலையில் இருந்தால், 'அது நன்றாக ஒலிக்கவில்லை' (it does not sound well) என்று செவியின்மீது பழி சுமத்துவர். தமிழிலும் ஒருகால் - ஒருக்கால், எத்தனை பெருமை - எத்தனைப் பெருமை (எத்துணைப் பெருமை), வகுப்புகள் - வகுப்புக்கள், செய்யுள்கள் - செய்யுட்கள், மணியகாரர் - மணியக்காரர், குருவிகாரர் - குருவிக்காரர், மேல்படி - மேற்படி (மேலே ஏறும் படி) முதலானவற்றில் சந்தி பற்றிய தடுமாற்றங்கள் வரும்போது, சிலர் இலக்கணத்தின் துணையை நாட, வேறு சிலர் செவியின் துணையை நாடுவதும் காணலாம். ஆகவே, செவியின் தீர்ப்பை எளிதில் புறக்கணித்தல் இயலாது.

நகரத்து இளைஞர் ஒருவர் கிராமத்திற்குச் சென்றார். அங்கே இரண்டு சேவல் சண்டை போட, அவற்றைச் சுற்றிச் சிலர் வேடிக்கை பார்த்துக்கொண் டிருந்தனர். அந்தக் காட்சியைப் பார்த்தவாறே நின்றிருந்த இளைஞர், பக்கத்தில் திரும்பி, அங்கிருந்தவரைப் பார்த்து, "இவை இரண்டும் ஆண்கோழி. ஆண்கோழியும் பெண்கோழியும் சண்டை போட்டால் எது வெல்லும்?" என்றார். அவருக்கு ஏதோ விடை வந்தது. ஆனால் அவருடைய சொற்களைக் கேட்ட இளைஞன் ஒருவன் தன் நண்பர்களிடம் அவரைப் பற்றி எள்ளி நகையாடிக்கொண் டிருந்தான். "இவர் துரை, எங்கிருந்து வந்தாரோ, தெரியவில்லை. ஆண்கோழியாம், பெண்கோழியாம். கோழியும் மனிதரின் கணக்கில் சேர்ந்து விட்டதே. ஆணும், பெண்ணும். துரை இப்போதுதான் தமிழ் கற்றுக்கொள்கிறார்போல் தெரிகிறது" என்று சொல்லிச் சொல்லிச் சிரித்தான்.

நகரத்து இளைஞருக்கு ஆண்கோழி பெண்கோழி என்னும் சொற்கள் குற்றமற்றவைகளாக உள்ளன. அவைகளை கிராமத்தாருக்கு வழுவாகத் தோன்றுகின்றன. கிராமத்தில் சேவல், பெட்டை என்பார்கள்; அல்லது, சேவற்கோழி, பெட்டைக்கோழி என்று கூறுவார்கள். இவரைப்போல் ஆண்கோழி, பெண்கோழி என்று சொல்ல மாட்டார்கள்.

அந்தக் கிராமத்து இளைஞன் எப்போதாவது ஒருநாள் யானையைப் பார்க்க நேர்ந்தால், அது ஆண்யானை அல்லது பெண்யானை என்று சொல்வானே தவிர, வேறு வகையாகச் சொல்லமாட்டான். ஆண்யானை பெண்யானை என்ற தொடர்களைத் தொல்காப்பியக் காலத்துத் தமிழன் கேட்டால் இரு

செவியும் பொத்திக்கொள்வான். அவன் களிறு அல்லது பிடி என்று சொல்வானே தவிர, இவ்வாறு ஆண்யானை பெண் யானை என்று சொல்லமாட்டான்.

இவை போன்ற தொடர்களில் குற்றம் உள்ளது என்று சொல்லமுடிகிறதே தவிர, குற்றம் இன்னது என்று சொல்ல முடிவதில்லை.

நகரத்து இளைஞன்செவிக்கு வழுவாகத் தோன்றுபவை, புதிதாகத் தமிழ் கற்பவர்க்கு அவ்வாறு தோன்றவில்லை. நகரத்து இளைஞன் கூறுவன கிராமத்து இளைஞன் செவிக்கு வழுவாக ஒலிக்கின்றன. இக்காலத்துக் கிராம இளைஞன் கூறுவன தொல்காப்பியக் காலத்துத் தமிழன் வெறுக்கத் தக்கவையாக உள்ளன. காலமும் இடமும் தமிழில் ஏதோ மாறுதல்கள் செய்கின்றன. ஆனால் எல்லாக் காலத்திலும் எல்லா இடத்திலும் கரும்பு இனிக்கிறது; வேம்பு கைக்கிறது. காலமும் இடமும் எவ்வளவு மாறினும் இவற்றின் சுவை ஒரே வகையாய் இருக்கக் காண்கிறோம். ஆனால் சில தமிழ்ச்சொற்களின் சுவை நகரத்தார்க்கு ஒரு வகையாகவும் கிராமத்தார்க்கு ஒருவகையாகவும், பழங் காலத்தார்க்கு ஒரு வகையாகவும் இக்காலத்தார்க்கு மற்றொரு வகையாகவும் உள்ளது.

தொல்காப்பியனார் தம் காலத்தில் வழங்கிய தமிழை நன்கு ஆராய்ந்து, இன்ன இன்ன சொற்கள் இவ்விவ் விடத்திற்கு உரியன என விளக்கியுள்ளார்.

ஏறும் ஏற்றையும் ஒருத்தலும் களிறும்
சேவும் சேவலும் இரலையும் கலையும்
மோத்தையும் தகரும் உதளும் அப்பரும்

போத்தும் கண்டியும் கடுவனும் பிறவும்
யாத்த ஆண்பாற் பெயரென மொழிப.[1]

என்றும்,

பேடையும் பெடையும் பெட்டையும் பெண்ணும்
மூடும் நாகும் கடமையும் அளகும்
மந்தியும் பாட்டியும் பிணையும் பிணவும்
அந்தம் சான்ற பிடியொடு பெண்ணே.[2]

என்றும் விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் உரிய ஆண்பாற்பெயர்களையும் பெண்பாற்பெயர்களையும் எடுத்துரைத்துள்ளார்.

வேழக் குரித்தே விதந்துகளி றெனல்
கேழற் கண்ணும் கடிவரை யின்றே.[3]

முதலிய விதிகளால் இன்ன விலங்கிற்கும் இன்ன பறவைக்கும் இன்ன பெயர்கள் பாலுணர்தத வழங்கும் என்றும் தனித்தனியே கூறியுள்ளார்.

ஏறக்குறைய நாலாயிரம் ஆண்டுகட்குமுன் எழுதப்பட்ட விதிகள் இவை. இவற்றில் பொதுப்பெயரும் காண்கிறோம்; ஆணுக்கு வேறு, பெண்ணுக்கு வேறாக அமைந்துள்ள சிறப்புப் பெயர்களையும் காண்கிறோம். தமிழ்மக்கள் நெடுங்காலமாகவே நாகரிக வாழ்வு வாழ்நதவர்கள் என்பதற்கும், பல்லாயிர ஆண்டுகட்கு முன்னமே நுண்கருத்துக்களை எண்ணிப் பழகியவர்கள் என்பதற்கும் இது ஒரு சான்று ஆகும்.

---

1. தொல்காப்பியம், பொருள். 557.
2. ஷை 558
3. ஷை 589.

நாகரிகம் குறைந்த மக்கள் பேசும் மொழிகளில், சிறப்புப்பெயர்கள் பல உள்ளன ; பொதுப் பெயர்களைக் காண்பது அரிதாக உள்ளது.

சில பழங்குடி மக்களின் மொழியில், கழுவுதல் என்பதை உணர்த்தப் பொதுச்சொல் இல்லை. முகம் கழுவல், கை கழுவல் முதலியவற்றிற்கு வெவ்வேறு சிறப்புப்பெயர்கள் உண்டு ; ஆனால் கழுவுதல் என்பதற்கு நேரான பொதுச் சொல் இல்லை.* சூலு மொழியில் வெண்ணிறப் பசுவுக்கு ஒரு பெயரும் செந்நிறப் பசுவுக்கு ஒரு பெயரும் உண்டு ; ஆனால் பொதுவாகப் பசு என்பதை உணர்த்தும் பொதுப் பெயர் இல்லை.† தமிழ்மொழியில் பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்னரே, சிறப்புப்பெயர்களுடன் பொதுப்பெயர்களும் இருந்துவந்தன என்று தொல்காப்பியம் தெளிவுசெய்கின்றது.

டாஸ்மேனியப் பழங்குடிமக்களின் மொழியில் ஒவ்வொரு வகை மரத்திற்கும் ஒவ்வொரு பெயர் (சிறப்புப் பெயர்) உண்டு.‡ ஆனால் மரங்கள் எல்லாவற்றிற்கும் பொதுவான பெயர் இல்லை தமிழில் மா, பலா, நாகு, புன்கு, ஆல், அரசு என்று சிறப்புப் பெயர்களும உள்ளன ; மரம் என்னும் பொதுப் பெயரும் உள்ளது.

> புறக்கா ழனவே புல்லென மொழிப ;
> அகக்கா ழனவே மரமென மொழிப.[1]

இவ்வாறு பொதுப்பெயரும் சிறப்புப்பெயரும் அமைந்த ஓரறிவுயிர்களைப் பழந்தமிழர் புறக்காழன அகக்காழன என்று பாகுபாடு செய்து, முன்னையவற்றைப் புல் என்றும் பின்னையவற்றை மரம் என்றும் வழங்கியுள்ளனர். இதுவும்

---

*H. D. Naylor, Evolution of Language, p. 25.

†H. Sweet, The Practical Study of Languages, p. 60.

‡Ibid. 1. தொல்காப்பியம், பொருள். 640.

ஒரு சிறப்பே ஆகும். ஆனால் பிற்காலத்தில் இப்பாகுபாடு தேவையில்லாமற் போகவே, தென்னை பனை முதலாய புல் வகைகளையும் மரம் என்றே சொல்வது வழக்கமாயிற்று. தொல்காப்பிய இலக்கணப்படி தென்னைமரம் பனைமரம் ஈச்சமரம் என்ற தொடர்கள் மரபுவழு வாகும். இக்காலத்தில் இவையும் மரபே ஆயின.

ஓரறிவுயிர்களைப் புல் என்றும் மரம் என்றும் பாகுபாடு செய்ததோடு அமையாமல், அவற்றின் பல்வேறு உறுப்புக் களுக்கும் வெவ்வேறு பெயர்களைத் தமிழர் வழங்கிவந்தனர். ஆலமரத்தில் இலை என்று கூறுவதுபோல், பனையிலை என்று கூறல் பொருந்தவில்லை ; பனையோலை என்றே இன்றும் தமிழில் வழங்குவது காணலாம். இத்தகைய பாகுபாடுகள் பழந்தமிழில் மிகத் தெளிவாக இருந்தன என்பதைத் தொல் காப்பியனார் கூறுவனவற்றால் உணரலாம்.

> தோடே மடலே ஓலை என்றா
> ஏடே இதழே பாளை என்றா
> ஈர்க்கே குலையென நேர்ந்தன பிறவும்
> புல்லொடு வருமெனச் சொல்லினர் புலவர்.[1]

இவை புல்வகையைச் சார்ந்த உறுப்புக்களாம்.

> இலையே தளிரே முறியே தோடே
> சினையே குழையே பூவே அரும்பே
> நனையுள் ளுறுத்த அனையவை எல்லாம்
> மரனொடு வரூஉம் கிளவி என்ப.[2]

இவை மரவகையைச் சார்ந்த உறுப்புக்களாம்.

விலங்கு பறவைகளின் இளமைப் பெயர்களிலும் இத் தகைய நுண்ணிய வேறுபாடுகள் பழந்தமிழில் இருந்து

1 தொல்காப்பியம், பொருள். 641.
2. ௸ 642.

வந்தன. இன்ன பறவைக்கும் இன்ன விலங்கிற்கும் இன்ன இளமைச் சொற்கள் உரியன என்று தொல்காப்பியனார் வரையறுத்துள்ளார். பறவைகளுக்குப் பார்ப்பு, . பிள்ளை என்பவை வழங்குமாம். இக்காலத்தில் 'குஞ்சு' என்ற சொல் (கோழிக்குஞ்சு, காக்கைக்குஞ்சு முதலியனவாகப்) பெருவழக்காக உள்ளது. மூங்கா வெருகு எலி அணில் என்பவற்றிற்குக் குட்டி என்னும் சொல் வழங்கியது. நாய் பன்றி புலி முயல் நரி ஆகியவற்றிற்குக் குருளை என்னும் சொல்லும் குட்டி என்ற சொல்லும் உரியவை. ஆடு குதிரை மான் ஆகியவற்றிற்கு மறி என்னும் சொல் வழங்கியது. யானை குதிரை கழுதை கடமை எருமை முதலியவற்றிற்குக் கன்று என்ற சொல வழங்கியது.

பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை.[1]

மூங்கா வெருகெலி மூவரி அணிலொடு
ஆங்கவை நான்கும் குட்டிக்கு உரிய.[2]

நாயே பன்றி புலிமுயல் நான்கும்
ஆயுங் காலைக் குருளை என்ப.[3]
நரியும் அற்றே நாடினர் கொளினே.[4]

யாடும் குதிரையும் நவ்வியும் உழையும்
ஓடும் புல்வாய் உளப்பட மறியே.[5]

யானையும் குதிரையும் கழுதையும் கடமையும்
ஆனோ டைந்தும் கன்றெனற்கு உரிய.[6]

---

1. தொல்காப்பியம், பொருள். 559.
2. ௸ 561.
3. ௸ 563.
4. ௸ 564.
5 ௸ 567.
6. ௸ 570.

எருமையும் மரையும் வரையார் ஆண்டே.[1]

இத்தகைய நுண்ணிய வேறுபாடுகள் எல்லாம் இன்று மறைந்து, பொருளிழந்த பொதுச் சொற்கள் மட்டுமே வழங்குகின்றன. 'குட்டி' என்ற சொல் எல்லா விலங்குகளுக்கும் இளமைப் பெயராக வழங்குகிறது. கண் திறவாமல் பிறக்கும் பூனைக்குட்டி நாய்க்குட்டியோடு, கண் திறந்து பிறக்கும் யானைக்கன்றும் ஒருங்கு எண்ணப் படுகிறது; யானைக்குட்டி என்று சொல்லப்படுகிறது கழுதைக்குட்டி, குதிரைக்குட்டி என்பனவும் அவ்வாறே வழக்கில் உள்ளன. பசுக்குட்டி மாட்டுக்குட்டி என்று சொல்வார் இல்லை; ஆனால் கன்று என்னும் சொல்லுடன் காரணமில்லாமல் குட்டி சேர்த்து, கன்றுகுட்டி என்று சொல்கின்றனர்.

குட்டி, குருளை என்னும் சொற்கள் குருடு என்னும் சொல்லோடு ஒத்த பிறப்பு உடையன. பிறக்கும்போது கண் திறவாத விலங்குகளுக்கு மட்டுமே இப்பெயர்கள் வழங்கி வந்திருக்கின்றன. இன்று இத்தகைய நுண்ணிய பொருளுணர்ச்சி மறைந்து, குட்டி என்பது விலங்குகள் எல்லாவற்றிற்கும் பொதுவான இளமைப் பெயராக வழங்குகிறது.

ஓரறிவுயிர்களையும் பறவைகளையும் விலங்குகளையும் அறிவியலுக்குப் பொருந்தியவகையில் பாகுபாடு செய்து, அப் பாகுபாட்டிற்கு ஏற்பப் பெயர்களையும் அமைத்து முன்னோர்கள் வழங்கியிருக்க, இக்காலத்தில் அவற்றை எல்லாம் விட்டுச் சில சொற்களைமட்டும் எல்லாவற்றிற்கும் பொதுவாகக் கொண்டு வழங்குகின்றனர். இது பொருந்துமா?

கிராமங்களில் சில வீடுகளில் தூய்மையும் அழகும் மிகுந்திருக்கும்; முற்றத்தில் நல்ல கோலங்கள் இட்டு

1. தொல்காப்பியம், பொருள், 571.

அழகுபடுத்தியிருப்பர். வேறு சில வீடுகளில் தூய்மையும் அழகும் குறைந்திருக்கும். முன்னைய வீடுகளில் உள்ள மகளிர் வீட்டை ஒழுங்குபடுத்தலும் சமைத்தலுமே தொழிலாக உள்ளவர்கள் ; ஆதலின் அவர்களுக்குக் கிடைக்கும் ஓய்வை அழகுபடுத்தலிலும் தூய்மையைக் காத்தலிலும் செலவிடுகின்றனர். பின்னைய வீடுகளில் உள்ள மகளிர் வீட்டுவேலைகளோடு காடுகழனிகளில் உழைக்கும் பொறுப்பும் மேற்கொண்டவர்கள் ; அவர்களின் முயற்சியும் காலமும் காடுகழனிகளிலேயே பெரும்பாலும் செலவாவதால், வீடுகளில் சமைக்கவே நேரமின்றி வருந்துகின்றனர் ; ஆதலின் இயன்ற அளவிற்கே அவர்களால் தூய்மையையும் அழகையும் காக்க முடிகிறது. வீட்டைக் காத்தலில் மட்டும் அல்லாமல், தம்மைத் தாம் புனைந்துகொள்வதிலும் இதே நிலையைக் காணலாம்.

பழங்காலத் தமிழர்க்கும் இக்காலத் தமிழர்க்கும் மொழியைப் பொறுத்தவரையில் இத்தகைய வேறுபாடு உள்ளது எனலாம். பழங்காலத் தமிழர்க்கு வாழ்வில் இருந்த அமைதி மிகுதி ; வெளியுலகச் செய்திகள் குறைவு; பலதுறைகளில் அறிவை வளர்க்கும் வாய்ப்புக் குறைவு ; தாய்மொழியில் கருத்தைச் செலுத்த ஓய்வு மிகுதி ; நினைவாற்றலும் மிகுதி. ஆதலின் அவர்கள் தாம் கொண்டிருந்த சில கருத்துககளுக்குச் சிறந்த சொற்களை அழகுபட அமைத்துக் கூறும் வாய்ப்புப் பெற்றிருந்தனர். ஒரு துறையிலேயே பலவகைப் பாகுபாடுகளுக்கு ஏற்பப் பல சொற்களை நினைவில் வைத்திருக்கவும் அவர்களால் முடிந்தது.

இக்காலத் தமிழர்க்கு வாழ்க்கையில் பரபரப்பு மிகுதியாக உள்ளது ; அமைதியாக எண்ணிக் கற்க முடிவதில்லை ; வெளியுலகச் செய்திகளும் மிகுதி ; அவற்றைக் கொண்டு வந்து திணிக்கும் செய்தித்தாள் வானொலி முதலியவற்றின்

செல்வாக்கும் மிகுதி ; பல மொழியாருடனும் பல துறை யினருடனும் கலந்து பழகும் கட்டாயம் உள்ளது ; தாய் மொழியில் கருத்தைச் செலுத்த ஓய்வு மிகக் குறைவு ; பல வற்றைக் கற்றுக் கற்று மறந்து பழகுவதால் நினைவாற்றலும் குறைவு. இவர்கள் தாம் கொண்டிருக்கும் கருத்துக் களை எவ்வாறேனும் பிறர்க்கு உணர்த்த விரைகின்றனர் ; அவற்றை அழகுபட அமைப்பது பற்றிக் கவலைப்படுவதே இல்லை. ஆகையால் வாழ்க்கை நடத்துவதற்கு இன்றியமை யாத சில துறைகளை மட்டும் நன்கு உணர்ந்து, மற்றத் துறைகளின் நுட்பங்களையும் பாகுபாடுகளையும் அவற்றை உணர்த்தும் சொற்களையும் புறக்கணிக்கின்றனர். என்றே எப்போதோ ஒருமுறை பேச்சில் வரக்கூடிய சிலவற்றைப் பற்றிக் கவலைப்படாமல், சில பொதுச்சொற்களைமட்டும் கொண்டு அவற்றை விளக்கிவிடுகின்றனர்.

இவ்வகையாக ஆராயின், கிராமத்தார்க்கு நகரத்தாரை விட ஓய்வும் அமைதியும் ஓரளவு மிகுதியாக இருப்பதால் தான், அவர்கள் சேவல் பேடை என்ற சிறப்புச் சொற்களை நினைவில் வைத்துப் பேச முடிகிறது என அறியலாம். நகரத்து இளைஞன், கோழி ஆண் பெண் என்ற சில பொதுச் சொற்களை மட்டும் வைத்துக்கொண்டே தன் கருத்தை உணர்த்த முயல்வதற்குக் காரணம், அவனுடைய நினைவில் பலசொற்கள் நிற்கக்கூடிய அளவிற்கு ஓய்வும் அமைதியும் இல்லாமையே ஆகும்.

ஆனால் அவனே, ஆண்மாடு பெண்மாடு என்று சொல்லாமல், எருது பசு என்று சிறப்புச் சொற்களை நினைவில் கொண்டு பேசுகின்றான். காரணம் என்ன ? கிராமத்தின் இளைஞனுக்கு யானைகளின் பழக்கம் இல்லை ; கோழிகளின் பழக்கம் உள்ளது. ஆதலின், களிறு பிடி என்னும் சிறப்புச் சொற்களை மறந்தபோதிலும், சேவல் பேடை என்னும்

சிறப்புச் சொற்களை மறக்கவில்லை. நகரத்து இளைஞனுக்குக் கோழியின் பழக்கம் இல்லை; தான் வளர்க்காவிட்டாலும் தெருவில் காலையும் மாலையும் காணும் பசுக்களின் பழக்கமும் எருதுகளின் பழக்கமும் மிகுதி. அதனால் அவனுக்குக் கோழி பற்றிய சிறப்புச் சொற்கள் நினைவில் நிற்காமல் போக, பசு எருது என்னும் சிறப்புச் சொற்கள்மட்டும் நினைவில் உள்ளன.

யானைக்குட்டி குதிரைக்குட்டி என்று சொல்ல முனைந்த தமிழர் மாட்டுக்குட்டி என்று சொல்லாத காரணமும் இதுவே. பசுவின்கன்று, எல்லாத் தமிழரும் பழகும் அள விற்குக் கிராமம் நகரம் எங்கும் உள்ளது. வாழ்வில் நெருங்கிய தொடர்பு இருப்பதால்தான் அதன் சிறப்புப் பெயரை மறவாமலிருக்கின்றனர்.

சிறப்புப் பெயர்கள் வாழவும் மறையவும் இவ்வளவு காரணம் இருக்க, இதை அறியாமல் புதிதாகத் தமிழ் கற்பவர் கூறும் ஆண்மாடு பெண்மாடு முதலிய சொற்களில் தருக்கக் குற்றமா, இலக்கணக் குற்றமா என்று ஆராய்வதில் பயன் என்ன?

நல்ல வெள்ளியா என்று அறிய விரும்புவோர் வெள்ளி நாணயத்தைத் தட்டிப் பார்த்து அறியலாம். உயர்ந்த பொன்னா என்று ஆராய விரும்புவோர் பொன்னைக் கட்டளைக்கல்லில் உரைத்துப் பார்க்கலாம். ஆனால் ஒரு சொல்லோ சொற்றொடரோ வழுவா வழாநிலையா என்று ஆராய்வதற்குத் தருக்கம் இலக்கணம் முதலியவற்றைமட்டும் நோக்குதல் போதாது; மொழியில் பழகித் தேர்ந்த செவியைக் கேட்டுப் பார்த்தல் வேண்டும்.

மொழித் துறை விந்தையானது; எந்தப் பொருத்தமும் இல்லாத சில சொற்களையும் சொற்றொடர்களையும் செவி ஏற்றுக்கொள்கிறது. கடலையெண்ணெயில் எள் கலக்காமை

யினால் தருக்க நூலின்படி குற்றமாகிறது. நக்கீரனார் என்பதில் ஒருமை உணர்த்தும் அன்விகுதியோடு பன்மை உணர்த்தும் ஆர்விகுதியும் சேர்வதால் (வந்தானார் என்பது போல்) இலக்கணமுறைப்படி குற்றமாகிறது. ஆனால் கடலை யெண்ணெய் நக்கீரனார் முதலியவற்றைத் தமிழ்ச்செவி ஏற்றுக்கொள்கிறது.

இத்தகைய இடர்ப்பாட்டை நீக்கும்பொருட்டு, இலக்கண நூலிலேயே 'மரபு' என்று ஒன்றைச் சேர்த்தனர் முன்னோர். சட்டங்களை விளக்க வரும் சட்ட நூலில் 'அந்தந்த நாட்டுப் பரம்பரை வழக்கம்' என்பது ஒன்று இடம்பெறுவது போன்றது இது.

மரபு என்பது என்ன ?

எப்பொருள் எச்சொலின் எவ்வாறு உயர்ந்தோர்
செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே.[1]

என்றார் பவணந்தியார்.

மரபே தானும்
நாற்சொல் இயலான் யாப்புவழிப் பட்டன.[2]

இருதிணை ஐம்பால் இயல்நெறி வழாஅமைத்
திரிபில் சொல்லொடு தழாஅல் வேண்டும்.[3]

என்றார் தொல்காப்பியனார்.

முன்னோர் எப்படிச் சொல்லினரோ அப்படி நாம் சொல்லினும் பொருந்தவில்லை. கபிலரும் கம்பரும் எப்படி எழுதினரோ அப்படி நாம் சொல்லினும் பொருந்தவில்லை. தென்னம்புல், ஆப்பி, மீன்நெய் என்று இன்று பேசுவதில்

1. நன்னூல், 388.
2. தொல்காப்பியம், பொருள். 392.
3. ௸ 644.

பயன் இல்லை; அவை செல்லாக் காசுபோல் உள்ளன. இன்று வாழும் உயர்ந்தோர்—அல்லது, கற்றவர்—பெரும் பாலோர் எவ்வாறு பேசுகின்றனரோ அவ்வாறு பேச வேண்டியுள்ளது. தருக்கம் இலக்கணம் இவற்றைக் கடந்தும் செவி அரசு புரிவதற்குக் காரணம் இதுவே. இன்று உள்ள பலர் பேசும் தமிழையும் பலமுறை கேட்டுக் கேட்டுப் பழகித் தேர்ந்த இந்தத் தேர்ச்சியே செவியின் செல்வமாக—மொழி வழங்குவதற்கு அடிப்படையாக—உள்ளது.

## ‘ வல்லான் வகுத்ததே வாய்க்கால் ’

ஆங்கிலமொழி உலகமொழியாக உள்ளது ; அறிவின் களஞ்சியமாக உள்ளது ; விரிவான வளர்ச்சி பெற்றுள்ளது. இத்தகைய மொழியில் சொற்களை எழுதும்முறை வேறாகவும் ஒலிக்கும்முறை வேறாகவும் உள்ளன. இது பெரிய குறை ஆகும்.

இங்கிலாந்தில் வெவ்வேறு மொழி பேசும் மக்கள் படையெடுத்துள்ளனர் ; குடியேறியுள்ளனர். அவர்களின் மொழிகள் அந்த நாட்டிலேயே ஆங்கிலத்தோடு கலக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. ஆங்கிலேயரும் தம் நாட்டை விட்டுப் பல்வேறு நாடுகளுக்குச் சென்று ஆட்சிபுரிந்தனர் ; குடியேறினர். அந்தந்த நாடுகளின் மொழிகளும் ஆங்கிலத்தோடு கலந்தன. இவ்வாறு சில நூற்றாண்டுகளாகவே ஆங்கிலத்தில் பிறமொழிச் சொற்கள் கலந்தவண்ணம் இருந்தன. ஆகவே பலவகை ஒலிகள் ஆங்கிலமொழியைத் தாக்கின எனலாம். அந்தந்த மொழிகளின் சொற்களை முதல் முதலில் ஆங்கிலத்தில் எழுதத் தொடங்கியவர் தம் மனம் போன போக்கில் எழுத்துக்களை எழுதினர். ஒலிக்கும் போதும் அவ்வாறே செய்தனர்.

ஐரோப்பிய மொழிகள் பலவும் ரோமன் எழுத்தாகிய ஒருவகை எழுத்தாலேயே எழுதப்பட்டுவருகின்றன. ஆனால் ஒவ்வொரு மொழியிலும் ஒலிமுறை வேறுபட்டு உள்ளது. எழுத்து ஒன்றாக இருக்கும் ; ஆனால் ஒரு மொழியில் அதன் ஒலி ஒருவகையாகவும் மற்றொருமொழியில் வேறொரு வகையாகவும் இருக்கும். (J) என்ற எழுத்துக்கு ஒரு மொழியில் ஜ என்ற ஒலியும் மற்றொரு மொழியில் ய என்ற ஒலியும்

உள்ளன. உயிரெழுத்துக்கள் ஒவ்வொன்றனுக்கும் ஒவ்வோர் ஒலி இருத்தல் நல்ல அமைப்பு. ஆயின், ஆங்கிலத்தில் சில உயிரெழுத்துக்களுக்கு மும்மூன்று அல்லது நந்நான்கு ஒலிகள் உள்ளன. வேறு சில உயிரெழுத்துக்களுக்கு எவ்வெட்டு அல்லது ஒவ்வொன்பது ஒலிகளும் உள்ளன.*

இவ்வாறு ஒலிகள் வேறுபட்ட ஐரோப்பிய மொழிகளி லிருந்து ஆங்கிலம் பல சொற்களைக் கடன் வாங்கியபோது, அந்தந்த மொழியில் உள்ளவாறே அவற்றை எழுதினர். ஆகை யால் எல்லா ஒலிவேறுபாடுகளும் ஆங்கிலத்தில் புகுந்தன. இக்காரணத்தால், ஆங்கிலம் என்னும் ஒரு மொழியிலேயே ஒவ்வோர் எழுத்துக்கும் பலவகை ஒலிகள் அமையலாயின.

மற்றொரு குறைக்கும் ஆங்கிலம் இடம் தந்தது. காலப் போக்கில் ஒரு சொல்லின் ஒலி மாறும்போது, அதன் எழுத் துக்களும் மாறுவது இயற்கை. தமிழில் இந்த நிலை உள்ளது. வேறுபல மொழிகளிலும் உள்ளது. ‘ யாறு ’ என்பது பழைய தமிழ்ச்சொல். அதை ஒலித்துவந்த மக்கள் நாளடை வில் ‘ ய ’ ஒலியை விட்டு ‘ ஆறு ’ என்றே ஒலித்தனர். உடனே, எழுதத் தொடங்கிய மக்களும் அதை ‘ ஆறு ’ என்று யகரத்தை விட்டே எழுதினர். ‘ சோழநாடு ’ என்ற சொல்லை நாளடைவில் ‘ சோணாடு ’ என்று ஒலிக்கத் தொடங்கினர்.† எழுதுவோரும் ‘ சோணாடு ’ என்றே

---

*That our written vowels have from three to nine values each, is owing to the fact that we have altered their original unitary sounds in so many different ways during the historic period.—W.D. Whitney, The Life and Growth of Language, p. 56.

†Men will not waste time and trouble in accurately ascertaining and imitating the pronunciation of their fathers.—R. G. Bhandarkar, Collected Works, p. 215.

ஒலிக்கு ஏற்ப மாற்றி எழுதத் தொடங்கினர். ஆங்கில மொழியாக இருந்தால், எழுதும்போது 'யாறு' 'சோழ நாடு' என்று எழுதும் முறையும், அதையே படிக்கும்போது 'ஆறு' 'சோணடு' என்று படிக்கும்முறையும் இருந் திருக்கும். தமிழிலும் அதனைப் போன்ற மற்ற மொழி களிலும் எழுதியவாறே படிக்கின்றனர். ஆங்கிலத்தில் எழுதியவாறு படிக்காமல், காலப்போக்கில் நேர்ந்த மாறுதல் களுக்கு ஏற்பப் படிக்கின்றனர்; சொல்லின் உருவத்தை மாற்றாமல் உச்சரிப்பைமட்டும் மாற்றும் வழக்கம் இம் மொழியில் உள்ளது.

தமிழிலும் எழுத்துத் தமிழுக்கும் பேச்சுத் தமிழுக்கும் வேறுபாடு உண்டு. 'ஒன்று' என்று எழுதுகிறோம். 'ஒண்ணு' என்று பேசுகிறோம். 'வைத்துவிட்டான்' என்று எழுது கிறோம். 'வச்சிட்டான்' என்று பேசுகிறோம். பேச்சில் உள்ள அவ்வளவு திரிபுகளையும் எழுத்தில் புகுத்துவ தில்லை. இரண்டும் தனித்தனியாக உள்ளன. ஆயின், ஆங்கிலத்தில் பேச்சுமொழி, எழுத்துமொழி இந்த இரண்டு மொழிமட்டும் இருப்பதாகக் கூறமுடியாது. எழுதியவற்றைப் படிக்கும் முறை வேறாக இருப்பதால், அதையும் சேர்த்து, கொச்சைப் பேச்சுமொழி, படிப்புமொழி, எழுத்துமொழி என்று மூன்று வகை இருப்பதாகக் கூறவேண்டும்.

Doubt, depot, weigh, honour, native என்னும் சொற்களில் b, t, g, h, e ஆகிய எழுத்துக்கள் ஒலிக் கப்படுவ தில்லை. But, put, tube ஆகிய சொற்களில் 'u' என்னும் ஓர் உயிரெழுத்திற்கே அ, உ, ஊ என்னும் வெவ்வேறு ஒலிகள் உள்ளன. c, g என்னும் மெய்களுக்கு வெவ்வேறு ஒலிகள் உள்ளன. இவற்றால் எழுத்துக் கூட்டிப் படிப்பவர்க்கு ஏற்படும் தடுமாற்றங்கள் பல. ஒரேவகையான ஒலியை உடைய வேறு வேறு சொற்கள் பல ஆங்கிலத்தில்

ஏற்படவும் இடமாயிற்று. know - no, knows - nose, knew - new, sun - son, went - vent, caught - cot, naught - not, meet - meat - mete, right - rite - write, முதலான பல சொற்கள் அவ்வாறு ஒலி வேறுபாடு இல்லாமல் உள்ளன.*

ஒலிமுறை எவ்வளவு மாறிவரினும், எழுத்துமுறை மாறாமல் காப்பாற்றப்படுவதால் நன்மை உண்டு என்று ஆங்கில அறிஞர் சிலர் கருதுகின்றனர். ஒவ்வொரு சொல்லுக்கும் பழைய எழுத்துமுறையே இன்றும் இருந்துவருதலால், ஒரு சொல் தொடக்கத்தில் எவ்வாறு அமைந்தது, எந்த மொழியி லிருந்து கடன் வாங்கப்பட்டது என்பன போன்ற உண்மைகளை அறிய முடிகின்றது என அவர்கள் கருதுகின் றனர். சொற்பிறப்புப் (etymology) பற்றிய ஆராய்ச்சி செய்வோர்க்கு அது பயனுள்ளதாக இருக்கலாம். அத்தகைய ஆராய்ச்சி செய்வோர் யார்? கோடியில் பத்து இருபது பேர் மட்டுமே ஆவர். அவ்வளவு சிறுதொகையினர்க்குப் பயன்படும் காரணத்திற்காக, பெருந்தொகையினரான மக்கள் பழைய சொல்வடிவங்களைக் காத்துக்கொண்டு இடர்ப்பட

*The unnatural state into which the language has been thrown by the wholesale adoption of learned words is further manifested by the fact that not a few of them have no fixed pronunciation; they are, in fact, eye-words that do not really exist in the language. Educated people freely write them and understand them when they see them written, but are more or less puzzled when they have to pronounce them... I doubt very much whether analogous waverings can be found in any other language. —Otto Jespersen, Growth and Structure of the English Language, p. 144.

வேண்டுமா ?* தவிர, சொற்பிறப்பு (etymology) ஆராய்ச்சியால், அந்தச் சிறுதொகையினருக்கேனும் பயன் உண்டோ ? ஒலியியல் (phonetics), சொல்லியல் (morphology), சொற்பொருளியல் (semantics), சொற்றொடரியல் (syntax) முதலியவற்றை ஆராய்வோர்க்கு மொழியைப் பற்றி ஒருவகைத் தெளிவு பிறக்கும் ; அத்தெளிவுகொண்டு அவர்கள் மற்றவர்களுக்கு வழிகாட்டலாம் ; உண்மைகளைக் கண்டு உணர்த்தலாம். ஆயின், சொற்பிறப்பு ஆராய்ச்சியால் என்றும் தெளிவுபெற முடிவதில்லை ; இன்றைய மொழியின் நிலையை அறிய அது எவ்வகையிலும் பயன்படுவதில்லை. ஒரு சொல்லின் பிறப்புக்கும் அதன் இன்றைய வாழ்வுக்கும் நெருங்கிய தொடர்பு இல்லை. பல்லை உடையது பல்லி என்ற மேற்போக்கான காரணம் அமைந்த சொல்லின் பிறப்புக்கும், கூரையிலும் சுவர்களிலும் வாழ்ந்து சிறு பூச்சிகளைத் தின்று டிக் டிக் என்னும் ஒலி எழுப்பி வாழும் உயிர் பல்லி என்ற இன்றைய பொருளுணர்ச்சிக்கும் தொடர்பு இல்லை. நாற்காலி என்று சொல்வோர், அவ்வாறு சொல்லும்போது அதற்கு உள்ள நான்கு கால்களை

---

*Of all the forms of linguistic conservatism, or purism, orthographic purism is the lowest and the easiest ; for it deals with the mere external shell or dress of a language, and many a one can make stout fight on behalf of the right spelling of a word whose opinion as to its pronunciation even, and yet more its meaning and nice application, would possess no authority or value whatever ; hence it is also the commonest, the least reasonable, and the most bigoted. When it claims to be asserting a principle, it is only defending by casuistry a prejudice.—W.D Whitney, Language and the Study of Language, p. 468.

நினைப்பதே இல்லை. நான்கு கால்களை உடையது என்ற நினைவு உடன் எழுமானால், பசு ஆடு முதலியவற்றின் நினைவும் தோன்றிப் பொருளுணர்ச்சியில் குழப்பமும் ஏற்படும். ஆகவே, அறிஞர் சிலர் கருதுவதுபோல், சொல்லின் பிறப்புக்காலத்துக் காரணம் மறக்கப்பட்டு, வெறுங் குறியீடாகப் பயன்பட்டால்தான், மொழி தெளிவாகவும் நடையில்லாமலும் கருத்தை உணர்த்த முடிகிறது. ஆகவே, பழைய வடிவங்களைக் காத்துவருவதில் பயன் இல்லை என்பர்.*

இவ்வாறு பழைய வடிவங்களைக் காத்து எழுத்துமுறை வேறாக வைத்திருத்தலால் இடர்ப்பாடுகளே பல எனக் கண்டோம். இத்தகைய இடர்ப்பாடுகளுக்கு இடம்தராமல் தமிழ் விளங்குவதற்குக் காரணம், ஒலிப்பதுபோல் எழுதும் முறை இருத்தலே ஆகும்.

பொம்மை என்னும் தமிழ்ச்சொல்லின் பழைய வடிவம் பொய்ம்மெய் என்பதே. அதன் பொருள் பொய்யான வடிவம் என்பது. குழந்தையைப் போன்ற வடிவம், ஆனால் குழந்தை அன்று, பொய்; அது குழந்தைப் பொம்மை எனப் படும். குரங்கைப் போன்ற வடிவம் (மெய்); ஆனால் குரங்கு அன்று, பொய்; அது குரங்குப் பொம்மை எனப்படும்.

ஆங்கில மொழியாக இருப்பின், பொய்ம்மெய் என்றே எழுதப்பட்டு, பொம்மை என்று ஒலிக்கப்பட் டிருக்கும். தமிழ்மக்கள் அதைப் பொய்ம்மெய் என்று திருத்தமாக

---

*Even if the irregularities of English orthography were of historical origin throughout - as, in fact, they are so only in part - it is not the business of writing to teach or suggest etymologies.—W.D. Whitney, Language and the Study of Language, p. 469.

ஒலிக்காமல், பொம்மை என்று திரித்து ஒலித்தமையால், ஒலிக்கு ஏற்பப் பொம்மை என்று எழுதிவிட்டனர். அதனால் தமிழர்கள் இழந்தது ஒன்றும் இல்லை. பொம்மை என்று ஒருவர் சொன்னவுடனே, தடை இல்லாமல் எல்லோரும் இன்னதைக் குறிக்கிறார் என்று உணர்ந்துகொள்ள முடிகிறது.

இவ்வாறே, நன்மை தீமை கருமை செம்மை அருமை எளிமை முதலிய பண்புப் பெயர்களும் தொடக்கத்தில் நன்மெய் தீமெய் கருமெய் செம்மெய் முதலியனவாக இருந்தன. நல்ல வடிவு, தீயவடிவு, கரிய வடிவு, சிவந்த வடிவு, அரிய வடிவு, எளிய வடிவு முதலிய பொருள்களில் அவை வழங்கின. அந்தப் பழைய பொருள்கள் இன்று வேண்டாதனவாக, கருத்து நுட்பத்திற்குத் தடையாக உள்ளன. மக்கள் பருப் பொருள்கள் பற்றிய அறிவே மிகுதியாகப் பெற்றிருந்த மிகப் பழங் காலத்திற்கு அவை ஏற்றவையாக இருந்திருக்கும். நுண்பொருள்கள் பற்றிய அறிவு வளர்ந்துள்ள இக்காலத்திற்கு அவை பொருந்தவில்லை. ஆகவே, ஆங்கிலம்போல் நன்மெய் தீமெய் முதலிய பழைய வடிவங்களைக் காக்காமல், ஒலி வேறுபாட்டிற் கேற்ப வடிவங்களைத் திரித்தது நன்மையாகவே உள்ளது. அவ்வாறு திரித்த காரணத்தால்தான், சிறிது வேறுபட்ட நுண்ணிய கருத்துக்களைத் தடையில்லாமல் உணர்த்தும் வளர்ச்சியை மொழி பெற முடிந்தது.*

---

*Before becoming a simple suffix, the full word gradually and imperceptibly loses its own meaning. In languages that form a practice of making compound words it is easy to see how this comes about......

In losing the meaning proper to them, the words which had become suffixes acquired an abstract value

ஆங்கில மொழியிலும் இவ்வாறு ஒரு சில தனிச் சொற்கள் தம் வடிவு திரிந்து மற்றச் சொற்களின் ஆக்கத் திற்குப் பயன்படுதல் உண்டு. Full என்ற முழுச்சொல் ful எனத் திரிந்து fearful, careful, wonderful முதலிய சொற்களை வாழ்விக்கிறது. loose என்ற சொல் less எனத் திரிந்து, fearless, careless, helpless முதலிய சொற்களின் வாழ்விற்குப் பயன்படுகிறது. like என்ற சொல் ch என நின்று, such (so - like), which (who - like) முதலிய சொற்கள் வாழச் செய்கிறது; அதுவே வேறு சில இடங்களில் ly என நின்று godly (god - like), homely (home - like), lovely (love - like) முதலான சொற்களை வாழ்விக்கிறது. shape என்ற சொல் ship எனத் திரிந்து, friendship, worship, lordship முதலான சொற்களை அமைத்துள்ளது. ஆயின் இவற்றில், full, loose, like, shape என்னும் சொற்கள் வடிவம் திரிந்ததோடு அல்லாமல் தம் பொருளையும் இழந்து பயன்படுதல் காணலாம்.

பொம்மை, நன்மை, தீமை, அருமை முதலிய சொற் களில் மெய் என்னும் உறுப்பு மை எனத் திரிந்தது கண் டோம். ஆனால் இதே வகையான திரிபு எண்ணெய் என்னும் சொல்லில் வெற்றிபெற முடியவில்லை.

'எண்ணெய்' என்னும் சொல்லை 'எண்ணை' 'எண்ணெ' என்றே எல்லோரும் ஒலிக்கின்றனர். எழுதும் போது பலர் 'எண்ணை' என்றே எழுதுகின்றனர். கற்றுத் தேர்ந்தவர் சிலர் 'எண்ணெய்' என்று எழுதுகின்றனர்.

---

which made them suitable vehicles of expression for one or other morphological category.—J. Vendryes, Language, pp. 167—168.

ஆகையால் இலக்கியத்தில் பொம்மை நன்மை முதலியவை இடம் பெற்றதுபோல், 'எண்ணை' என்பது இடம்பெற முடியவில்லை. 'எண்ணை' என்று எழுதுவது தவறு என்றே திருத்தப்பட்டு வருகிறது.

பொய்ம்மெய், நன்மெய் முதலியவற்றில் மெய் என்ற சொல்லின் பொருளுணர்ச்சி இன்று இல்லாமற் போனது போலவே, எண்ணெய் என்பதில் நெய் என்ற சொல்லின் பொருளுணர்ச்சியும் இன்று இல்லை. எள்ளிலிருந்து எடுக்கப் படுவதற்கு எண்ணெய் என்ற பெயரை இன்று வழங்குதல் இல்லை; அதற்கு நல்லெண்ணெய் என்ற வேறொரு சொல் எழுந்துள்ளது. ஆகவே எண்ணெய் என்பது பொதுவாக நயப்பான நீர்ப்பொருளுக்குப் பெயராக வழங்குகிறது: நெய் என்ற சொல்லின் வாழ்வு பசுநெய் எருமைநெய் ஆட்டுநெய்யோடு நின்றுவிட்டது. எண்ணெய் என்பதில் 'நெய்' பற்றிய எண்ணமே இல்லாமல், அதுவே ஒரு தனிச் சொல்லாக ஏற்பட்டுவிட்டது. இவ்வளவு மாறுதல் ஏற்பட்ட பிறகும் 'எண்ணை' என்று எழுதும் வழக்கு மதிப்புப் பெற முடியவில்லை.

'எண்ணை' என்பது தவறு எனின், பொம்மை, நன்மை முதலியனவும் தவறே ஆகும். ஆனால் இத்தனைத் தவறு களுக்கு இடம் கொடுத்த தமிழ், 'எண்ணை' என்று எழுதும் ஒரு தவற்றிற்கு இடம் தரவில்லை. காரணம் என்ன?

மொழித்துறையில் புலவர்களே அரசர்கள்; மற்றவர்கள் குடிமக்களே. புலவர்கள் போற்றும் திரிபோ, தவறோ, செல்வாக்குப் பெற்று வாழும். இலக்கணநூலார் எதிர்த் தாலும் வாழும். ஆயின், காரணமின்றிப் புலவர்கள் இலக்கணத்தை மீறுதல் இல்லை. இலக்கணம் அவர்களுக்கு ஏவல் செய்யும். பொருந்தி நடக்காத ஏவலாளரைமட்டும் மாற்றிவிடும் உரிமை இப் புலமைவேந்தர்க்கு உண்டு.

பொம்மை நன்மை முதலிய திரிபுகளை—தவறுகளை—ஏற்று வாழ்விக்கப் புலவர்கள் உளங்கொண்டனர்; ஆகையால் அவை வாழ்ந்தன. எண்ணை போன்றவற்றை வாழ்விக்க இன்னும் அவர்கள் உளங்கொள்ள வில்லை, தேவையும் ஏற்படவில்லை போலும்!

சொல்லுலக அரசர்களாகிய புலவர்கள் தம் விருப்பம் போல் கண்மூடித்தன்மையுடன் ஆட்சி செலுத்துவதும் இல்லை. பொறுப்பு உணர்ந்து நடக்கின்றனர். பொருந்தாதவற்றைப் பிறர் நெடுங்காலம் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள் என்பது அவர்களுக்கு நன்றாகத் தெரியும். தடியாட்சி—யதேச்சதிகாரம்—நீடு வாழாது என்பதை அவர்கள் நன்கு அறிந்துள்ளனர். புலவருள் புலவராகிய ஷேக்ஸ்பியர், கல்வி நிரம்பாக் காரணத்தால் செய்த தவறுகளை ஆங்கில இலக்கிய உலகம் இன்னும் ஏற்றுக்கொள்ள வில்லை. பெரும்புலவர்கள் செய்யும் எல்லாத் திரிபுகளும் இலக்கியத்தில் நிலைபெறுவ தில்லை.* விளையும் நன்மை அறிந்து, உள்ள தேவையும் உணர்ந்து செய்யும் சீர்திருத்தங்களே நிலைக்கும். 'குடிதழீஇக் கோல் ஓச்சும்' ஆட்சியே நீடு நிற்கும். அவ்வாறு ஆள்பவரே வல்லார். 'வல்லான் வகுத்ததே வாய்க்கால்'.

---

*It may surprise some readers to hear that poets and novelists are responsible for extremely few word-coinages; what they have done is chiefly to give literary currency to words that were already used in every day speech...... Most of these whimsical formations are stillborn, but some take the fancy of the hearers and are spread in wider and wider circles, chiefly those words that seem to fill a gap and are felt as expressive—Otto Jespersen, Linguistica, p. 437.

# ‘ கள் ’ பெற்ற பெருவாழ்வு

‘ **கள்** ’ மிகப் பழையது ; நெடுங்காலத்திற்கு முன்பே இருந்தது. ‘ மக்கள் ’ தோன்றிய பழங்காலத்திலேயே ‘கள்’ இருந்தது.

ஆனால் பழங்காலத்தில் அதற்கு ஒரு வரையறை இருந்தது. இக்காலத்தில் அந்த வரையறை இல்லாமற் போய் விட்டது வருந்தத்தக்கது.

உயர்திணைக்குக் ‘ கள் ’ ஆகாது என்றும், அது அஃறிணைக்கே உரியது என்றும், அஃறிணையிலும் சில இடங்களிலேயே உள்ளது என்றும் தொல்காப்பியனார் வகுத்திருக்கிறார். இக்காலத்திலோ அஃறிணை உயர்திணை என்ற வேறுபாடு இல்லாமல் ‘கள்’ இடம் பெற்றுவிட்டது. அஃறிணையை விட உயர்திணையிலேயே கள் மிகுதியாகப் பயன்படுவது போல் தோன்றுகிறது.

கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே
கொள்வழி உடைய பலவறி சொற்கே*

என்பது தொல்காப்பியம். இதனால் உயர்திணையில் கள் இடம் பெறாது என்றும், அஃறிணையிலும் சில இடங்களிலேயே அது உள்ளது என்றும் தொல்காப்பியனார் கருதியது தெளிவாகிறது.

ஆனால் தொல்காப்பியத்திலேயே ‘ மக்கள் ’ என்னும் சொல் உள்ளது ; உயர்திணையை விளக்கும் இடத்திலேயே அமைந்துள்ளது.

---

***தொல்காப்பியம், சொல். 169.**

உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை என்மனார் அவரல பிறவே.*

மக்கள் என்று கூறியதோடு அல்லாமல், சுட்டிக் கூறும் போது 'அவர்' என்ற உயர்திணைப் பலர்பாற் சொல்லாலேயே சுட்டியுள்ளார். ஆகவே 'அவர்' என்பதற்கு ஈடான உயர்திணைச் சொல்லாக 'மக்கள்' வழங்கியது என்பது தெளிவு.

மக்கள் பன்மையாயின், அதற்கு ஒருமை 'மக' என்பது (மகவு—குழந்தை). தொடக்கத்தில் குழந்தைகளையும் சிறுவர்களையும் வழங்கிய சொல்லாக இருந்து, காலப்போக்கில் மற்ற மனிதர்களையும் குறிக்க வழங்கியதுபோலும். இன்றும் 'மக்கள்' என்னும் சொல்லுக்குக் கிராமங்களில் 'வயிற்றில் பிறந்தவர்கள்' என்னும் பொருளே உள்ளது. இலக்கியத்தில், வயிற்றில் பிறந்தவர்கள் என்னும் பொருளோடு மனிதர்கள் என்ற பொருளும் உள்ளது.

'அவர்' என்னும் சொல்லில் உள்ள உயர்திணைப் பலர் பால் விகுதி 'அர்', 'மக' என்ற சொல்லோடு அஃறிணைக்கு உரிய 'கள்' விகுதி சேராமல், 'அர்' என்ற விகுதி சேர்ந்து உயர்திணையை உணர்த்தியிருக்கவேண்டும். அவ்வாறு சேர்ந்தமைந்த சொல் தமிழிலக்கியத்தில் இல்லாமற் போகவில்லை. மகார் என்ற ஒரு பழைய சொல் உள்ளது. மக + அர்—மகார் என உயர்திணைக்கு உரிய அர் விகுதி அதில் அமைந்துள்ளது. ஆயின், மகார் (மகாஅர்) என்னும் அச் சொல் சிறுவர்களைக் குறிக்கின்றதே அல்லாமல், மனிதர் என்னும் பொருள் தரவில்லை.

மனிதர்க்கு உரிய பகுத்தறிவு இல்லாத உயிர்களும் உயிரில்லாப் பொருள்களும் அஃறிணை என்பது இலக்கணம்.

---

*தொல்காப்பியம், சொல். 1.

பகுத்தறிவே மனிதரின் சிறப்பியல்பாகச் சுட்டப்படுவது ('மக்கட் சுட்டு'). குழந்தைகள் போதிய பகுத்தறிவு வளர்ச்சி பெறாத நிலையில் இருத்தலால், அஃறிணையாகக் கருத இடம் உண்டு. இன்றும், "குழந்தைகள் தூங்குகின்றன" என்றும், "குழந்தை தூங்குகின்றது" என்றும் எழுத்திலும் பேச்சிலும் குழந்தை அஃறிணையாக வழங்குதலைக் காணலாம். தொடக்கத்தில் மக என்னும் ஒருமைப் பெயரும் மக்கள் (மக+கள்) என்னும் பன்மைப் பெயரும் அஃறிணையாக வழங்கியிருக்கவேண்டும். அதனால்தான் 'கள்' விகுதி—அஃறிணைக்கே உரிய விகுதி—இந்தச் சொல்லில் இடம்பெற்றது. இவ்வாறு தொடங்கிய சொல், தன் தொடக்கப் பொருளைக் கடந்து, உயர்திணையாகிய மனிதரைக் குறிக்கலாயிற்று. எதற்கோ தொடங்கிய முயற்சி வேறு எதற்கோ பயன்படுவது உலகியற்கை. வெண்கதிரைக் குறிக்க ஏற்பட்ட 'திங்கள்' என்னும் சொல், இன்று அப் பொருளை அவ்வளவாக உணர்த்தாமல் கிழமையையும் மாதத்தையும் உணர்த்தப் பயன்படவில்லையா? அதுபோல் அஃறிணையாகிய குழந்தைகளை உணர்த்த ஏற்பட்ட 'மக்கள்' என்னும் சொல், காலப்போக்கில் உயர்திணையாகிய மனிதரை உணர்த்துவதாயிற்று.

குழந்தைகள் வளர்ந்தபின் பகுத்தறிவு பெற்ற இளஞ் சிறுவர்களாகின்றனர். பழங்காலத்தில் அவர்களைக் குறிக்க, உயர்திணைச் சொல வேண்டியிருந்தது. அப்போது மக என்னும் அடிச்சொல்லோடு 'அர்' என்னும் உயர்திணை விகுதி சேர்ந்த, மகார் (மகா அர்) என்னும் உயர்திணைச சொல்லைப் பெற்றனர். இவ்வாறு நோக்கின், அக்காலத்தில் குழந்தைகளைக் குறிக்க 'மக்கள்' என்னும் சொல்லும், இளஞ் சிறுவர்களைக் குறிக்க 'மகார்' என்னும் சொல்லும் பயன் பட்டிருக்கும் என்று உணரலாம். இது தொல்காப்பிய

ளுருக்கும் மிக முற்பட்ட காலத்தில் இருந்த நிலையாகும். தொல்காப்பியனார் காலத்தில்—அதற்குச் சிறிது முற்பட்ட காலத்தில்—வளர்ந்த மனிதரைக் குறிக்க ஒரு சொல் தேவையாயிற்று. அப்போது, 'மக்கள்' 'மகார்' என்னும் இருசொற்களில் ஒன்றைத் தேடலாயினர். மகார் என்னும் சொல்லையே தேர்ந்தெடுத்திருப்பின், மிகப் பொருத்தமான உயர்திணைச் சொல்லாக அமைந்துவிட்டிருக்கும். உயர்திணை ஆண்பாலுக்குச் சொல் அமைத்தபோது ஆண்பால் விகுதி யாகிய 'அன்' சேர்த்து, மக+அன்—மகன் என்று ஆக்கினர். உயர்திணைப் பெண்பாலுக்குச் சொல் அமைத்த போது பெண்பால் விகுதியாகிய 'அள்' சேர்த்து, மக+அள்—மகள் என்று ஆக்கினர். இவை இப்போது வயிற்றில் பிறந்த ஆணையும் பெண்ணையும் குறிக்க வழங்கி னும், தொடக்கத்தில் பொதுவாக ஓர் ஆணையும் ஒரு பெண்ணையும் வழங்கிய சொற்களே ஆகும். 'அவன் ஓர் ஆண்மகன்' 'அவள் ஒரு வீரமகள்' என்று இக்காலத்தில் வழங்கும் தொடர்களிலும் பொதுவாக மனிதருள் ஆணையும் பெண்ணையும் குறிப்பதைக் காணலாம் (ஆங்கிலத்தில் man, woman போல). உயர்திணை ஆண்பாலுக்கு மகன் என்பதும், பெண்பாலுக்கு மகள் என்பதும் கொள்ளப்பட்டது போல, பலபாலுக்கு மகார் என்பதே கொள்ளப்பட்டிருக்கவேண்டும். அதுதான் ஒழுங்கான முறை.

ஆனால் மொழியில் காரணப் பொருத்தமும் நியாயமும் (logic) முற்றிலும் எதிர்பார்க்க முடிவதில்லை. மனிதன் குறையுடையவன்; ஆதலின் அவனுடைய படைப்பாக உள்ள மொழியும் குறையுடையதே என அமையவேண்டி யுள்ளது. அதனால் சில இடங்களில் எதிர்பாராத தவறுகள் வேரூன்றி மரபு எனப் போற்றப்படுகின்றன. இம்முறையில் பழங்கால மக்கள் மனிதரைக் குறிக்கச சொல் தேடிய

போது (தேடுவதும் இல்லை. கிடைத்ததை எடுத்துப் பயன் படுத்தும் வழக்கம் பேசுவோரிடம் காணப்படுவது) 'மகார்' என்பதை விட்டு, 'மக்கள்' என்பதையே எடுத்துக்கொண்டனர். பெரும்பாலோர் செய்யும் தவறு வாழ்க்கையில் சடங்கு ஆகிவிடுவதும் உண்டு அன்றோ? அதுபோல் 'மக்கள்' என்ற தவறான சொல் அனைவரும் போற்றும் நிலை அடைந்தது; இலக்கியத்திலும் இடம் பெற்றுவிட்டது. இந்நிலையில் தொல்காப்பியனார் வந்தார். அவர் என்ன செய்யமுடியும்? கள் விகுதி அஃறிணைக்கு உரியது என்ற விதி எழுதிய கையாலேயே, உயர்திணைக்கு உரியதாக மக்கள் என்னும் சொல்லை எடுத்தாள நேர்ந்தது. கடலையெண்ணெயில் 'எள்' சேர்ப்பது தவறு என்று தெரிந்திருந்தும், நாமும் 'கடலையெண்ணெய்' என்ற சொல்லைத்தானே வழங்குகிறோம்? 'கடலை நெய்' என்று பேசுவோமாயின், நம் தமிழ்க்கும் நம் வாழ்வுக்கும் மதிப்பு இல்லாமற் போய்விடும்போல் உள்ளதே! ஆகவே மொழியில் உயர்திணைச் சொல்லாக வேரூன்றிவிட்ட 'மக்கள்' என்னும் சொல்லைத் தொல்காப்பியனாரும் அவ்வாறே போற்றினார்.

உழவரும் புலவருமே மொழியின் வாழ்விலும் வளர்ச்சியிலும் செல்வாக்கு உள்ளவர்கள் என்பது மொழியியல் அறிஞர்களின் கருத்து. உழவரே நாட்டு மக்களுள் பெரும்பாலோர். ஆதலின் அவர்கள் செய்யும் தவறுகள் வேரூன்றி மொழிவழக்கு ஆகின்றன. 'மக்கள்' என்ற சொல் உயர்திணையில் இடம்பெற்றது அவர்களாலேயே எனலாம். இதுபோல் புலவர்கள் செய்யும் தவறுகளும் வேரூன்றி வாழ்வு பெறுகின்றன.

நக்கீரனார், மாமூலனார், நல்லந்துவனார், அம்மூவனார், மாங்குடிமருதனார், மருதனிளநாகனார் முதலான புலவர்களின் பெயர்களில் அன் விகுதியும் உள்ளது; அதன்மேல்

ஆர் விகுதியும் சேர்ந்துள்ளது. நக்கீரன், மாமூலன், நல்லந் துவன் முதலிய பெயர்களே இயல்பானவை ; ஆண்பால் விகுதியாகிய அன் இவற்றில் இலக்கணப்படி அமைந் துள்ளது. அதன்மேல், பலர்பால் விகுதியாகிய ‘ஆர்’ சேர்த்தது செயற்கைமுறை. புலவர்களை மற்றவர்களைப் போல் கருதாமல் வேறுபடுத்திச் சிறப்பிக்க முயன்றவர்கள் ஆண்பால் விகுதியுடன் பலர்பால் விகுதியைச் சேர்த் துள்ளனர். அவ்வாறு முயன்றவர்கள் யார் ? புலவரல்லாத ஏனையோர் அவ்வாறு ஒருமை விகுதிக்குமேல் பன்மைவிகுதி சேர்த்திருப்பின், இலக்கணக் குற்றம் கூறிப் புலவர்களே தடுத்திருப்பார்கள். ‘செய்தான்’ என்பதைச் ‘செய்தானர்’ என்று கூறின் எவ்வாறு இலக்கண வழு ஆகுமோ அவ் வாறே நக்கீரனர் முதலியனவும் இலக்கணவழு எனப் புலவர்களே குற்றங் கூறியிருப்பார்கள். ஆனால், ஒரு புலவர் மற்றப் புலவரை உயர்த்திச் சிறப்பிப்பதற்காகச் செய்த முயற்சி இது. இவர் அவரை ‘ஆர்’ விகுதியால் உயர்த்த, அவர் இவரை அவ்வாறே உயர்த்த, இறுதியில் புலவர் அனைவரும் போற்றும் மரபாக முடிந்தது. பழங் காலத்தில் புலவர் பலர் வேந்தர்களுக்கு ஆசிரியராக இருந்து கற்பித்து வந்தமையால், வேந்தர்களும் புலவர்களை அவ்வாறே ஆர் விகுதி சேர்த்து உயர்த்துக் கூறலாயினர். அச் சிறப்பு வேந்தர்க்கு அமையவில்லை ; புலவர்க்குமட்டுமே அமைவ தாயிற்று. ‘பாண்டியன் நெடுஞ்செழியனை மாங்குடி மருதனர் பாடியது’, ‘அவனை அவர் பாடியது’ என்று வேந்தன் அன் விகுதியோடு நிற்க, புலவர் ஆர் விகுதியும் பெற்று உயர்ந்தார்.

பெண்பாற் புலவர்களின் பெயருடனும் இவ்வாறே ஆர் விகுதி சேர்க்கலாயினர். அவ்வையார், வெள்ளி வீதியார், ஆதிமருதியார், காக்கைபாடினியார் முதலிய

வழக்குகள் ஏற்பட்டன. பெண்பால் உணர்த்தும் இகர விகுதியோடு பலர்பால் உணர்த்தும் ஆர் விகுதி சேர்ந்து அமைவதும் வழக்க மாயிற்று.

ஆயினும், தனியே குறிக்கும்போது இவ்வழக்குகள் இடம்பெற்றனவே தவிர, செந்தமிழ் மொழியில் செய்யுள் இயற்றும்போது, செந்தமிழ் இலக்கணம் வழுவாமல் பழைய முறைப்படியே ஆர் விகுதி இன்றியே பெயர்களைக் குறித்தனர்.

மாங்குடி மருதன் தலைவ னாக[1]

பரணன் பாடினன் மற்கொல்[2]

விளங்குபுகழ்க் கபிலன்[3]

என்றே பழங்காலச் செய்யுட்களில் உள்ளன. செய்யுள் வழக்கு எளிதில் மாறாதது; ஆதலின் அங்கு ஆர்விகுதி சேர்ந்த புதிய வழக்கு இடம் பெறவில்லை.

இத்தகைய மாறுதலுக்கு இணங்காத சில பெயர்களும் உள்ளன. கபிலனார், பரணனார் என்று எவரும் குறிக்க வில்லை; கபிலர் பரணர் என்றே குறித்துள்ளனர்.

உரையாசிரியர்களும், செந்தமிழ்ச் செய்யுள்போல், மாறு தலுக்கு எளிதில் இடம் தராதவர்கள். அவர்களின் பெயர் களிலும் அன் விகுதியுடன் ஆர் விகுதி சேர்க்கும் வழக்கம் காணோம். இளம்பூரணனார், சேனாவரையனார், அடியார்க்கு நல்லனார், நச்சினார்க்கினியனார், பரிமேலழகனார் என்று எவ ரும் எழுத முற்படவில்லை. கபிலர் பரணர் என்பவற்றில் உள்ளவாறு அன் விகுதியை நீக்கி ஆர் விகுதி அல்லது அர் விகுதியைச் சேர்த்து இளம்பூரணர், சேனாவரையர்,

---

[1] புறநானூறு, 72. [2] ஷை 99. [3] ஷை 53.

அடியார்க்குநல்லார், நச்சினார்க்கினியர், பரிமேலழகர் முதலிய பெயர்களால் வழங்கினர்.

இவ்வாறு அன் விகுதியை நீக்கி ஆர் விகுதி சேர்க்கும் சிறப்பும் முடியுடை வேந்தர்க்கு அமையவில்லை. பாண்டியர் நெடுஞ்செழியர் என்று வழங்காமல் பாண்டியன் நெடுஞ் செழியன்* என்றே வழங்கினர்.

கபிலன் பரணன் முதலிய சொற்களைக் கபிலர் பரணர் என உயர்வு கருதித் திரித்ததும் ஒருவகையில் இடையூறு ஆயிற்று. பன்மைக்கு உரிய 'அர்' விகுதி ஒருமைக்கு வழங் கவே, அதன் பன்மைப் பொருள் குன்றிவிட்டது. பலரைப் பார்த்து 'அவர் நிற்கிறார்' என்று சொல்லும் நிலையிலிருந்தது பழங்காலத் தமிழ். இன்று, 'அவர் நிற்கிறார்' என்று சொன் னால், அந்த வாக்கியம் ஒருவரையே குறிக்கின்றது. பலரைக் குறிப்பதற்கு வேறொரு வாக்கியம் தேவையாயிற்று.

இவரியார் என்குவை ஆயின் இவரே...
நெடுமாப் பாரி மகளிர் ; யானே
தந்தை தோழன் ; இவர்என் மகளிர்...

என்னும் பாட்டில் கபிலர், பாரிமகளிர் இருவரையும் இருங்கோவேளுக்கு அறிமுகப்படுத்தியபோது 'இவர்கள்' என்று கூறாமல், 'இவர்' என்றே கூறினர். இக்காலத்தில் 'இவர்' எனின் ஒருவரைக் குறிக்கும் சொல்லாகவே உள்ளது.

வேற்றுமையுருபுகளைப்போல் விகுதிகள் ஒருமொழிக்கு அடிப்படையானவை. அடிப்படையில் மாறுதல் ஏற்பட் டால், அது பலவற்றைக் கலக்கிவிடும் ; குழப்பம் தெளிவ தற்கு நெடுங்காலம் ஆகும். ஒரு விகுதியில் மாறுதல் ஏற் பட்டாலும், அது மற்ற விகுதிகளின் வாழ்வையெல்லாம்

*புறநானூறு, 18 ஷை 201.

தாக்கும். தமிழில் அர் ஆர் விகுதிகளில் ஏற்பட்ட மாறுதல் இவ்வாறு பலவற்றைத் தாக்கியுள்ளது; அதனால் பல மாறுதல்கள் தொடர்ந்து ஏற்பட்டுள்ளன. அவையாவன :—

(1) அவன் அவர் இரண்டும் முறையே உயர்வற்ற ஒருமைக்கும் உயர்வான ஒருமைக்கும் பயன்படவே, பன்மைக்கு வேறொரு சொல் தேவையாயிற்று. உயர்திணையில் பன்மை உணர்த்தும் அர் ஆர் விகுதிகள் பயன்படாமற்போகவே, அஃறிணையில் பன்மை உணர்த்தும் 'கள்' விகுதி இங்கு வரத் தொடங்கியது. 'அவர்கள்' என்னும் புதிய சொல் அமைந்து உயர்திணைப் பன்மை உணர்த்தலாயிற்று. அது போலவே இவர்கள், எவர்கள் முதலிய சொற்களும் அமைந்தன. (தொல்காப்பியனார் இக்காலத்தே தோன்றின், உயர்திணை விகுதியாகிய அர் என்பதும் அஃறிணை விகுதியாகிய கள் என்பதும் ஒரு சொல்லிலே சேர்ந்து இரண்டு விகுதிகளாக அமைதலை எவ்வளவு வெறுப்பாரோ?)

(2) படர்க்கையிடப் பெயர்களாகத் தான் தாம் இரண்டும் முறையே ஒருமைக்கும் பன்மைக்குமாக இருந்தன. உயர்வு தாழ்வு மனப்பான்மை இவ்வாறு சில சொற்களில் வளர்ந்தவுடன், இடப்பெயர்களிலும் அது வளரலாயிற்று. தான் என்பது உயர்வற்ற ஒருமைக்கும், தாம் என்பது உயர்வான ஒருமைக்கும் வழங்கலாயின. பன்மை அமைக்கக் கள் விகுதி சேர்ந்து 'தாங்கள்' ஏற்படலாயிற்று.

(3) படர்க்கைப் பெயர்களில் ஏற்பட்ட மாறுதல் போலவே, முன்னிலை தன்மைப் பெயர்களிலும் ஏற்படலாயிற்று. நீ என்பது உயர்வற்ற முன்னிலையை உணர்த்த, நீர் என்பது தனக்கு உரிய பன்மைப் பொருளை இழந்து உயர்வான முன்னிலை ஒருமையை உணர்த்தலாயிற்று. 'கள்' விகுதி சேர்ந்த 'நீங்கள்' முன்னிலைப் பன்மைக்கு அமைந்தது. 'யாங்கள்' 'நாங்கள்' என்பன இவ்வாறே தன்மைக்கு

அமைந்தன. thee, thou, ye என்று முன்னிலையில் இருந்த பல்வேறு சொற்களும் அழிந்து ஆங்கிலத்தில் you என்ற ஒரு சொல்லே நின்றுள்ளது. தமிழில், இல்லாத புதிய சில வேறுபாடுகளும் அவற்றை உணர்த்தப் புதிய பல சொற்களும் கிளைத்துள்ளமை வருந்தத் தக்கதே.

(4) புலவரின் உயர்வு குறிப்பதற்காகத் தொடங்கிய இம் முயற்சி படிப்படியாக வேந்தர் அமைச்சர் முதலானவர்களின் உயர்வு குறிக்க வளர்ந்தது. மன்னர், வேந்தர், அமைச்சர் முதலிய சொற்கள் உயர்வான ஒருமைக்குப் பயன்படவே, தெளிவான பன்மைக்குக் கள் விகுதியின் துணை தேவை ஆயிற்று. மன்னர்கள், வேந்தர்கள், அமைச்சர்கள் முதலாகப் பல்வேறு சொற்களிலும் கள் விகுதி சேரத் தொடங்கியது. பொருள் இடம் குணம் தொழில் முதலியவைகளால் அமைந்த பல்வேறு பெயர்களிலும் இவ்வாறு புதியவை கிளைத்தன. செல்வர்கள், நாட்டார்கள், நல்லவர்கள், வேடர்கள் முதலிய சொற்கள் அத்தகையன.

(5) மூவிடப் பெயர்களில் ஏற்பட்ட மாறுதல், மூவிடப் பெயர்களின் வேற்றுமைத் திரிபுகளிலும் ஏற்படலாயிற்று. தங்கள், உங்கள், எங்கள் என்னும் புதிய வடிவங்கள் ஏற்பட்டன. 'அவர் தம் வீட்டில் இல்லை' என்பது பலரைக் குறிக்கும் பழைய வாக்கியம். இப்போது அது ஒருவரையே குறித்தலால், 'அவர்கள் தங்கள் வீடுகளில் இல்லை' என்று பலரைக் குறிக்கும் வாக்கியம் அமைகிறது. நான்கு சொற்கள் கொண்ட இச்சிறு வாக்கியத்தில் மூன்று முறைகள் விகுதி வருதலால் இனிமை குறைகிறது. 'நீங்கள் உங்கள் வீடுகளில் இல்லை' 'நாங்கள் எங்கள் வீடுகளில் இல்லை' என்பன போன்ற வாக்கியங்களையும் ஒலித்து இனிமை குறைதலை உணரலாம்.

(6) எழுவாய்களாக அமையும் பெயர்களில் ஏற்பட்ட மாறுதல்களுக்கு ஏற்ப, அவற்றின் பயனிலைகளாக அமையும் வினைமுற்றுக்களிலும் மாறுதல்கள் ஏற்பட்டன.

| பழைய பன்மை | புதிய பன்மை |
|---|---|
| அவர் வந்தார் | அவர்கள் வந்தார்கள் |
| இவர் வருகிறார் | இவர்கள் வருகிறார்கள் |
| எவர் வருவார் | எவர்கள் வருவார்கள் |
| நீர் வந்தீர் | நீங்கள் வந்தீர்கள் |
| நீர் சொல்லும் | நீங்கள் சொல்லுங்கள் |

இயல்பாகப் பன்மை விகுதி ஏற்ற பலர்பால் வினை முற்றுக்கள் பல, உயர்வுணர்த்தும் ஒருமைக்கு உரிய வினை முற்றுக்களாக வழங்கலாயின. ஆகவே உண்மையாகப் பன்மை உணர்த்துவதற்குக் கள் விகுதி சேர்ந்த வினைமுற்றுக்கள் தேவையாயின.

அவர்கள் தங்கள் வீடுகளுக்குச் சென்றார்கள்
நீங்கள் உங்கள் வீடுகளுக்குச் சென்றீர்கள்
நீங்கள் உங்கள் வீடுகளுக்குச் செல்லுங்கள்

முதலான வாக்கியங்களில் சொல்தோறும் கள் விகுதி ஒலிப்பது இனிமையாக இல்லை.

(7) தாயும் தந்தையும் உயர்வற்ற ஒருமையாக நிற்க, தாயார் தந்தையார் என்பன உயர்வான ஒருமை வடிவங்களாயின; தாயார்கள் தந்தையார்கள் என்பன செவிக்கு இனியனவாக ஒலிக்காமற்போகவே, தாயர் தந்தையர் என்பன பன்மை வடிவங்களாக நின்றன. 'கள்' அமைதியாக இராமல் மீண்டும் மீண்டும் தன் செல்வாக்கைச் செலுத்தவே, தாய்கள், தந்தைகள் என்னும் சொற்கள் அமைந்தன. அவையும் இனிமையாக ஒலிக்காமையால், தாய்மார்

தந்தைமார் என்னும் சொற்கள் ஏற்பட்டன. பல வடிவங் களாய் உயர்வு தாழ்வு மனப்பான்மைகளை வளர்ப்பதோடு, இவை நினைவிலிருத்துவதற்கு மூளைக்கு வீண் சுமையாகவும் உள்ளன.

தம்பியார் என்பது உயர்வான ஒருமை உணர்த்த, தம்பியர் தம்பிகள் தம்பிமார் என்பன பன்மை வடிவங்களாக உள்ளன.

அண்ணன் என்னும் உயர்வற்ற ஒருமைக்கு ஏற்ற வகையில் உயர்வான ஒருமை அமையவில்லை. அண்ணா என்ற விளிவேற்றுமையைச் சிலர் உயர்வுக்குப் பயன்படுத்துகின்ற னர்; வேறு சிலர் அண்ணார் என்ற தவறான வடிவத்தைப் பயன்படுத்துகின்றனர். அண்ணன்மார் என்னும் வடிவம் பன்மையை உணர்த்துகிறது. அண்ணன்கள் என்னும் தவறான வடிவம் பேச்சில் உள்ளது.

மனைவி உயர்வற்ற ஒருமையை உணர்த்த, மனைவியார் உயர்வான ஒருமையை உணர்த்த, மனைவியர் மனைவிகள் மனைவிமார் என்பன பன்மையை உணர்த்துகின்றன.

கணவன் உயர்வற்ற ஒருமையைக் குறிக்க, கணவர் உயர்வான ஒருமையைக் குறிக்க, கணவன்மார் பன்மை யைக் குறிக்கிறது. ' கணவர்கள் ' என்பதைச் செவி ஏற்க வில்லை.

அண்ணி, அத்தை, தங்கை முதலான பல பெயர்ச் சொற்களுக்கும் இவ்வாறே காணலாம். ஒவ்வொன்றிலும் மேற் கண்டவாறு குழப்பம் இருத்தலையும் உணரலாம்.

இவற்றுள் அண்ணன்மார் கணவன்மார் முதலிய சொற்களில் ஒருமை உணர்த்தும் அன் விகுதியுடன் பன்மை குறிக்கும் மார் விகுதி சேர்ந்தது பொருத்தமாக இல்லை. நக்கீரனார், அம்மூவனார் முதலிய சொற்களில் உள்ளவாறு

போல ஒருமை விகுதியும் பன்மை விகுதியும் இயைந்தன போலும்!

இவ்வாறு கள்ளும் மாரும் சேர்ந்த சொற்கள் பல இன்று செவிக்கு இனிமை பயக்கவில்லை. காலப்போக்கில் குழப்பம் தெளியும்போது, மற்றச சொற்கள் மறைந்து இவைமட்டும் வாழ நேர்ந்தால் இவற்றின் கடுமை குறையக் கூடும். பழகப் பழக வேம்பும் இனிக்கும்போலும்!

(8) படர்க்கைப் பலர்பால் வினைமுற்றுக்களில் எல்லாச் சொற்களும் 'கள்' விகுதி ஏற்றால் ஒருவகை ஒழுங்காவது ஏற்படும். அதுவுமில்லை. 'ஆர்' விகுதி உடையவை மட்டும் 'கள்' விகுதி ஏற்கின்றன (வந்தார்கள் முதலியன). அர் விகுதி உடையவை 'கள்' ஏற்பதில்லை. வந்தனர்கள், செல்கின்றனர்கள் என்பவை ஏற்படவில்லை. ஆகவே, வந்தனர் செல்கின்றனர் உறங்குவர் முதலிய அர் ஈற்றுச் சொற்கள் மாறுதல் இன்றியே நிற்கின்றன. இவை இன்று பெரும்பாலும் பன்மை உணர்த்தவே வழங்குகின்றன. ஆகவே,

அவர்கள் வந்தார்கள்
அவர்கள் வந்தனர்

என்ற இருவகை வாக்கியங்கள் மொழியில் உள்ளன. மக்களுக்குள் உயர்வு தாழ்வு கற்பித்து ஏற்பட்ட விகுதிகளின் விளைவு, இத்தகைய வாக்கியங்களிலேயே உயர்வு தாழ்வு ஏற்பட இடங்கொடுத்துள்ளது. முதல் வாக்கியம் எளிய நடைபோலவும், இரண்டாம் வாக்கியம் உயர்வான நடைபோலவும் தோன்றுகின்றன.

இதுவும் சிறு குழப்பத்திற்கு வித்து இடவல்லது.

(9) வருகின்றனர் முதலிய அர் ஈற்று வினைமுற்றுக்களோடு கள் விகுதி சேர்ந்து (வருகின்றனர்கள் முதலியன

வாக) அமையாதது போலவே, தன்மைப் பன்மை வினை முற்றுக்களோடும் (வந்தோம் முதலியவை) கள் விகுதி சேர்வதில்லை. யாம் வந்தோம், யாங்கள் வந்தோம் எனச் சொல்வது உண்டே தவிர, யாங்கள் வந்தோங்கள் என்பதில்லை.

யார், சிலர், பலர், உளர், உண்டு, இலர், இல்லை முதலிய சில சொற்களும் கள் விகுதிக்கு இடம் தருவதில்லை.

ஆகவே, கள் விகுதி சேரும் சொற்கள் இவை, சேராச் சொற்கள் இவை எனப் பிரித்தறிய வேண்டியுள்ளது. இவ்வகையில் காரணப் பொருத்தம் ஒன்றும் இல்லாமையால் இது செயற்கையாக உள்ளது.

இவை அனைத்தையும் எண்ணிப் பார்க்கும்போது, ஒன்று விளங்குகிறது. மக்கள் மனத்தில் தோன்றிய உயர்வு தாழ்வு மனப்பான்மை சொற்களில் புகுந்து, சொற்களின் விகுதிகளில் முதலில் ஒன்றை மாற்ற, அது மற்றொன்றை மாற்ற, அது இன்னொன்றை மாற்ற, இவ்வாறே மாறுதல்கள் பல பெருகிவிட்டன. இவ்வாறு விகுதிகளில் ஏற்பட்ட குழப்பத்திற்கு இடையே, ஒன்று பெருநலம் பெற்றது. ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம் என்பது போல், இருக்க இடம் இல்லாமல் திகைத்துக்கொண்டிருந்த கள் விகுதி செல்வாக்குப் பெற்றுவிட்டது.*

உண்மையாகவே, கள் விகுதி இருக்க இடம் இல்லாமல் ஒதுங்கி வாழ்ந்துவந்தது. தொல்காப்பியனார் 'கொள்

---

*Sometimes one is reminded of the way in which contagious diseases spread, when one sees how certain suffixes become the fashion and are used in an increasing number of new words.—Otto Jespersen, Linguistica, p. 438.

வழி உடைய'* என்று சொன்னதன் காரணம் அதுவே ஆகும். அஃறிணைச் சொற்களுள், ஒருமையைப் பன்மை யாக்க அக்காலத்தில் கள் விகுதி தேவைப்பட வில்லை.

ஓர் எருது வந்தது
பல எருது வந்தன

என்று முன்னுள்ள அடைகளாலோ, பின்னுள்ள பயனிலை களாலோ அஃறிணைப் பெயர்ச் சொற்கள் ஒருமையா பன்மையா என்று உணர முடிந்ததே தவிர, எருது ஒருமை என்றும், எருதுகள் பன்மை என்றும் சொல்வடிவில் வேறு பாடு செய்யப்பட வில்லை. இன்றும் பேச்சுவழக்கில் உள்ள தமிழில், ஒரு கோழி, பத்துக் கோழி என்று கள் விகுதி இல்லாமலே பன்மை உணர்த்துதல் காண்க.

அஃறிணைப் பெயர்ச் சொற்களில் இவ்வாறு ஒதுங்கி வாழும் வாழ்வாவது கள் விகுதிக்கு உள்ளது. அஃறிணை வினைமுற்றுக்களிலோ அதற்கு இடமே இல்லை.

இருந்தது, இருக்கிறது, இருக்கும் - ஒருமை
இருந்தன, இருக்கின்றன, இருக்கும் - பன்மை.

இருந்தனகள், இருக்கின்றனகள், இருக்குங்கள் என்று இனி எக்காரணத்தாலும் ஏற்படப்போவ தில்லை. உயர்திணையில் அர் ஆர் விகுதிகள் இடம் தந்துள்ளதுபோல், அஃறிணை வினைமுற்றுக்களில் பன்மை உணர்த்தும் அகரவிகுதி ஒரு சிறிதும் கள் விகுதிக்கு இடம் தருவதில்லை.

இவ்வாறு அஃறிணை வினைமுற்றுக்களில் இடமே இல்லா மலும் அஃறிணைப் பெயர்ச் சொற்களில் ஒதுக்கிடம் பெற்றும் ஒருவகைச் சிறப்பும் இல்லாமல் மூலையில் கிடந்த கள்விகுதி, உயர்திணை விகுதிகள் கலங்கியபோது பெற்ற

---

* தொல்காப்பியம், சொல். 169.

புதுவாழ்வு வியக்கத் தக்கதாக உள்ளது. உயர்திணைப் பலர்பாலாக அமையும் பலவகைப் பெயர்ச்சொற்களிலும் முறைப் பெயர்களிலும் மூவிடப் பெயர்களிலும் அவற்றின் வேற்றுமைத் திரிபுகளிலும் பெரும்பான்மையான பலர்பால் வினைமுற்றுக்களிலும் இன்று செல்வாக்கான இடம் பெற்று விளங்குகின்றது. 'இதுவும் வரலாம், இதையும் கொள்ள லாம்' என்பவர் போல் 'கொள்வழி உடைய' என்று தொல்காப்பியனாரால் ஓதுக்கப்பட்ட கள் விகுதி—தனக்கு உரிய இடமாகிய அஃறிணையில் இன்னும் வேரூன்ற முடியாத கள் விகுதி—தான் புகுந்த இடமாகிய உயர்திணையில் பலவும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்கின்றது.

# மனம் போன போக்கு

"ஆங்கிலம் கற்பதென்றால் அக்கறையுடன் கற்க வேண்டும். இடைச்சொற்களை (prepositions) தவறு இல்லாமல் எடுத்தாளத் தெரியவில்லை என்றால், ஆங்கிலத் தேர்வில் வெற்றி பெற முடியாது. Health is superior than wealth என்று எழுதியிருக்கிறாய். இதைத் தேர்வில் எழுதினால், திருத்துபவர் கண்ணில் இது தவறாமல் படும். பட்டவுடனே, superior to என்று எழுதத் தெரியாதவன், ஆங்கிலமே தெரியாதவன் என்று தம் மனத்தை மாற்றிக் கொள்வார். அதன் பிறகு என்ன எழுதியிருந்தாலும் அவர் கையிலிருந்து நல்ல எண் (மார்க்) வாங்க முடியாது" என்று கல்லூரி விரிவுரையாளர் ஆங்கிலத்தில் நீண்ட சொற்பொழிவு செய்தார்.

'நாடகத்தில் கலந்துகொண்டார்' என்பது தமிழ் வழக்கு. ஆனால் இதே மாணவன் 'நாடகத்தில் பங்கெடுத்துக் கொண்டார்' என்று தமிழில் எழுதுகிறான். இந்த வாக்கியம் எழுதும்போது அவனுடைய மூளை ஆங்கிலேயன்போல் எண்ணும் போக்கில் உள்ளது. 'He took part in the drama' என்று ஆங்கிலத்தில் எழுதப்படும் வாக்கியத்தின் செல்வாக்கால், அவனுடைய தமிழ் மூளையும் சிறிது மாறி யுள்ளது. அதனால் 'பங்கெடுத்துக்கொண்டார்' என்று எழுதுகிறான். ஆனால் தமிழ் விரிவுரையாளர் இதைப் பற்றிக் கடிந்து கூறி விரிவுரை ஆற்றுவதில்லை. எழுவாய் பயனிலை பிழை இல்லாமல் அமைந்திருப்பதைக் கண்டு விட்டுவிடு கிறார். இத்தகைய மனப்பான்மை—'விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை' (?) தமிழாசிரியர்க்கு உள்ளது; ஆங்கில

ஆசிரியர்க்கு இல்லை. மாணவன் தமிழன் ; ஆகவே அவன் ஆங்கிலத்தில் தவறு செய்வது இயற்கை ; இதைப் பொறுப் பவர் இல்லை. அவன் தாய்மொழியில் பிழையில்லாமல் எழுதமுடியும் ; எழுதுவது கடமையாகும் ; ஆனால் தாய் மொழியில் பிழை நேர்ந்தால் பொறுப்பவர் உள்ளனர். தாய்க்கு அன்பு மிகுதியே அன்றோ? ஆங்கில விரிவுரை கேட்ட மாணவன் நெடுநேரம் திகைத்தான். Health is superior to wealth என்று எழுத வேண்டும் என்று ஆசிரியர் திருத்தியதைத் தெரிந்துகொண்டான். ஆயினும் superior than என்பதே பொருத்தமாக இருப்பதாக அவனுடைய தமிழ்மூளை வற்புறுத்தியது. ‘உடல்நலம் செல் வத்தைவிடச் சிறந்தது’ என்று சொல்வது உண்டே தவிர, ‘உடல்நலம் செல்வத்திற்குச் சிறந்தது’ என்று சொல்வது இல்லை ; சொன்னால் தவறாகவும் பொருளுணர்ச்சிக்குக் கேடாகவும தெரிகிறது. இவ்வாறு தமிழ் வாக்கிய அமைப் பைக் கொண்டு ஆங்கில வாக்கிய அமைப்பைச் சீர்தூக்கித் தெளிவு காணமல் திகைத்தான் அவன்.

ஒவ்வொரு மொழியும் வாக்கிய அமைப்பில் ஒவ்வொரு வகையாக இருக்கிறது.

இதோ இந்த வாக்கியத்தை (அடுத்து மேலே உள்ள வாக்கியத்தை) எழுதியவுடனே, அந்த மாணவனைப் பற்றியும் மொழியமைப்பைப் பற்றியும் இருந்த எண்ணங்கள் போய் விட்டன. இந்த வாக்கியம் பிழையா பிழையற்றதா என்று, இந்த வாக்கிய ஆராய்ச்சி வந்துவிட்டது.

பிழையா பிழையற்றதா என்று கேட்பதே பிழை யுள்ளதாகத் தெரிகிறது. பிழையுற்றதா பிழையற்றதா, அல்லது, பிழையுடையதா பிழையில்லாததா என்று தொடர் கள் அமைய வேண்டும். பிழை என்பது பண்பைக் குறிக்கிறது. பிழையற்றது என்பது பண்பி. ஒரு வாக்கியம்

எவ்வாறு பண்பு ஆகும் ? அது பண்பு உடையதே. ஆகையால் இரண்டு பண்பிகளை அடுக்கிப் பிழையுடையதா பிழையில்லாததா என்று கேட்க வேண்டும். 'அந்தப் பசு வெண்மையா ? கரியதா ?'' என்று ஒன்று பண்பாகவும் மற்றொன்று பண்பியாகவும் அமைத்துக் கேட்கலாமா ?

'கேட்கலாமா ?'—இந்தச் சொல்லே தவறானது போல் உள்ளதே. வினவலாமா என்று இருத்தல் வேண்டும். கேள், கேள்வி, கேட்டல் என்றால் செவியால் கேட்டு அறிதல் என்பதே பழங்காலத்தில் இருந்த பொருள். கேள்வித்தாள் என்று சொல்லல் பொருந்தாது. வினாத்தாள் என்று சொல்லல் வேண்டும். வினா, வினவு, வினவுதல் என்பவையே பொருந்தும் சொற்கள்.

வேண்டா இத்தகைய ஆராய்ச்சிகள். எடுத்த பொருளை விட்டு எங்கெங்கோ செல்ல நேர்கிறது. காலப்போக்கில் சொற்களுக்குப் பொருள் மாறுகிறது ; வாக்கியங்களின் அமைப்பு மாறுகிறது. ஆயிரம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட இலக்கண நூல்களை வைத்துக்கொண்டு இன்றைய மொழியை வெட்டி அளவுபடுத்துவது, இரண்டு ஆண்டுகட்கு முன் தைத்த சொக்காயை வைத்துக் கொண்டு இன்று உடம்பைத் திருத்துவது போன்றது என்று மொழியியல் அறிஞர் கூறுகின்றனர்.

ஆனால், பழைய இலக்கணத்தை அடியோடு புறக்கணித்தலும் கூடாது. முக்காலே மூன்று வீசம் பங்கு இன்றைய மொழிக்குப் பொருந்துமானால் அதைப் போற்றிப் பயன் பெறுவது நன்று அன்றோ ? ஆங்கிலம் முதலிய சில மொழிகளில் மூன்று நூற்றாண்டுக்கு முற்பட்ட இலக்கணம் இன்று பெரும்பாலும் பொருந்துவதில்லை. தமிழில் மூவாயிரம் நாலாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட தொல்காப்பிய இலக்

கணம் இன்று முக்காற் பகுதி பொருந்துவதாக உள்ளது. ஆகவே அதனுற் பயன்பெற முயல்வதே கடமை.

இனி அந்த வாக்கியம் வழுவா வழாநிலையா (பிழையுள்ளதா, பிழையில்லாததா) என ஆராய்வோம் :

"ஒவ்வொரு மொழியும் வாக்கிய அமைப்பில் ஒவ்வொரு வகையாக இருக்கிறது."

ஒவ்வொரு மொழியும் - எழுவாய்
இருக்கிறது - பயனிலை.

எழுவாய் ஒருமையா பன்மையா? (ஒருமை யுள்ளதா? பன்மை யுள்ளதா எனப் பண்பியாக எழுதின், கேட்கும் செவிக்குத் தமிழ் இனிமையாக ஒலிக்க வில்லை.) எழுவாய் ஒருமையாயின், வாக்கியம் வழாநிலை ; பன்மையாயின் வழு. எழுவாய் பன்மையாயின், பயனிலை ' இருக்கின்றன ' என்று அமைய வேண்டும் அன்றோ?

' மொழிகள் வாக்கிய அமைப்பில் வேறுபடுகின்றன ' அல்லது, 'மொழிகள் வாக்கிய அமைப்பில் ஒத்திருப்ப தில்லை' என்று எழுதியிருந்தால் இவ்வளவு தொல்லை இல்லை. அவ்வாறு எழுதுவதுதான் பழைய முறை. ' superior than ' என்று எழுதிய கல்லூரி மாணவனுடைய மூளையில் தமிழ் குடிபுகுந்து மாற்றியதுபோல், இக்காலத்து எழுத்தாளர் சிலர் மூளையில் ஆங்கிலம் ஒதுங்கியிருந்து 'ஒவ்வொரு' முதலான தொடர்கள் அமைந்த வாக்கியங்களை எழுதச் செய்கிறது. Each language has its own peculiarities in syntax' முதலான ஆங்கில வாக்கியங்களின் செல்வாக்கே இவை பயின்று வழங்குவதற்குக் காரணம்.

' Each language ' என்னும் ஆங்கிலச் சொல் ஒருமையே. அதனுல்தான் ' has ' என்னும் பயனிலையும் ஒருமையாக உள்ளது. ஆனுல் தமிழில் ' ஒவ்வொரு மொழி

யும்' என்னும் எழுவாய் ஒருமைக்கும் பன்மைக்கும் பொது. மொழி என்பது பால்பகா அஃறிணைப் பெயர். ஒரு மரம், பத்துமரம் என்பவற்றில் மரம் ஒருமையாகவும் பன்மையாக வும் வருதல்போல், ஒரு மொழி, பல மொழி என்று மொழி இருவகையிலும் வரலாம். பன்மை தெளிவாக உணர்த்த வேண்டுமானல், பல மொழிகள் என்று கூறவேண்டும். இவ்வாறு பன்மை விகுதியாகிய 'கள்' சேர்த்துக் காணின், 'ஒவ்வொரு மொழிகளும்' என்னும் தொடர் பொருந்தாமற் போகிறது. இது கொண்டு, 'ஒவ்வொருமொழி' என்பது ஒருமை என்று கூற இடம் உள்ளது. இது பொருந்துமாயின் 'ஒவ்வொரு மொழியும்......இருக்கிறது' என்ற வாக்கியம் வழாநிலை எனலாம்.

உடனடியாக முடிவுக்கு வருதல் கூடாது. வேறு சில வாக்கியங்களைக் காண்போம்.

1. என் நண்பர்களில் ஒவ்வொருவனும் நல்லவன்.
2. என் நண்பர்களில் ஒவ்வொருவரும் நல்லவர்.
3. என் நண்பர்களில் ஒவ்வொருவரும் நல்லவர்கள்.
4. என் நண்பர்கள் ஒவ்வொருவனும் நல்லவன்.
5. என் நண்பர்கள் ஒவ்வொருவரும் நல்லவர்.
6. என் நண்பர்கள் ஒவ்வொருவரும் நல்லவர்கள்.

மூன்று நான்கு ஐந்தாம் வாக்கியங்கள் வழு என்று தமிழ்ச் செவி சொல்லிவிடும். மற்ற மூன்று வாக்கியங்களும் வழாநிலை எனலாம்.

முதல் மூன்று வாக்கியங்களில் நண்பர்கள் எனத் தொகுதியாக்கிக் கருதும் கருத்து இல்லாமல் ஒவ்வொருவ ராகப் பிரித்துப் பிரித்துப் பார்க்கும் கருத்து உள்ளது. (மனத்தின் எண்ணங்களுக்கு வடிவங்களே வாக்கியங்கள்; எண்ணங்களின் இயைபை ஒட்டியே வாக்கியங்களின்

இலக்கணமும் அமைவதாகும். ஆகையால் கருத்துப் போக்கை ஆராய்ந்தால் இலக்கணம் தெளிவாகும்). அவ்வாறு பிரித்துப் பிரித்துத் தனித் தனியே நண்பர்களிடையே பார்க்கும் கருத்து இருப்பதால்தான், ‘ என் நண்பர்களில் ’ என்று ஏழாம் வேற்றுமை உருபு சேர்ந்துள்ளது. ஆகவே, ‘ நண்பர்கள் ’ எழுவாய் ஆகாமல், ‘ ஒவ்வொருவனும் ’ அல்லது ‘ ஒவ்வொருவரும் ’ எழுவாய் ஆகிறது. தொகுதியாகப் பார்க்காமல் தனித் தனியே பார்க்கும் கருத்து இருப்பதால் எழுவாய் ஒருமை ஆகிறது. ‘ ஒவ்வொருவனும் ’ என்னும் எழுவாய்க்கு ஏற்ப, ‘ நல்லவன் ’ என்ற பயனிலை பொருந்துகிறது. ‘ நண்பன் ’ ‘ அவன் ’ என்று கருதாமல், ‘ நண்பர் ’ ‘ அவர் ’ என்று உயர்வாகக் கருதும்போது, ஒருமையே ஆயினும் (உயர்சொற் கிளவி என்னும் தமிழ்மரபின்படி) சொல்லின் வடிவுமட்டும் பன்மையாய் உள்ளது. ‘ ஒவ்வொருவரும் நல்லவர் ’ என்ற அமைப்பு அதனால் பொருந்துகிறது. மூன்றும் வாக்கியத்தில்—தனித் தனியாகக் கருதும் நிலையில்—‘ நல்லவர்கள் ’ என்று பன்மைப் பயனிலை அமைவது பொருந்தவில்லை.

அண்ணனுடன் தம்பி வந்தான்.
தம்பியுடன் அண்ணன் வந்தான்.
பெற்றோருடன் மகள் வந்தாள்.
மகளுடன் தாய் வந்தாள்.

இந்த வாக்கியங்களில் வருதல் தொழில் கூட்டாகவே நடைபெறுகிறது. வருவோர் ஒருவர் அல்லர் ; பலரே. ஆயினும் கருத்தில் மற்றவரிட மிருந்து ஒருவரைப் பிரித்துக் கருதும் போக்கு உள்ளது. அதனால் எழுவாய் ஒருமையாகி, பயனிலையும் ஒருமை ஆகிறது. ‘ஒவ்வொரு’ என்ற தொடர் அமைந்துள்ள முதல் மூன்று வாக்கியங்களும் இவ்வாறு

கருதும் போக்கில் உள்ளவையே. ஆகையால், ஒருமைப் பயனிலை (நல்லவன்), அல்லது ஒருமைக் கருத்தும் உயர்வு உணர்த்தும் பன்மை வடிவும் உள்ள பயனிலை (நல்லவர்) அமைதல் வழாநிலை ஆகும்.

அண்ணனும் தம்பியும் வந்தார்கள்.
அண்ணன் தம்பி இருவரும் வந்தார்கள்.
தந்தையும் மகளும் வந்தார்கள்.
மகனும் தாயும் வந்தார்கள்.

இந்த வாக்கியங்களில் தனித்தனியே இருவரைக் குறித்த போதிலும், தொகுதியாகக் கருதும் கருத்தே உள்ளது. ஆகையால் பயனிலைகள் எல்லாம் பன்மையாகவே உள்ளன.

ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட 'ஒவ்வொரு' என்ற தொடர் பொருந்திய வாக்கியங்களுள், நான்கு ஐந்து ஆறும் வாக்கியங்களின் அடிப்படையில் தொகுதியாகப் பார்க்கும் கருத்துப் போக்கே உள்ளது. 'நண்பர்கள் நல்லவர்கள்; எல்லோரும் நல்லவர்கள்; ஒவ்வொருவராக ஆராய்ந்தாலும் எல்லோரும் நல்லவர்கள்' என்ற கருத்தே உள்ளது. ஆகவே, 'நல்லவர்கள்' என்ற பயனிலை கொண்ட ஆறும் வாக்கியமே வழாநிலை.

'நல்லவர்' என்ற பயனிலை பன்மை எனக் கொள்ளத் தக்கதே எனினும், எழுவாயில் 'கள்' விகுதி உள்ளமையால் பயனிலையிலும் 'கள்' விகுதி இருந்தால் பன்மை என்ற தெளிவு ஏற்படும். 'நல்லவர்' என்பது ஒருமைபோல் ஒலித்தலால் செவி அதனைப் பன்மையாக ஏற்பதில்லை. ஆகலின் ஐந்தாம் வாக்கியம் வழு.

நான்காம் வாக்கியம் 'வழு' என்பது மேற்கூறிய காரணத்தால் விளங்குவதாகும்.

இத்தனை இடர்ப்பாடும் இல்லாமல், பழங்கால முறைப் படியே, 'என் நண்பர்கள் எல்லோரும் நல்லவர்கள்' என்று சொல்லிவிட்டுப் போகலாம். நான்கு ஐந்து ஆறும் வாக்கியங் களைப் பற்றிய ஆராய்ச்சியே வேண்டுவ தில்லை. பிழையற்ற தாகிய ஆறும் வாக்கியமும் தேவையில்லை எனலாம்.

ஆனால், மேற்கூறியவாறு ஆங்கில மொழியின் செல் வாக்கால், தமிழர் மனத்தில் சில புதிய கருத்துப் போக்கு கள் ஏற்பட்டுவிட்டன. ஒவ்வொருவராக, ஒவ்வொன்றாக எண்ணித் தொகுதியாகப் பார்க்கும் கருத்து, நன்றாகப் பழகி விட்டது. புதிய கருத்து ஏற்பட்டவுடன், புதிய சொல் ஏற்பட்டே தீரும்; அவ்வாறே புதிய கருத்துப் போக்கு அமைந்தவுடனே புதிய வாக்கிய அமைப்பும் ஏற்பட்டே தீரும். இத்தகைய வளர்ச்சியை ஒருவரும் தடுத்தல் இயலாது.

இவ்வாறே வேறு பல வாக்கியங்களின் போக்கை ஆராய்ந்தாலும், கருத்துக்களின் போக்கை ஒட்டியே அவை அமைவதைக் காணலாம். வேறு சில வாக்கியங்களைக் காண் போம் :

1. அவன் மனைவியின் மனநிலை அறியாதவன்.
2. அவர் மனைவியின் மனநிலை அறியாதவர்.
3. அவர் மனைவியரின் மனநிலை அறியாதவர்.
4. அவர்கள் மனைவியரின் மனநிலை அறியாதவர்கள்.
5. அவர்கள் மனைவியின் மனநிலை அறியாத நிலையில் உள்ளவர்கள்.
6. அவர்கள் மனைவியின் மனம் அறியாத நிலையில் உள்ளவர் கள்.
7. அவர்கள் மனைவியின் மனநிலை அறியாமல் வாழ்கிறார்கள்.
8. அவர்கள் மனைவியின் மனநிலை அறியாதவர்கள்.

முதல் வாக்கியம் பிழையற்றது. எழுவாயும் பயனிலையும் ஒருமையில் அமைந்து மற்றச் சொற்களும் இயைந்துள்ளன. இது ஒருவனைக் குறித்துக் கூறும்போது பொருந்தும். பலரைக் குறித்துக் கூறும்போது வாக்கியம் எவ்வாறு அமையும் ?

இரண்டாம் வாக்கியம் பலரைக் குறித்துக் கூறுவதாகுமா ? தொல்காப்பியனாரின் காலத்தில் அது பலரைக் குறித்துக் கூறுவதாகக் கொள்ளப்பட்டிருக்கலாம். இக் காலத்தில் இதுவும் ஒருவரைக் குறித்துக் கூறும் வாக்கியமாகவே பொருள் தருகிறது. முதல் இரண்டு வாக்கியங்களும் ஒருவரைக் குறிப்பனவே எனின், இரண்டிற்கும் வேறுபாடு இல்லையோ ? உண்டு. முதல் வாக்கியம் உயர்வு இல்லாத ஒருவனைக் குறிக்கிறது. இரண்டாம் வாக்கியம் உயர்ந்தவர் ஒருவரைக் குறிக்கிறது. இந்த உயர்வு தாழ்வு வேறுபாடே தவிர, கருத்தில் ஒருமை பன்மை வேறுபாடு இல்லை.

ஒருகால் மனைவி என்ற சொல் தெளிவான ஒருமை ஆதலின், ஒருவரைக் குறிப்பதாக உள்ளதோ என்று, அதைப் பன்மையாக (மனைவியர் என) அமைத்துக் காணின், மூன்றும் வாக்கியம் ஆகும். ஆனால் 'அவர்' என்பது கணவர் பலரைக் குறிப்பதாக இல்லை. அதற்கு மாறாக, ஒருவருக்கே மனைவியர் பலர் என்றும், அந்த மனைவியரின் மனநிலையை அவர் அறியவில்லை என்றும், எதிர்பாராத பொருளைத் தருகிறது.

அவர் என்ற உயர்சொற்கிளவியை விட்டு, அவர்கள் என்ற தெளிவான பன்மையை அமைத்துக் காணின், நான்காம் வாக்கியம் ஆகும். அது பலரைக் குறித்துக் கூறுவதாக உள்ளது. ஆனால், அவர்களுள் ஒவ்வொருவருக்கும் மனைவியர் பலர் இருத்தல் கூடும் என்ற ஐயத்திற்கு இடம் தருகிறது. ஐயம் சிறிதும் இல்லாதவாறு கருத்தை உணர்த்த வல்லதே சிறந்த வாக்கியம் ஆகும்.

அடுத்துள்ள ஐந்தாம் வாக்கியத்தில் ஐயப்பாட்டுக்கு இடமான மனைவியர் என்ற சொல் நீக்கப்பட்டு, மனைவி என்ற ஒருமைச் சொல்லே அமைக்கப்பட் டுள்ளது. புலவரைக் குறித்துக் கூறும்போது, ஒரு மனைவியின் மனத்தைமட்டும் குறிப்பது பொருந்துமோ என்ற தடை எழும். அதை நீக்கும் பொருட்டே அவர்கள் எல்லோர்க்கும் பொதுவான ' நிலை ' என்னும் ஒருமை அமைக்கப்பட் டுள்ளது. 'மனைவியின் மன நிலை அறியாத நிலை' என்பது ஒன்று. அந்த ஒரு நிலையிலேயே அவர்கள் எல்லோரும் உள்ளனர் என்று பொருள் தெளிவாக உள்ளது. ஆனால் செவி அதை ஏற்க மறுக்கிறது. நிலை என்ற சொல் இருமுறை வருதலால் இனிமை குன்றுகிறது.

ஆறும் வாக்கியத்தில் மனநிலை என்பதில் உள்ள ' நிலை ' மட்டும் எடுக்கப்பட் டுள்ளது. ஆனால் பொருள் சிறிது வேறு படுகிறது. மனத்திற்கு உள்ள நிலைகள் பலவற்றையும் அவ் வப்போது அறியாதிருத்தல் வேறு ; மனத்தைப் பொது வாகவே அறியாதிருத்தல் வேறு; முன்னதைவிடப் பின்னது பெரிய குறையாகும். ஆகவே பொருள் வேறுபடுகிறது.

ஏழாம் வாக்கியத்தில் ' மனநிலை ' என்பதை அவ்வாறே விட்டு, வேறொரு சொல் சேர்க்கப்பட் டுள்ளது. பொருள் ஏறக்குறைய ஒத்துவருகிறது. ஆனால் ஒரு சிறு குறை உள்ளது. அவர்களை நேரே குறைகூறுவதை விடுத்து, அவர்களின் வாழ்க்கை எப்படி உள்ளது என்பதை எடுத்துரைப்பதாக உள்ளது.

' அண்ணன் எங்கே போயிருக்கிறன் ?' என்ற வினு வுக்கு, 'அண்ணன் சென்னைக்குப் போயிருக்கிறன்' என்பது விடை. ' அண்ணன் போன ஊரின் பெயர் சென்னை ' என்று சொல்வதிலும் அதே கருத்து உள்ளது. ஆயினும் வினுவுக்கு ஏற்ற நேர்விடையாக அமையவில்லை. அது போன்ற குறையே ஏழாம் வாக்கியத்தில் உள்ளது.

எட்டாம் வாக்கியத்தில் கணவன்மாரை அவர்கள் என்று பன்மையில் குறித்துவிட்டு மனைவி என்ற ஒருத்தியை மட்டும் குறிக்கலாமோ என்ற ஒரு தடையை எழுப்பலாம். அவர்கள் என்னும் சொல்லை நேரே மனைவியோடு இயைத்தல்கூடாது. 'அவர்கள் அறியாதவர்கள்' என இயைத்து, என்ன அறியாமை என்னும்போது 'மனைவியின் மனநிலை அறியாத அறியாமை' எனக் கொள்ளவேண்டும். அறியாமையோடு இயையும்போது 'மனைவியின் மனநிலை' என்று ஒருமையில் கூறுதல் பொருந்தும்.

பேசுகின்றவரின் மனம் 'மனைவியின் மனநிலை' என ஒருமையில் ஒன்றை முன்னே நினைக்கிறது. பிறகு அதை அறியாதவர் பலர் என்று பலர்க்குப் பொருத்திக் கூறுகிறது.

இவ்வாறு கொள்வது இயற்கை என்பதற்கு ஆங்கில மொழியிலிருந்து ஓர் எடுத்துக்காட்டுக் காண்போம். 'A three years' என்று ஆங்கிலத்தில் எழுதலாம். 'A' என்ற சுட்டு ஒருமை; 'three' என்றும் 'years' என்றும் அடுத்து வருவன பன்மை. 'ஒரு மூன்று ஆண்டுகள்' என்று தமிழில் மொழிபெயர்க்கலாம். இங்கே 'ஒரு' என்னும் ஒருமைஅடை பிழையாகத் தோன்றுகிறது. 'ஒரு மூன்று எருதுகள்' என்பதுபோல் தவறாகத் தோன்றுகிறது. ஆயின் ஆங்கிலத்தில் இது ஏற்றுக்கொள்ளப்படுகிறது. மூன்று ஆண்டுகள்—' three years '—என்பது ஒன்றாக, ஒரு பொருளாகப்—பேசுவோரின் கருத்தில் உள்ளமையால் ஒருமை அடை அமைகிறது என்று அறிஞர் யெஸ்பர்ஸன் இதற்கு அமைதி கூறுகிறார்;* இத்தகைய சொல்வழக்குகள்

---

*In a hundred people (one hundred people) as in a many bottles and a few bottles, grammarians disagree as to the part of speech; for us the question is of little importance, so long as we recognise 'a hundred' etc.

இருப்பதுபற்றி ஆங்கிலமொழியை அவர் புகழ்கிறார்.* 'ஒரு மூன்று ஆண்டுகள்' என்று தமிழில் எழுதுவ தில்லை; ஆயினும் பேச்சு வழக்கில் இது உள்ளது. இத்தகைய கருத்துத் தமிழர்க்கும் உண்டு என்பதையே இது காட்டு கிறது. கருத்து வளர்ந்து இடம் பெற்றுள்ளமையால், இத்தகைய பேச்சுவழக்குகள் இனி எழுத்திலும் இடம் பெற்றுவிடும்.

தமிழிலும் இதற்கு அமைதி கூறலாம். 'ஒரு மூன்று ஆண்டுக்காலம்' என்னும்போது மூன்று ஆண்டுக் காலம் என்பது சேர்ந்து ஒருபொருள்போல் ஒருமையில் உள்ளது. அந்த ஒருமைக்கு அடையாக 'ஒரு' வரலாம் அன்றோ? அதுபோல் 'ஒரு மூன்று ஆண்டுகள்' என்று ஒருவர் கூறும்போது 'மூன்று ஆண்டுகள்' என்பது ஒரு குறிப் பிட்ட காலமாய் அவர்கருத்தில் ஒருமையாக உள்ளது. அதனால் 'ஒரு' என்னும் அடை பொருந்தும் எனலாம். இது தான் நேரிய முறை.

அல்லது, 'ஆண்டுகள்' ஆகுபெயர் என்று சொல்லி அது காலத்தை உணர்த்துவதாகக் கூறி, அந்தக் காலத்திற்கு அடையாக 'ஒரு' வந்ததாகக் கூறலாம். 'அவள் பொற்றொடி' என்பதில், அவள் என்னும் உயர்திணை எழுவாய் 'தொடி' (வளையல்) என்னும் அஃறிணைப் பயனிலையோடு இயைய வில்லை. அதனால், 'பொற்றொடி'யை அன்மொழித்தொகை யாகக் கொண்டு, 'பொற்றொடி உடையவள்' என்னும் பொருள் தந்து, அஃறிணையை உயர்திணையாக்கி அமைதி

---

as a group adjunct.—Otto Jespersen, A Modern English Grammar, p. 108.

*This power of showing grammatically that a plurality is to be considered as a unity of a high order, is unparalleled in any cognate language.—Ibid. p. 108.

கூறவில்லையா ? அதுபோல் இதற்கும் கொண்டு, ‘ ஒரு ’ என்னும் அடை ‘ காலம் ’ என்னும் கருத்துடன் பொருந்தி முடிவதாகக் கூறவேண்டும். இது இலக்கண முறை.

இவ்வாறு மனம் ஓர் எண்ணத்தை எண்ணும்போது அதை விட்டு மற்றொன்றிற்குத் தாவுவது உண்டு. ‘ ஒரு ’ என்ற அடை ‘ மூன்றாண்டுக்காலம் ’ எனக் காலத்திற்குத் தாவியது.*

‘ பெற்ற வயிறு ’ என்று சொல்வது பொருந்துகிறது. ‘ பெற்ற வயிற்றை உடைய தாயின் மனம் ’ ‘ பெற்ற வயிற்றினள் மனம் ’ என்றாலும் பொருந்துகிறது. ஆனால் ‘ பெற்ற மனம் ’ என்று பேச்சில் வழங்குகிறோம். இங்கும் வயிற்றை விட்டுத் தாவும் தாவுதலைக் காண்கிறோம்.

‘உண்ட இளைப்பு’ முதலிய தொடர்களிலும் மனத்தின் தாவுதல் உள்ளது. ‘ உண்டதனால் ஆகிய இளைப்பு ’ என்று முற்றக் கூறாமல் விட்ட காரணம் அதுவே. இளைப்பு எதையும் உண்ணவில்லை ; உண்டவன் இளைப்பை உண்ணவில்லை என்று தருக்கம் பேசுவதால் பயனில்லை. பேச்சு வழக்கு நேரே மனத்திலிருந்து விளைவது. மனத்தின் இயல்பு அறிந்தே அமைதி காணவேண்டும்.†

‘ ஒரு மூன்று ஆண்டுகள் ’ என்பதற்கும் இவ்வாறே அமைதி காணவேண்டும்.

---

*Speech occurs in a variety of more or less abbreviated and incomplete forms. It may be used in silent thinking, in which case the thought processes are attended by abortive speech movements.—Pillsbury and Meader, The Psychology of Language, p. 13.

†The truth is language is closely connected with our psychic life, and from beginning it is only psychology in action.—J. Vendryes, Language, p. viii.

இதுபோலவே,

அவர்கள் மனைவியின் மனநிலை அறியாதவர்கள்

என்னும் தொடரில் 'மனைவியின் மனநிலை அறியாமை' என்பதை ஒன்றாக்கி அந்த அறியாமை அவர்கள் பலரிடமும் உள்ளதாகக் கொள்ளவேண்டும்.

ஆகவே, எட்டாம் வாக்கியம் வழாநிலையாகப் பொருந்துகிறது. பேசும் மக்களின் மனத்தின் போக்கை ஆராய்ந்தால்தான் இத்தகைய வாக்கியங்களின் அமைப்புக்குக் காரணம் காணமுடிகிறது.

ஆங்கிலத்தில் 'superior than' என்று எழுதிய மாணவன் செய்த பிழைக்குக் காரணம் ஆராய்ந்தாலும், அவன்மனம் தமிழில் எண்ணிய எண்ணங்களின் போக்கே காரணம் எனக் காணலாம்.

'மனம்போன போக்கெல்லாம் போக வேண்டா' என்று பெரியார் ஒருவர் மக்களுக்கு நல்வழி உணர்த்திச் சென்றார். மனம் போன போக்கிலேயே போவது வாழ்க்கையில் துன்பம் பயப்பதையும் காண்கிறோம். ஆனால், வாக்கிய அமைப்பைப் பொறுத்தவரையில் மனம் போன போக்கே மொழியின் போக்காக உள்ளது.*

---

*The science of language, like that of law, history, economics, etc., is assigned to the field of the humanistic, or, as they are sometimes called, the sociological sciences. Accordingly, its subject matter is, in a sense, the creation of the human mind.—Pillsbury and Meader. The Psychology of Language, p. 17.

# செல்லப்பன்

ஆறுமாதத் தேர்வு முடிந்தது; விடுமுறையும் கழிந்தது; பள்ளிக்கூடம் திறந்த நாள் அது. மாணவர்கள் மகிழ்ச்சியோடு ஒருவரையொருவர் கண்டு அளவளாவினார்கள். மணி அடித்தது. எட்டாம்வகுப்பில் நானும் மற்றவர்களும் விரைந்துபோய் 'இடம் பிடித்து' இருந்தோம். தமிழ் ஆசிரியர் வந்தார். உயர்ந்த பண்புகளுக் கெல்லாம் உறைவிடமான அவரைக் கண்டதும் எங்கள் மகிழ்ச்சி தெய்வத்தன்மை பெற்றுவிட்டது. வழக்கம்போல் முன்னுரையாக இன்மொழி பேசித் தமிழமுது ஊட்டினார். பிறகு, ஆறுமாதத் தேர்வின் விடைத்தாள்களைப் பற்றிச் சில குறிப்புக்களைக் கூறத் தொடங்கினார். அவற்றில் ஒன்று என்றும் மறக்க முடியாதது. சில சொற்களுக்குப் பகுதி விகுதி பிரித்து எழுதுமாறு வினாத்தாளில் கேட்டிருந்தது. அந்தச் சொற்களில் 'நட' என்பது ஒன்று. அதற்குப் பகுதி விகுதி பிரிக்கத்தெரியாமல் விட்டுவிட்டேன் யான். ஆனால் யாரோ ஒருவன் புதுமையான—தவறான—விடை எழுதியிருப்பதாக ஆசிரியர் எடுத்துக்காட்டினார்; படித்துக்காட்டினார்; "ந: பகுதி; ட: விகுதி" என்பதுதான் அந்தப் புதுமையான விடை. முதலில் சிரித்தோம்; பிறகு திகைத்தோம்.

ஆசிரியர் அதைப் பகுதி விகுதியாகப் பிரித்து விளக்கினார். இலக்கணப் புத்தகத்தில் முன்னமே நடந்ததுதான் அது என்று சொல்லி, அந்தப் பக்கத்தைப் படித்துக் காட்டினார். "நட என்பது ஏவல் ஒருமை வினைமுற்று; அதன் பகுதி நட; விகுதி ஆய். ஆய் விகுதி புணர்ந்து கெட்டது" என்று படித்தார். அன்றுமுதல் ஆய் விகுதியை

யும் அந்த விதியையும் மறக்கமுடியவில்லை. வகுப்பு முடிந்த பின், என் பக்கத்திலிருந்த செல்லப்பன், "ஆய்விகுதி புணர்ந்து கெடும் என்று புத்தகத்தில் எழுதியவரைவிட, 'ந : பகுதி, ட : விகுதி' என்று பிரித்து எழுதியவனே கெட்டிக்காரன்" என்றான். பல ஆண்டுகள் கழிந்துவிட்டன. அந்த மாணவன் சொன்ன குறிப்பும் என் நினைவிலிருந்து நீங்கவில்லை.

நன்னூல் காண்டிகை உரை படித்தபோது செல்லப்பனை நினைத்துக்கொண்டேன். எட்டாம்வகுப்பு இலக்கணப் புத்தகம் எழுதியவர்மேல் அவன் குற்றம் சுமத்தியது தவறு; பவணந்தி முனிவரே அந்தக் குற்றத்திற்குப் பொறுப்பாளி என்று அப்போது எண்ணினேன். சங்கரநமச்சிவாயர் உரை படித்தபோது பவணந்திமுனிவர் காரணர் அல்லர், ஆறுமுகநாவலரே வம்பு விதைத்தவர் என்று கருதினேன். விருத்தியுரை கற்றபோது சிவஞானசுவாமிகள் குற்றவாளியைக் காட்டிக்கொடுத்ததாகத் தெரிந்தது. எவ்வாறு?

"இனி, ஆசிரியர் தொல்காப்பியனார்,

செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்என் கிளவி ஆகிடன் உடைத்தே.*

எனக்கூறியவாற்றான், ஆய் என்னும் விகுதி குன்றி, நட வா உண் தின் அஃகு எனவும் நிற்கும் என உணர்க. நிற்பினும், விகுதியொடு புணர்ந்தனவேயாம். அஃது அச் சூத்திரத்தில் சேனாவரையர் கடாவிடைகளான் விளங்கக் கூறியவாற்றானும் அறிக."

சிவஞானசுவாமிகள் இவ்வாறு எழுதியிருக்கின்றார். படித்தவுடன், தொல்காப்பியனாரே முதல்முதலில் இவ்வாறு

---

*தொல்காப்பியம், சொல். 450.

இலக்கணம் அமைத்தவர் என்று மனம் துணிந்தது. துணிந்தவுடன், தொல்காப்பியனார் அமைத்த முறை முற்றிலும் பொருந்தும் என்றும், செல்லப்பன் கூறியது வடித்தெடுத்த அறியாமை என்றும் உறுதிகொண்டேன். இவ்வாறு உறுதிகொண்ட நாளில்—விருத்தியுரை படித்த அக்காலத்தில்—செல்லப்பன் என் பக்கத்து மாணவனாக இருந்திருந்தால், அவனை எளிதில் விட்டிருக்கமாட்டேன். குறைந்தது ஆறுமணிநேரம் சொற்போர் புரிந்து அதன் பயனாக அவன் நட்பையும் துறந்து, கருத்துவேற்றுமையை நன்றாகப் பயன்படுத்திக்கொண்டிருப்பேன். ஆனால் உலகம் அதற்கு இடம் தராமல் போயிற்று. அவனைப் புகைவண்டித் துணைவன் (Railway guard) ஆகச் செய்த உலகம் என்னைத் தமிழ் மாணவனாக வைத்திருந்தது.

வழிபடும் கடவுளைத் தூற்றினாலும் பொறுத்துக்கொண்டிருப்பேன்; ஆனால் தொல்காப்பியனாரைக் குறைகூறினால் கொதித்தெழுவேன்; அத்தகைய பற்றோடு தொல்காப்பியம் படிக்கத்தொடங்கிய காலம் அது. சேனாவரையர் உரையைப் படித்துவந்தேன். அதில் ஆய் விகுதி பற்றி விளக்கிவிட்டுக் கடாவிடைப் பகுதியில்,

> அவர்க்கது கருத்தன்மையின் உரையாசிரியர்க்கும் அது கருத்தன்மை அறிக*

என்று முடித்திருந்தார்.

அந்தச் சூத்திரத்திற்கு வேறு உரையும் உண்டென்பது அப்போதுதான் தெரியவந்தது. உடனே உரையாசிரியர் இளம்பூரணர் உரையைப் பார்க்கவேண்டும் என்று முயன்றேன். ஆனால் அந்த ஊரில் அப்போது இளம்பூரணர் உரை

---

*தொல்காப்பியம், சொல். 450.

கிடைக்கவில்லை. மற்ருேர் எண்ணம் எழுந்தது. தொல்காப்பியச் சூத்திரத்தையும் சேனுவரையர் உரையையும் கண்ணை மூடிக்கொண்டு (அதாவது, நம்பிக்கைமட்டும் கொண்டு) படித்தோமே, இப்போது வேறுமுறையில்—பொருந்துமா, பொருந்தாதா என்ற ஆராய்ச்சிமுறையில்—படிக்கலாமே என்று எண்ணினேன். செல்லப்பன் நினைவு மறுபடியும் வந்தது.

> செய்யாய் என்னும் வாய்பாட்டதாகிய முன்னிலை முற்றுச் சொல் ஆய் என்னும் ஈறுகெடச் செய் என்னும் சொல்லாய் நிற்றல் உடைத்து.
>
> ஆகிடன் உடைத்து என்றதனுல், செய்யாய் என ஈறு கெடாது நிற்றலே பெரும்பான்மை என்பதாம்.

இது இப்படித்தான் இருக்கவேண்டும் என்று சொல்வதில் சேனுவரையர்க்கும் செல்லப்பனுக்கும் கருத்து வேற்றுமை இருக்கலாம். ஆனல் இது இப்படித்தான் இருக்கிறது என்று சொல்வதில் கருத்துவேற்றுமைக்கு இடம் இல்லை. இருந்தால், இருவருள் ஒருவர் அறிந்தது தவறு என்று திண்ணமாகச் சொல்லிவிடலாம். சேனுவரையர் என்ன எழுதியிருக்கின்ருர்? செய்யாய் என ஈறுகெடாது நிற்றலே—நடவாய் கிடவாய் உண்ணுய் தின்னுய் என ஆய் விகுதியோடு நிற்பதே பெரும்பான்மை என்று எழுதியிருக்கின்ருர். எங்கே பெரும்பான்மை? செய்யுளிலா? உரை நடையிலா? பேச்சுவழக்கிலா? எங்கே பெரும்பான்மை? இந்த உண்மை காணச் சேனுவரையர்க்கு உள்ள உரிமை செல்லப்பனுக்கும் உண்டு.

1330 குறள் படித்திருந்தும் ஒரு குறளில்தான் செய்யாய் என்ற வாய்பாட்டுச் சொல் இருப்பதாக நினைவு வந்தது.

கருமணியின் பாவாய்நீ போதாயாம் வீழும்
திருநுதற் கில்லை இடம்*

திருவாசகத்தில் சில இடங்கள் நினைவுக்கு வந்தன. மற்றச் செய்யுள் நூல்களைப் புரட்டிப் புரட்டிப் பார்த்தேன். ஆய் விகுதியோடு ஏவல் ஒருமை வரும் இடம் அரிதில் தேடிக் காணவேண்டி யிருந்தது. சில நூல்களில் நூல் முழுமைக்கும் இரண்டோர் இடங்களே கிடைத்தன. சங்க நூல்களில் காண்பது அரிதாயிற்று. உரைநடை நூல்களில் மிக அருகிய வழக்கே என்பதும் தெரியவந்தது.

சேனாவரையர் காட்டிய உதாரணங்களையே மறுபடியும் படித்துப் பார்த்தேன். உண்ணாய் தின்னாய் கிடவாய் நடவாய் தாராய் வாராய் என்பவை அவர் காட்டிய உதாரணங்கள். இவற்றைப் பேச்சு வழக்கிலே காணமுடியுமோ என்று ஆராய்ந்தேன். மருந்துக்கும் காணமுடிய வில்லை. நாடக மேடைப் பேச்சிலும் இல்லை. உண்மை இவ்வாறு இருக்க, சேனாவரையர் 'பெரும்பான்மை' என்று குறித்தது எவ்வாறு பொருந்தும் எனத் தயங்கினேன். தொல்காப்பியச் சூத்திரத்தை மறுபடியும் பார்த்தேன்.

செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்என் கிளவி ஆகிடன் உடைத்தே.

இந்தச் சூத்திரத்தைப் படித்ததும் தயக்கம் மிகுந்தது. பேச்சு வழக்கில் குதிரைக்கொம்பாய் நூல்வழக்கில் எங்கோ ஒன்றாய்க் காணப்படும் ஆய் விகுதிக்குத் தொல்காப்பியனாரும் பெரும்பான்மை தருகின்றாரே எனத் திகைத்தேன். தொல்காப்பியனார் தவறு செய்திருக்கமாட்டார் என்றே துணிந்தேன். உண்மைப்பொருள் வேறு இருக்கவேண்டும்

* திருக்குறள், 1123.

என்று தோன்றிற்று. உண்மை ஒருவாறு விளங்கப் பல ஆண்டுகள் ஆயின. கீழ்வரும் குறிப்புக்கள் அதைத் தெரிவிக்கும்.

(1) நடந்தான் என்பது வினை. நட என்பது ஏவல் வினை. முன்னதை ஆங்கிலத்தில் indicative mood என்பர். பின்னதை imperative mood என்பர். அந்த வேறுபாடு தமிழ் வினைச்சொற்களுக்கும் வேண்டும். சிவஞான சுவாமிகள் வழிகாட்டியிருக்கின்றார். 'நடவாமடிசீ...' என்ற நன்னூல்[1] சூத்திர உரையில் ஏனை வினை என்றும் ஏவல் வினை என்றும் அவர் செய்த பாகுபாடு போற்றத் தகுந்தது.

(2) ஏவல் வினைக்கு விகுதி வேறு, ஏனை வினைக்கு விகுதி வேறு. இந்த வேறுபாடு தொல்காப்பியனார் காலத்தில் தெளிவாகவில்லை; பிற்காலத்தில் தெளிவாகிவிட்டது.[2]

(3) பவணந்தி முனிவர் முன்னிலை வினை விகுதிகளைக் கூறும் இடங்களில்[3] ஏனைவினைக்கு விகுதி வேறாகவும் ஏவல் வினைக்கு விகுதி வேறாகவும் கூறியது நல்ல முறை.

(4) சொற்களின் உருவத்தைக் காப்பது நூல்வழக்கு - இலக்கியம். ஆனால் சொற்கள் தொடர்ந்து அமையும் அமைப்புமுறையே எந்த நாளும் காப்பது பேச்சு வழக்கு. அதனால், ஒரு மொழியின் உயிர்நிலை பேச்சுவழக்கில் உள்ளது என்பர் மொழிநூலார். தமிழில் பேச்சுவழக்கு, ஏவல்வினைக்கு வேறு விகுதியும் ஏனை வினைக்கு வேறு விகுதியும் தந்து வழங்குகின்றது. ஆதலின் அதுவே உண்மை.

---

1. நன்னூல், 137.
2. தொல்காப்பியம், சொல். 223, 224.
3. நன்னூல். 335, 337.

(5) பேச்சுத் தமிழில் உம்,உங்கள் (இரும் இருங்கள்) என்பவற்றை ஏவல் வினைப்பன்மைக்கும், ஈர், ஈர்கள் (இருந் தீர், இருந்தீர்கள்) என்பவற்றை ஏனைவினைப் பன்மைக்கும் (முன்னிலைப் பன்மைக்கும்) விகுதிகளாக வழங்குகின்றோம்.

(6) நூல்வழக்கில் ஏவல்பன்மைக்கு மின் விகுதி என வேறொன்று உள்ளது. அது ஏனைவினைக்கு மிகுதியாக வருவதே இல்லை. பவணந்திமுனிவர் இதனை ஏவலுக்கு என்று வரையறுத்துள்ளார்.[1]

(7) பன்மையில் இப்படி வரையறை இருப்பது போலவே ஒருமையிலும் இருக்கவேண்டும் ; இருக்கின்றது.

(8) பேச்சுத் தமிழில் ஏனைவினை (முன்னிலை) ஒருமை யில் ஆய் விகுதியாக வழங்குகின்றது. ஆதலால், ஏவல் ஒரு மைக்கு அது விகுதியாக வருவது பொருந்தாது.

(9) பேச்சுத் தமிழில் ஏவல் ஒருமைக்கு விகுதி இல்லை. பகுதியையோ நட, வா என ஏவல் ஒருமையாக வழங்குகின்றோம்.

(10) பவணந்திமுனிவர் இந்த வேறுபாடு கண்டு,ஏனை வினை (ஒருமை)க்கு விகுதிகூறி, ஏவல் ஒருமைக்கு விகுதி கூறாமல், நட, வா முதலியவற்றின் ஈறே ஏவல் ஈறு என்று கூறினார்.[2]

(11) வடநூல் வழக்கையே பின்பற்றும் வீர சோழிய ஆசிரியரும், தாதுக்களை (வினைப்பகுதிகளைப்) படைக்கும் போது, ஏவலொருமைபோல் படைத்துக்கொள்க என்றதும் இதனாலேயே.[3]

---

1. நன்னூல், 337.
2. நன்னூல், 335.
3. வீரசோழியம், தாதுப்படலம், 1.

(12) திராவிடமொழியி லிருந்து எண்ணாயிரம் ஆண்டு கட்குமுன்பே பிரிந்த பிராஹுய் மொழியில்—பெலுசிஸ்தானில் வழங்கும் பழைய மொழியில் இன்னும் பகுதியே ஏவல் ஒருமையாக உள்ளது.[1]

(13) ஏவல் ஒருமையே எந்த மொழியிலும் மிகப் பழங்காலத்தில் அமைந்த வினைச்சொல் என்பது மொழிநூலார் கொள்கை.[2]

(14) ஏவல் ஒருமையில், ஏவப்பட்டவன் முன்னே இருப்பதாலும் நேரே அவனைக் குறித்தே பேச்சு நிகழ்வதாலும், அவனைக் குறிக்கும் விகுதி (பாலறி கிளவி) அந்த வினைச்சொல்லுக்கு வேண்டா என்பதும் மொழிநூலார் கொள்கை.[3]

(15) வடமொழியில் இவ்வாறு இல்லை. ஆயினும், வடமொழியுடன் தொடர்புள்ள வட இந்திய மொழிகளாகிய

---

1. Denys De S. Bray—The Brahui Language, p. 117.

2. If it be true that language, both gesture and spoken, developed out of originally direct life-serving activities, then sentences expressing a need should be regarded as the most primitive and the other more elaborate types as later refinements.—Pillsbury and Meader, The Psychology of Language, p. 280.

3. As that party is almost invariably present and is directly addressed, there is no need of any special characterisation of it, usually even of any specific mention of it, so that the subject of the imperative is usually omitted, and even in highly inflected languages the verbal form has often no special formative elements to suggest the subject.—p. 280.

இந்தி, வங்காளி போன்றவற்றில் திராவிடமொழியின் செல்வாக்கால் இந்த இயல்பு காணப்படுகின்றது.[1]

(16) வடமொழியில் பகுதிகள் செயற்கையாக இலக்கணக்காரரால் படைத்துக்கொள்ளப்பட்டவை.[2]

(17) வடமொழியில் உள்ள பகுதிகளை மக்கள் எந்தக் காலத்திலும் பேசியிருக்கமுடியாது என்கிறார் ஆட்டோ யெஸ்பர்ஸன் என்னும் மொழிநூலாசிரியர்.[3]

(18) தமிழில் உள்ள வினைப்பகுதிகள் அப்படிப்பட்டவை அல்ல. அன்றுமுதல் இன்றுவரை கற்றவர் முதல் கல்லாதவர்வரை நட வா முதலிய பகுதிகளைப் பேசி வருகின்றனர்.

(19) ஆகையால், சேனாவரையர் சுவாமிநாததேசிகர் முதலானோர் இத்துறையில் வடமொழியைப் பின்பற்றியது பொருந்தவில்லை. " தமிழ்ச் சொல்லிற் கெல்லாம் வடநூலே தாயாகி நிகழ்கின்றமையின் அங்குள்ள வழக்கெல்லாம்

---

1. In Dravidian the simple root is used for imperative singular; in modern Hindi and Bengali we have the same thing resulting as the finale of a long history, although it looks like an approximation to the Dravidian usage.—S. K. Chatterjee, The Origin and Development of the Bengali Language, p. 895.

2. Roots are essentially the creations of grammarians. —Ibid.

3. The highly abstract significations assigned to the Sanskrit roots would in themselves be sufficient to preclude the idea of such a language existing as a practically usefull means of communication. No; of a certainty, roots never were spoken words.—Otto Jesperson Progress in Language, p. 118.

தமிழுக்கும் பெறும்" என்று பெருந்தேவனார் கூறியது ஒரு சிறிதும் பொருந்தாக் கூற்றாகும்.[1]

(20) வடமொழியில் ஏவல் ஒருமைக்கு விகுதிகூறியது போல், தமிழில் நட முதலியவற்றிற்கு ஆய் விகுதி கூறவேண்டியதில்லை. வடமொழிபோல் அல்லாமல் தமிழ் இயற்கையான பேச்சுவழக்கை அடிப்படையாகக் கொண்டது.

(21) செய்யாய் என்னும் எதிர்மறை வினைச்சொல் செய் என்னும் ஏவலாகும் என்று இளம்பூரணர் கூறியதைச் சேனாவரையரும் சிவஞான சுவாமிகளும் மறுத்தது பொருந்தும். 'எதிர்மறுத்தது' என்ற சொல்லை[2] ஆண்ட தொல்காப்பியனாருக்கு அது கருத்தானால், "செய்யாய் என்னும் எதிர்மறைவினைச் சொல்" எனச் சூத்திரம் அமைத்திருப்பார். ஆதலால் தொல்காப்பியனாருக்கு அந்தக் கருத்து இல்லை.

(22) எல்லா வினைமுற்றுக்களுக்கும் பகுதி விகுதி இருப்பதால் ஏவல் ஒருமை முற்றுக்கும் பகுதி விகுதி இருக்கவேண்டும் என்று கொள்வது தவறு. எல்லாப் பொருள்களையும் வேகவைத்து உண்பதால், பழங்களையும் அவ்வாறு வேகவைத்து உண்ணவேண்டும் என்பது போன்றது அது. பழங்களைப் போல, ஏவல் ஒருமை வினைமுற்றுக்கள் தொடக்கத்திலிருந்து இயற்கையாக அமைந்து பயன்படுகின்றவை.

(23) பவணந்திமுனிவர் நட வா முதலியவைகளை ஏவலொருமை வினைமுற்றுக்கள் என்றும், அவற்றைப் பகுதி விகுதியாகப் பிரித்தல் கூடாது என்றும் கருதியே 'செய் என் ஏவல் வினைப் பகாப்பதம்' என்றார். அவர் கருத்திற்கு

1. வீரசோழியம், தாதுப்படலம், 1—உரை.

2. தொல்காப்பியம், சொல். 236.

ஏற்ற உரை மயிலைநாதருரையே.[1] சங்கரநமச்சிவாயர் உரை ஒருவாறு பொருந்தும். சிவஞான சுவாமிகள் உரை பொருந்தவில்லை.

(24) இக்கருத்தை வற்புறுத்தவே, பவணந்திமுனிவர் ஏவல் ஒருமை ஈறு 'ஆய்' என்று கூறுமல், நட வா முதலிய வற்றையே கருதி ஏவலின் வரூஉம் எல்லா ஈற்றவும் என்ருர்.[2]

(25) தமிழ்மொழியின் அமைப்பின்படி செய்யீர் என்பது ஏவலாக வரக்கூடாது. செயம்மின் செய்யும் என்பனவே ஏவல். ஆனல் செய்யுளில் அழகு நோக்கிச் செயற்கையாகச் சில இடங்களில் ஏனவினையின் 'ஈர்' விகுதியை ஏவலுக்கு அமைப்பதும் உண்டு (உண்ணீர், வாரீர், தாரீர்.) அது விதி அன்று; விதிவிலக்கான வழக்கு ஆகும்; அது எங்கோ ஓர் இடத்தில் வருவது. அதுபோல், ஒருமையில் ஏனை வினைக்கு உரிய 'ஆய்' விகுதியும் எங்கோ ஓர் இடத்தில் ஒலியினிமை முதலியன நோக்கி ஏவல் ஒருமை வினைக்கு அமையும். அத்தகைய இடங்களையே தொல்காப்பியனார் 'ஆகிடன் உடைத்தே' என்னும் தொடரில் சுட்டுகின்ருர்.

(26) ஈர் விகுதி ஏவலுக்கு அமைந்த இடங்கள் தொல்காப்பியனார் காலத்தில் இல்லாதிருந்திருக்கலாம். இருந்திருப்பின் அவர்,

செய்யீர் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்ம்மின் கிளவி ஆகிட னுடைத்தே

எனச் சூத்திரம் செய்திருப்பார் அல்லரோ? அப்படி ஒரு சூத்திரம் இருந்திருப்பின், அதற்குச் "செய்யீர் என்னும்

1. நன்னூல், 136. மயிலை, பக். 61.
2. நன்னூல், 335.

முற்றுச்சொல் ஈர் விகுதி கெட்டு மின் விகுதி ஏற்றுச் செய்ம்மின் என்று நிற்றலும் உண்டு. ஆகிடன் உடைத்தே என்றதனால் ஈர்கெடாது செய்யீர் என நிற்றலே பெரும் பான்மை" எனப் பொருள் கொள்ளுதல் பொருந்துமா? பொருந்தாது.

(27) செய்யீர் என்பது ஏவற்பொருளில் வரும் இடம் சிறுபான்மை என்பதே கருத்தாற்போல், செய்யாய் என் பது ஏவற் பொருளில் வரும் இடம் சிறுபான்மை என்பதே ஆராய்ந்துவரும் சூத்திரத்தின் கருத்து. சேனாவரையர் அதற்கு நேர்மாறாக எழுதியுள்ளார்.

(28) தொல்காப்பியனார் கருத்து, சொல்லின் உருவம் வேறுபடுதலைப் பற்றியது அன்று. சொல்லின் பொருள் வேறுபடுதலைப் பற்றியது. ஆதலால், செய்யாய் என்னும் சொல்வடிவம் செய் என்னும் வடிவம் பெற்றது என்று உரைப்பது பொருந்தாது. "செய்யாய் என்னும் ஏனை வினை (indicative), செய் என்னும் ஏவல் வினையாகப் (imperative) பொருள்படும் இடமும் உண்டு" எனச் சூத்திரத்திற்குப் பொருள் காண்பது பொருந்தும்.*

(29) செய்யாய் என்பதை 'முன்னிலை வினைச்சொல்' என்று பெயர் கொடுத்து, 'செய்' என்பதைப் பெயர்

---

*The imperative shares certain of its forms with the indicative; yet there is no reason to regard these as borrowed from the indicative. I am inclined to think, on the contrary, that the imperative is the first in date, and that, inversely to what we are taught, when there is identity, it is the indicative which is the borrower. Perhaps those brief forms, such as come! give! stop! are older than any other part of the conjugation.—M. Breal, Semantics, pp. 235–6.

கூறுமல் கிளவி என்று தொல்காப்பினர் சூத்திரம் அமைத்த முறைக்குக் காரணம் உண்டு. அந்தக் காரணம் மேற்கண்ட கருத்துப் பற்றியதே என்பது தொல்காப்பியச் சொற்போக்கில் பயின்றவர்கள் எளிதில் அறியலாம்.

(30) எனவே, நட என்பதே ஏவல் ஒருமையின் வடிவம் ; அதற்கு ஆய் விகுதி புணர்த்தலும் வேண்டா ; கெடுத்தலும் வேண்டா.

இவ்வளவு எண்ணங்களுக்கும் தூண்டுகோலான செல்லப்பன் இன்று எங்கோ இருக்கிருன் ! அவன் இதனைப் படித்துத் தெரிந்து என்னேடு அஞ்சல் உலகிலேனும் அளவளாவுவானே ?

## ‘கல்லாத பேர்களே நல்லவர்கள்’

மொழி என்பது கருத்தை உணர்த்தப் பயன்படும் கருவி. கருத்துக்கள் மக்களிடையே பெருகப் பெருக, மொழி விரிவடையும்; சொற்கள் பெருகும். இது இயற்கை.

புதிய கருத்துக்கள் பரவும்போது புதிய சொற்கள் ஏற்படுகின்றன. அவை ஏற்படுதல் இரு வகைப்படும். ஒன்று, கருத்துக்கள் எந்த மொழியாரிட மிருந்து வந்தனவோ, அந்த மொழியி லிருந்தே அவற்றிற்கு ஏற்ற சொற்களைக் கடன் வாங்குதல்; மோட்டார், பெனிசிலின் முதலிய சொற்களைத் தமிழ் பெற்றது அப்படியே ஆகும். மற்றொருவகை: கருத்துக்கள் பரவும் போது அவற்றைக் கற்கும் மக்கள் தம் மொழியி லிருந்தே ஓரளவு பொருந்திவரும் சொற்களை ஆக்கிக்கொள்ளுதல்; புகைவண்டி, வானொலி, நீர்மூழ்கி முதலிய சொற்கள் அவ்வாறு தமிழில் அமைந்தனவே ஆகும்.*

---

*When a speaker or writer wants to express a notion, for which his native language has no word, while one is known to him in another language, two ways are open to him. Either he may take the foreign word and use it in the middle of his own language, with or without such slight changes in sound, spelling or inflexion as may make it more palatable to his countrymen, or he may try to coin a new term by means of native speech material, either a compound or a derivative of some existing word. Which of these two procedures is the more natural? It

ஆனால், சில சொற்கள் இந்த இருகாரணத்தாலும் ஏற்பட்டவை அல்ல; அவை புகுந்த வரலாறு தனிவகையானது.

எடுத்துக்காட்டாக, சூரியன் சந்திரன் என்னும் சொற்களைக் காணலாம்.

சூரியனும் சந்திரனும் தமிழர்க்கு வெளிநாட்டிலிருந்து வந்த புதிய பொருள்கள் அல்ல. தமிழர் அவற்றை அறியாதவர் அல்லர். தமிழும் தமிழ்நாடும் அமைவதற்கு முன்னிருந்தே அவை இந்த மண்ணின்மேலும் இந்த மண்ணில் வாழ்ந்த மக்களின்மேலும் ஒளிவீசி வந்தவை. ஆகவே இவை புதிய பொருள்கள், புதிய கருத்துக்கள் எனக் கொண்டு, பிறமொழியி லிருந்து கடன் வாங்கப்பட்ட சொற்கள் அல்ல. வடமொழியி லிருந்து வந்த சொற்கள் ஆகையால், இவை தமிழர் தம் மொழியிலே படைத்துக்கொண்ட சொற்களும் அல்ல.

இவற்றை உணர்த்த மிகப் பழங்காலத்தி லிருந்தே ஞாயிறு திங்கள் என்னும் சொற்கள் இருந்துவந்தன. புறநானூறு முதலிய இலக்கியத்தின் மிகப் பழைய பாட்டுக்களிலும் ஞாயிறு திங்கள் என்னும் சொற்கள் உள்ளன.*

ஆடம்பர இச்சையோடு சேரவைத்து எண்ணக்கூடிய புதுமைவேட்கை ஒன்று மக்களின் உள்ளத்தில் உள்ளது. பழைய சொற்கள் நாகரிகக் குறைவானவை என்று கருதி

---

will be hard to answer this question beforehand and once for all. As a matter of fact some nations prefer one way, and others another, and the same nation may even at various periods of its life change its preference in this respect.—Otto Jespersen, Linguistica, p. 441.

*செஞ்ஞாயிற்று நிலவுவேண்டினும்
வெண்டிங்களுள் வெயில்வேண்டினும்—புறநானூறு, 38.

அவற்றை விட்டுப் புதிய சில சொற்களைப் பேச விரும்புவதற்கு அது காரணம் ஆகிறது. பழைய சொல் தம் தாய்மொழிச்சொல்லாக இருக்கும் ; புதிய சொல் பிறமொழிச் சொல்லாக இருக்கும். இருப்பினும் தம் உரிமையான சொல்லை விட்டு, உரிமையற்ற பிறமொழிச் சொல்லை வழங்குவர். தாம் பிறந்து வாழும் ஊரைப் பழித்து வெளியூரைப் புகழ்வது போலவும், தம் பழக்க வழக்கங்களையும் நடை உடைகளையும் தாழ்வு எனக் கருதிப் பிறருடைய பழக்க வழக்கங்களையும் நடை உடைகளையும் கண்மூடித் தன்மையுடன் போற்றுவது போலவும், இதுவும் மக்களிடையே உள்ளது. தம்மைப் பற்றிக் குறைவாக எண்ணும் தாழ்வு மனப்பான்மையே இதன் அடிப்படையில் விளங்குவது. 'சோறு' என்ற தமிழ்ச் சொல்லைச் சொல்லக் கூசி, ரைஸ் என்ற ஆங்கிலச் சொல்லையோ, சாதம் என்ற வட சொல்லையோ தமிழர் சிலர் சொல்வதற்கு இதுவே காரணம் ஆகும். திலகர், தாகூர், காந்தியடிகள், வ. உ. சிதம்பரனார், திரு. வி. க., பாரதியார் முதலானவர்கள் தோன்றித் தாய்மொழிப் பற்றையும் கடமையுணர்ச்சியையும் நிரம்ப ஊட்டிய பிறகும், தமிழர் சிலர் கூடினால் தாய்மொழியில் பேச வெட்கி ஆங்கிலத்தில் உரையாடுவதிலும் இதனைக் காணலாம்.

சூரியன் சந்திரன் என்னும் பிறமொழிச் சொற்களை வழங்குவதில் இத்தகைய 'அந்நிய மோகம்' இருப்பதாகச் சொல்வதற் கில்லை. இவற்றிற்கு முன் நெடுங்காலமாக வழங்கிவந்த ஞாயிறு திங்கள் என்னும் சொற்கள் நாகரிகக் குறைவாகக் கருதப்பட வில்லை. நாகரிகக் குறைவாகக் கருதப்படும் சொற்களானால், அவை சிறு பகுதியினராகிய மக்களாலேனும் ஒரு பக்கம் பேசப்பட்டுவரும். எடுத்துக் காட்டாக, 'சாதம்' 'ரைஸ்' என்னும் சொற்கள் சிலரிடையே வழங்கிவர, 'சோறு' என்னும் சொல்லும் சிலரிடையே

வழங்கிவருகிறது. ‘ சாம்பார் ’ என்னும் சொல் சிலரிடம் வழங்கிவர, ‘ பருப்புக்குழம்பு ’ என்னும் சொல்லும் வேறு சிலரிடம் வழங்கிவருகிறது. (‘ மதர் ’ ‘ பாதர் ’ என்னும் சொற்களைச் சிலர் வழங்க, மற்றவர் ‘ அம்மா ’ ‘ அப்பா ’ என்ற சொற்களை வழங்குகின்றனர்...?) ஆனால் அவ்வாறு ஞாயிறு திங்கள் என்னும் சொற்கள் எவரிடமும் வழங்கக் காணோம். அதனால், சோறு, குழம்பு என்பவைபோல் நாகரிகக் குறைவாகக் கருதி விடப்பட்டன என்று கூறல் இயலாது.

தவிர, இலக்கியத்தில் பயின்று வழங்கும் சொற்கள் எப்போதும் நாகரிகக் குறைவாகக் கருதப்பட வில்லை. அவற்றிற்குப் புலவர்கள் அழியாப் பெருமை தந்து காப்புச் செய்து செல்கின்றனர் எனலாம். அதனால் வழிவழி யாகப் போற்றி இலக்கியம் கற்கும் மக்களின் வாயில் வழங்கி அவற்றின் மதிப்புக் குன்றாமல் இருந்துவருகிறது. சோறு குழம்பு முதலிய தமிழ்ச் சொற்கள் தமிழ் இலக்கியத் தில் பயின்று வரும் சொற்கள் அல்ல ; எங்கோ ஒரு சில இடங்களில் அருகி வழங்குவன. அவற்றின் பெருமை இலக் கியத்தால் நிலைநிறுத்தப்பட வில்லை. ஞாயிறு திங்கள் என் னும் சொற்கள் தமிழ் இலக்கியத்தில் பயின்று வருவன ; புலவர் வாயால் பெருமை பெற்றவை. எனவே, அவை நாக ரிகக் குறைவாகக் கருதப்பட்டவை என்று கூறுதல் பொருந் தாது.

ஆகவே, இச்சொற்களின் இடத்தில் சூரியன் சந்திரன் வந்து வாழ்வதற்கு வேறு தக்க காரணம் இருத்தல்வேண்டும்.

குறித்த ஒரு தொழில் கருதி ஒருபொருளைக் கடையில் வாங்கி வருகிறோம். எவ்வாறோ, அந்தப் பொருள் வேறொரு வகையில் பயன்படுமானால், குறித்த தொழிலுக்கு இன்னொரு பொருள் வாங்க வேண்டி ஏற்படுகிறது. பென்சில் சீவுதற்கு

என்று வாங்கிய கத்தி, பற்குச்சி அறுப்பதற்குப் பயன் பட்டுக் கூர் மழுங்குமாயின், பென்சில் சீவ வேறொரு கத்தி தேவையாகிறது. மேலாடைக்கு (அங்கவஸ்திரத்துக்கு) என்று வாங்கிய துணி, உடம்பு துடைக்கப் பயன்பட்டுவிட்டால் மேலாடை வேறொன்று வாங்க நேர்கிறது. சொற்களிலும் இவ்வழக்கம் உள்ளது. ஒரு பொருளைக் குறிக்க ஏற்பட்ட சொல், அப்பொருளைக் குறிக்காமல் வேறொன்றுக்குப் பயன்படும்போது, அதற்கென வேறு சொல் தேட வேண்டியுள்ளது. சொற்கள் எல்லாம் கருத்தை உணர்த்தப் பயன் படும் கருவிகள் என்னும் மொழிநூல் உண்மையை இங்குக் காணலாம.

ஞாயிறு திங்கள் என்னும் சொற்களின் இடத்தில், சூரியனும் சந்திரனும் வந்த கதை இதுதான். முதலில், வானத்தில் காணும் ஒளிப்பிழம்புகளை உணர்த்தவே ஞாயிறு திங்கள் என்னும் சொற்கள் ஏற்பட்டன. மக்களின் அறிவு வளர வளர, நாள், வாரம், மாதம், ஆண்டு என்னும் காலப் பாகுபாடுகளைப் பற்றி அறியவும் அவற்றைத் தக்க சொற்களால் உணர்த்தவும் தொடங்கினர். ஏழு கோள்களின் பெயரால் வாரத்தில் ஏழு நாட்களுக்கும் பெயர் வைத்தனர். ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழம் வெள்ளி சனி என்னும் ஏழன் பெயரால், ஞாயிற்றுக்கிழமை திங்கட்கிழமை முதலிய பெயர்கள் அமைந்தன. வடமொழி ஆங்கிலம் முதலிய மற்ற மொழிகளிலும் ஏறக்குறைய இவ்வகைப் பெயர்களே உள்ளன.

பெயர்கள் அமைந்த பிறகும் சிறு சிறு மாறுதல்கள் ஒலியிலும் வடிவிலும் ஏற்படுதல் மொழியின் இயற்கை. ஆங்கிலத்தில் உள்ள monday என்ற சொல் moonday என்பதன் திரிபே ஆகும். முயற்சிச் சிக்கனம் கருதியும் தெளிவு கருதியும் அவ்வாறு மாறுதல்கள் ஏற்படும். 'உண்'

என்பது அடிச் சொல். அதிலிருந்து பிறந்த சொற்களாகிய ஊண், உணவு, உண்ணு, உண்டி என்பவற்றில் உள்ள திரிபும் சேர்ப்பும் வெவ்வேறு பொருளை உணர்த்த (வேறு பட்டு விளங்க) வேண்டிய தெளிவு கருதி ஏற்பட்டவை. 'கால்' என்னும் அடிச்சொல்லி லிருந்து பிறந்த 'கால்பு' என்பது முயற்சிச் சிக்கனம் பற்றிக் 'காம்பு' என்று திரிபு உற்றது. இவ்வாறு திரிபும் சேர்ப்பும் அமைந்தால், ஒவ்வொரு பொரு ளுக்கு ஒவ்வொரு சொல்லாக, எல்லாச் சொற்களும் தனித்து வாழும் ஆற்றல் பெறுகின்றன. நட, நடை, நடத்தல், நடத்தை, நடப்பு, நடவடிக்கை முதலிய சொற்கள் ஒரே அடிச் சொல்லி லிருந்து பிறந்தபோதிலும் தெளிவான வேறு பட்ட வடிவங்கள் பெற்று விளங்குவதால், தனித்தனியே வாழ்வு பெற்றுள்ளன.

இவ்வாறு வாழ்வு பெற்று உரிமையோடு சொற்கள் விளங்கவேண்டுமானால், அவற்றின் வடிவம் தெளிவாக வேறுபடுதலோடு, மேலே கூறியவாறு ஒலிப்பதற்கு எளிய ஒலிகளாய் முயற்சிச் சிக்கனம் உடையனவாய் இருத்தலும் வேண்டும். சொற்கள் கருவிகளே ஆதலின், அவற்றைப் பேசும் மக்கள், அவை எளிய கருவிகளாக, எளிதில் ஒலிக் கும் ஒலிகளாக இருத்தல் வேண்டும் என விரும்புகின்றனர். குறைந்த முயற்சியில் நிறைந்த பயனைப் பெறுவதே பேசும் மக்களின் போக்கு. ஆகையால் அடிக்கடி வழங்கும் சொற் கள் சிறு சிறு வடிவங்களோடு இருக்கவேண்டும் என்று இயற்கையாகவே விரும்புகின்றனர். அடிக்கடி பேச்சில் வரும் நான், நீ, நாம், யார், ஏன், பார், கேள், கால், கை, தோள் முதலிய சொற்கள் பல ஓரசைச் சொற்களாக இருத் தல் காணலாம். என்றோ ஒரு நாள் ஒருவேளை பேசப்படும் சொல்லாக இருந்தால் அது நீண்ட சொல்லாக இருந்தாலும் கவலை இல்லை. பயின்று வழங்கும் சொற்கள்மட்டும்

குறுகிய வடிவம் உடையனவாக இருத்தல் வேண்டும்.* அப்படி இல்லையானால், பேசும் மக்களின் நாக்கு அவற்றின் வடிவங்களைக் குறுக்கிவிடுகிறது; அல்லது மாற்றிவிடுகிறது. ‘கொண்டுவா’ என்ற சொல் ‘கொணா’ என்று திரிந்ததன் காரணம் இதுவே.

இவற்றை எல்லாம் நினைவில் இருத்திக்கொண்டு, ஞாயிற்றுக்கிழமை திங்கட்கிழமை முதலியவற்றின் வாழ்வை ஆராய்வோம். இவை பல அசைகளை உடைய நீண்ட வடிவங்களோடு உள்ளன. ஆகவே ஒலிப்பதற்கு எளியவை அல்ல. அன்றாடம் பேசப்படும் சொற்கள் ஆதலால், இத்தகைய நீண்ட வடிவங்கள் பேச்சுக்கு இடையூறு ஆகும். ஆகவே, நீண்ட வடிவங்களைக் குறுக்கவோ மாற்றவோ வேண்டிய நிலைமை ஏற்பட்டது. ‘இன்று திங்கட்கிழமை; நாளைக்குச் செவ்வாய்க்கிழமை’ என்பது நீண்டு செல்கிறது. ‘இன்று திங்கள்; நாளை செவ்வாய்’ எனின் முயற்சிச் சிக்கனம் உள்ளது. ஆகவே, கிழமை என்ற சொல் இல்லாமலும் ஞாயிறு திங்கள் செவ்வாய் முதலியன நாட்களின் பெயர்களாக வழங்கலாயின.

வானத்தில் உள்ள ஒளிப் பிழம்புகளை உணர்த்த ஏற்பட்ட சொற்கள், இவ்வாறு நாட்களின் பெயர்களாகவும் ஆயின.

---

*It can be shown that the length of a word, far from being a random matter, is closely related to the frequency of its usage.—G. K. Zipf, The Psycho-Biology of Language, p. v.

The degree of articulatedness of meaning will be reflected by a corresponding degree of crystalization of the configuration, which is equatable with relative frequency of occurrence.—Ibid. p. 236.

ஒருசொல் இரண்டு பொருளைக் குறித்தல், பேச்சு மொழிக்கு ஆகாதது. இலக்கியமொழியில் பலபொருட் கிளவிகள் (பலபொருள் ஒரு சொல்லாக இருப்பவை) உண்டு. அங்கு அவற்றினால் இடையூறு குறைவு. பேசும் போதே கேட்பவர்க்குக் கருத்தை உணர்த்தும் கட்டாயம் உடையது பேச்சுமொழி. ஆகவே, பேச்சுமொழியில் ஒரு சொல்லுக்கு ஒரே பொருள் இருத்தல் வேண்டும். ஏதேனும் ஒருசொல்லுக்கு இருபொருள் ஏற்படின், அந்தக் குறை இரண்டு வழியால் தீர்க்கப்படும். ஒன்று, இரண்டு பொருள் உணர்த்த இருசொற்கள் இருக்குமாறு வடிவு வேறுபடுத்திச் சொற்களை அமைப்பது (உருள், உருளை போல). மற்றொன்று : ஒரு பொருளை உணர்த்த அந்தச் சொல் பயன்பட மற்றொரு பொருளை உணர்த்த வேறொரு சொல்லை ஆக்கிக் கொள்ளல் அல்லது கடன் வாங்குதல் (வீடு,விடுதலை,முத்தி).

முன்னைய வழிப்படி, ஞாயிறு திங்கள் என்னும் சொற்கள் இரு வேறு பொருளை உணர்த்தப் பயன்பட்டிருந்தால், ஞாயிறு என்பது கதிரவனை உணர்த்த, ஞாயிற்றுக்கி அல்லது ஞாயிகி அல்லது ஞாழமை முதலிய திரிபுகளில் ஒன்று கிழமையை உணர்த்தியிருக்கவேண்டும் ; அவ்வாறே திங்கள் என்பது வெண்கதிரை உணர்த்த, திங்களி அல்லது திங்கி அல்லது திழமை முதலிய திரிபுகளில் ஒன்று கிழமையை உணர்த்தியிருக்கவேண்டும். Monday என்னும் ஆங்கிலச்சொல் ஈரசையுடைய சிறு வடிவினதாய், moonday என்னும் சொல்லின் திரிபாய் இருத்தல் காண்க.

---

*In the commonwealth of words, there is neither polygamy nor polyandry. One word one meaning, one meaning one word, is the rigid and inviolable law.

—P. B. Ballard, Thought and Language, p. 173.

தமிழில் திரிபுகளுக்கு மிகுதியாக இடம் இல்லை ; அடிச் சொல் தெளிவாக விளங்குமாறு சொல்லின் முழுவடிவத் தைக் காப்பதே பெரும்பாலும் தமிழ்மொழியின் . இயல்பு. ஆகவே இந்த வழிப்படி சொற்கள் பல அமையவில்லை.

இரண்டாம் வழிப்படி சொற்கள் அமைவதானால், ஞாயிறு திங்கள் என்பவை ஒருவகைப் பொருள் உணர்த்த, மற்றொருவகைப் பொருளுக்குப் புதியசொற்களைப் படைக்க வேண்டும் ; அல்லது கடன் வாங்கவேண்டும். இந்த இரண் டாம் முறை இங்கு அமைந்துள்ளது. ஞாயிறு திங்கள் என் பவை கிழமைக்குப் பெயராயின. சூரியன் சந்திரன் என் னும் சொற்கள் கடன் வாங்கப்பட்டு, செங்கதிரையும் வெண்கதிரையும் உணர்த்தப் பயன்படலாயின.

ஒரு கிராமத்தில் ஒரே பெயருள்ளவர் இருவர் தோன்றி னால், பெயர்களில் சிறுவேறுபாடு உண்டாக்குவர் ; அல்லது, ஒருவன் பெயரை அவ்வாறே விட்டு, மற்றொருவனுக்கு வேறு பெயர் வைப்பர். முனிசாமி என்ற பெயருடன் இருவர் இருந்தால், சின்ன முனிசாமி பெரிய முனிசாமி எனப் பெயர்களை வேறுபடுத்துவர் ; அல்லது ஒருவனுக்கு முனிசாமி என்ற அந்தப் பெயரை வைத்து, மற்றொருவனைக் கருத்தான் அல்லது வெள்ளையன் என்று வேறொரு பெயரால் அழைப்பர். இந்த இரண்டாம்முறையே, சூரியன் சந்திரன் என்னும் சொற்கள் பிறந்த முறையாகும்.

ஏறக்குறைய முப்பதுநாள் கொண்ட காலப்பகுதியை ஒரு பெயரால் குறிப்பிட விரும்பினர் முன்னோர். நான்கு வாரங்களுக்கு ஒருமுறை தன் போக்கை மாற்றிவரும் திங்க ளின் பெயரால் அக்காலப்பகுதியைக் குறித்தனர். முப்பது நாள் கொண்டது ஒரு திங்கள் என்றனர். சித்திரைத் திங் கள் வைகாசித்திங்கள் ஆனித்திங்கள் முதலிய பெயர்களை வழங்கினர். திங்கள் என்னும் சொல் ஒருபால் வெண்

கதிரையும் மற்றொருபால் கிழமையையும் குறித்து இடர்ப் படும்போது, இந்தக் காலப் பகுதியையும் குறிப்பதானால் தெளிவு குறையும் என்று, மாதம் என்ற வடசொல்லைக் கடன் வாங்கினர். சித்திரைமாதம் முதலிய பெயர்களை வழங்கலாயினர்.

ஆங்கிலத்திலும் திங்களைக் குறிக்கும் பெயராகிய moon என்பதன் தொடர்பாகவே முப்பதுநாள் கொண்ட காலப்பகுதிக்குப் பெயர் அமைத்தனர். ஆயின் moon என்ற அப்பெயரை அப்படியே அதற்குப் பெயராக அமைக்காமல் அதைத் திரித்து month என்ற பெயர் அமைத்தனர். moon, month என்ற இரண்டு சொற்களும் தெளிவாக வேறுபட்டிருத்தலால் தனித்தனியே இரு வேறு பொருளை உணர்த்துவதற்குப் பயன்பட்டு நின்று வழங்குகின்றன. தமிழிலும் இவ்வாறே திங்கள் என்ற சொல்லைத் திரித்துத் திங்கி அல்லது திகள்ளு என்று வேறுபட்ட வடிவத்தைப் பயன்படுத்தியிருந்தால்,* இரண்டு சொல்லும் நிலைபெற்றிருக்க முடியும். திரிபு செய்யாமையால் சூரியன் சந்திரன் என்னும் பிறமொழிச் சொற்கள் புகுந்தன.

கூழுக்கும் ஆசை மீசைக்கும் ஆசை என்று இரண்டும் விரும்பின் எதுவும் நிறைவேறாது. உள்ள சொல்லும் திரிதல்கூடாது, புதிய பொருளையும் உணர்த்தல்வேண்டும்

---

*Phonetic change, so far from doing harm, is favourable to it, since it conceals its former relations with other words which have remained nearer to the initial meaning or have gone off in different directions... Derivatives can with impunity abondon their primitive, and on the other hand, the primitive can change its meaning without affecting the derivatives.

—M. Breal, Semantics, p. 175.

எனின், இது வீண் ஆசையே ஆகும். இதனால்தான், பிற மொழிச்சொல் புக நேர்ந்தது.

எதிரே வேறு உணவு இருக்கும்போதுதான், மீசையைக் காப்பாற்றும் நோக்கமுடையவனாய்க் கூழைப் புறக்கணிப்பான் ஒருவன். எதிரே வேறு உணவு இல்லாதபோது, பசி மிக வாட்டும்போது அவன் வேறு என்ன செய்தல் இயலும் ? மீசையின் அழகு கெட்டாலும் கெடுக என்று கூழைக் குடிக்கவே முந்துவான்.

மொழித்துறையிலும் இது உண்மையாக விளங்குகிறது. சூரியன் சந்திரன் என்னும் பிறமொழிச் சொற்கள் எளிதில் கிடைத்த காரணத்தால்தான், உள்ள சொற்களைத் திரிக்காமலே கடன் வாங்க முடிந்தது. பிறமொழிச் சொற்கள் இல்லாமல் இருந்திருப்பின் என்ன ஆகியிருக்கும் ?

கடன் கொடுப்பவன் உதவியால் வாங்குபவன் சோம்பேறி ஆகிறான்.* கடன் கொடுப்பவன் இல்லை என்றால், கடன் வாங்குபவன் என்ன ஆகியிருப்பான் ? உள்ளதைக் கொண்டே பெருமுயற்சி செய்து சிக்கனமாக வாழ்க்கை நடத்தியிருப்பான். அதுபோலவே கடன் கொடுக்க ஒரு மொழி இல்லை எனின், உள்ள சொல்லையே திரித்து வேறு பொருளில் வழங்கக் கற்றிருப்பர் முன்னோர்.

' மின் ' என்ற ஒரு சொல்மட்டும் இருந்த மிகப் பழங்காலத்தில், மின்னல், மின், மினுக்கு, மின்மினி முதலிய பல

---

*Little by little English speakers lost the habit of looking first to their own language and utilizing it to the utmost before going abroad for new expressions......... Mental laziness and regard to their own monentary convenience therefore led them to retain the Latin word and give it only an English termination.—Otto Jespersen, Growth and Structure of the English Language, p. 132.

பொருள்களை உணர்த்த அந்தச் சொல்லையே பலவகையாகத் திரித்து அமைத்துக்கொள்ள வில்லையா? 'கொள்' என்ற ஒரு சொல் முதலில் இருந்தது. பிறகு பலவகைக் கருத்துக்கள் பிறக்கவே, கொள்கை, கோள், கொள்ளல், கொள்ளை, கொளு முதலிய பல சொற்களை மக்கள் படைத்துக்கொள்ள வில்லையா? கண் என்பதி லிருந்து கணு, காண், காணல், காட்சி, காட்டு முதலிய சொற்களை அமைத்துக்கொள்ள வில்லையா? ஆகவே கடன் கொடுப்பவர் இல்லையானால், சோம்பல் வாழ்வு அழியுமே தவிர, உண்மையான வாழ்வு அழியாது. முயற்சி பிறக்கும்; புது வாழ்வுக்கு வழி அமையும்.

கருத்து ஒன்று தோன்றியது என்றால், பொருள் ஒன்று புதிதாக வந்தது என்றால், அதற்குச் சொல் அமைப்பது எளிது. ஆஸ்திரேலியாவில் கண்ட ஒரு புதிய விலங்குக்கு எப்படியோ கங்காரு என்ற பெயரை வைத்து வழங்கினர். இது காரணம் அற்ற கண்மூடிப் பெயர். மக்கள் விரும்பினால் எண்ணிப் பார்த்துக் காரணப் பெயராகவும் வைக்க முடியும். புதிதாக இந்நாட்டுக்கு ஓர் இலை வந்தது. அதைச் சுருட்டிப் புகை பிடிக்கப் பயன்படுத்துவதைக் கண்டனர். அதன் பெயர் என்ன என்று கேட்டறியாமலே, புகையிலை என்று பெயர் வைத்தனர். புதிதாக ஒரு வண்டி இந்நாட்டுக்கு வந்தது. அது தண்டவாளத்தின் மேல் ஓடியது. புகை கக்கியவாறே ஓடியது. அதற்கு உள்ள பெயர் என்ன என்பதைப்பற்றிக் கேட்டறியாமலே, புகைவண்டி என்ற பெயரை வழங்கினர். பிறமொழிச் சொற்கள் இல்லையானால், கருத்துக்களைப் பெற்ற மக்கள் சொற்களைப் படைத்தல் எளிதே ஆகும். கருத்துப் பிறந்த பிறகு, சொல் பிறத்தலைத் தடுக்க முடியாது. அதற்கென்று ஒரு பிறமொழிச் சொல்

னும் உடன் வந்தால்தான், சொல் பிறக்காமலே நின்று விடும்.

நனைதல் என்பது ஒரு சொல். நீரால் ஆடை நனைந்து போதல், மழையால் படுக்கை நனைந்துபோதல் முதலான பேச்சு வழக்குகள் குழந்தையின் செவியில் விழுந்திருக்கும். ஆனால் இளங்குழந்தையின் சிறு மூளை எத்தனைச் சொற்களை நினைவில் வைத்திருக்கும்? நனைதல் என்ற சொல் மறந்து போயிற்று. ஒருநாள் கடற்கரைக்குத் தாயுடன் சென்றது. தாய் குழந்தையின் கையைப் பற்றியவாறே அலையின் அருகே சென்றாள். பெரிய அலை ஒன்று எழுந்து வந்து குழந்தையின் சொக்காயை நனைத்தது. மணல்மேட்டில் வந்து நின்றனர் தாயும் குழந்தையும். குழந்தை தாயைப் பார்த்து, " அம்மா! சொக்கா தண்ணி ஆச்சி " (சொக்காய் தண்ணீர் ஆயிற்று) என்றது. சிறிது நேரம் கழித்து *வீட்டிற்குத் திரும்பியதும், குழந்தையின் தந்தை, " எங்கே போயிருந்தாய்? என்ன பார்த்தாய்?" என்று கேட்டார். " பெரிசு தண்ணி " (பெரியதாகிய தண்ணீர்) என்றது குழந்தை. மறு நாள் குழந்தை தலைமயிரைக் கத்தரித்துக்கொண்டபோது, தாய் அதைப் பார்த்து, " யார் மயிர் வெட்டியது?" என்று கேட்டாள். குழந்தை சிறிதும் தயங்காமல் " மயிர்க்காரன் " என்றது.

குழந்தைக்குக் கருத்துக்கள் அமைந்தன; உடனே சொற்கள் பிறந்தன. மயிர் வெட்டும் தொழிலாளிக்குச் சமுதாயம் தரும் பெயர் குழந்தையின் நினைவில் இல்லை. ஆனால் பால்காரன் கடைக்காரன் வீட்டுக்காரன் முதலான சொற்கள் அதன் நினைவில் இருந்தன. உள்ளவற்றின் துணையால் ஒப்புமையாக்கம் (analogy) கொண்டு 'மயிர்க்காரன்' என்ற சொல்லைப் படைத்துவிட்டது. கடலைக் கண்ட அதன்

கண்களுக்கு அதன் பரப்பும் தண்ணீர்மயமான வடிவும் நீங்காமல் நின்றன. தந்தை கேட்ட கேள்விக்குத் தயங்காமல் விடையளித்தது. முன்பின் எண்ணிப் பாராத புதிய சொற்றொடரைப் படைத்துப் 'பெரிசு தண்ணீர்' என்றது. நனைதல் நினைவில் இல்லை. 'சொக்காய் தண்ணீர் ஆச்சு' என்ற வாக்கியத்தையே அமைத்துவிட்டது. கருத்துக்கள் வளராத குழந்தைக்கே இவ்வளவு ஆற்றல் அமைந்திருக்கும் போது, சொல் சொற்றொடர் வாக்கியம் ஆகிய மூன்றையும் படைக்கும் ஆற்றல் அமைந்திருக்கும்போது, கருத்து வளர்ந்த மக்களுக்கு இது மிக எளிதாகும். சோம்பலும் கடன் வாங்கிப் பிழைக்கும் வேட்கையும் இல்லாதிருந்தால் புதிய கருத்துக்களுக்குப் புதிய சொற்களைப் படைத்துக் கொள்ளல் எந்த மொழியினராலும் இயலும். ஆனால் மொழி தனியுடைமை அன்று; பலர்க்கும் பொதுவான கருவி. ஆதலின் அனைவரும் சேர்ந்து உடன்பட்டுப் படைத்தால் தான் வாழும். புதியன படைக்க அனைவரும் ஒன்றுபடுவ தில்லை. கடன் வாங்கவே பெரும்பாலோர் திரளுகின்றனர். ஆதலின் பிறமொழிச் சொற்கள் நிலைபெறுகின்றன. குழந்தை பிறரைப்பற்றிக் கவலைப்படாத வாழ்வு உடையது ஆகையால், தயங்காமல் படைக்கின்றது. மொழியைப் பேசும் பலரும் உடன்பட வேண்டுமே என்ற கவலை குழந்தைக்கு இல்லை. வளர்ந்த மக்களுக்கு அதுதான் முதல் நோக்கமாக இருக்கிறது.

குழந்தை படைத்த சொல்லும் சொற்றொடரும் வாக்கியமும் தவறாக இருத்தல் கூடும். அதுபற்றிக் கவலை வேண்டா. சொற்களைப் படைக்கவும் அமைக்கவும் கருத்துக் களைத் தெளிவாக உணர்த்தவும் முடிந்ததா என்பதையே ஆராய்தல் வேண்டும். கற்றறிந்தவர்கள் பேசியும் எழுதியும்

வழங்கும் சில சொற்களும் சொற்றொடர்களும் வாக்கியங்களும் தவறு உள்ளனவாகக் காணப்படுகின்றன.* இலக்கண நூலார் எழுதுவனவும் சில குற்றமுடையனவாகக் காணப்படுகின்றன. கேண்மின்கள், எழுமின்கள் என்று புலவர் எழுதுவன தவறாக அமைந்த சொற்கள். வாழைமரம், எனது நண்பர், தலைவரவர்கள் என்று கற்றவர் பேசுவன தவறாக அமைந்த சொற்றொடர்கள். அந்தப் பசு கருப்பாக இருக்கிறது, தென்னை உயரமாக வளர்ந்தது, நீ நன்றாகப் பேசினாய் என்று அறிஞர் கூறுவன பிழைபட அமைந்த வாக்கியங்கள். இவற்றை யெல்லாம் நாம் ஏற்றுக்கொண்டு போற்றும் போது, குழந்தை படைக்கும் மழலைச் சொற்களிலும் சொற்றொடர்களிலும் வாக்கியங்களிலும் குற்றம் காண்பது தகுமோ ?†

இவ்வாறு சொற்களைப் படைத்துக்கொள்ளாமல் எதற்கும் உடனே கடன் வாங்குதல் மொழியின் தொடர்ந்த வாழ்வுக்கு நல்லது அன்று. புதியனவாக வரும் பொருள்களாகிய மோட்டார், சைக்கில் போன்றவற்றிற்கு அவற்றுடன் வரும் சொற்களையே கடன் வாங்குவதில் தீமை இல்லை. ஆனால் சூரியனும் சந்திரனும் தமிழர்களுக்குப்

---

*There have been often attempts to find a sort of logical framework behind the rules of grammar, but language is too rich and not sufficiently rectilinear to lend itself to this presentiment. It overflows the bounds of logic on every side.—M. Breal, Semantics, p. 219.

†In treating linguistic questions we must never forget that men are only in part reasonable beings, and that the universal human element is also therefore largely irrational and illogical.—Otto Jespersen, Mankind Nation and Individual, p. 213.

பிற்காலத்தில் வந்து சேர்ந்த பொருள்கள் அல்ல. தமிழர்கள் முற்காலத்தில் இவற்றிற்குப் பெயர் வைத்து வழங்காமலும் இல்லை. ஆகவே இத்தகைய பொருள்களுக்கும் பிறமொழிச் சொற்களைக் கடன் வாங்குதல் நன்று அன்று.

ஆங்கில மொழியில் கண்டவாறு பிறமொழிச் சொற்களைக் கலத்தல் ஆகாது என்னும் கருத்தும் இயக்கமும் பத்தொன்பதாம் நூற்றாண்டில் பரவத்தொடங்கின. *டென்னிசன் என்ற புலவர், லத்தீன் மொழிச் சொற்களைக் குறைவாகக் கையாண்டிருப்பதாக ஓரிடத்தில் தம்மைக் குறித்தே மகிழ்ச்சியுடன் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு மாறுதல் தோன்றிய போதிலும் அது வெற்றி பெறவில்லை. உலக மொழியாகவும், அறிவுக் களஞ்சியமாகவும் வளர்ச்சிபெற்று அரசியல் செல்வாக்கு மிகுந்திருந்த காரணத்தால், இந்தக் குறை உறுத்தவல்லதாக இல்லாமல் மறக்கப்படுவதாயிற்று.

ஆயினும் மொழியியல் தேர்ந்த அறிஞர் சிலர், ஆங்கிலத்தின் போக்கு நன்றன்று என்றே எடுத்துரைக்கின்றனர்.† இவ்வாறு பிறமொழிச் சொற்களை வரையறை இன்றிக் கடன் வாங்குவதால், உள்ள சொற்களைப் பயன்படுத்தும் திறனும், இல்லாத சொற்களை அவ்வப்போது படைத்துக்கொள்ளும்

---

*Otto Jespersen, Growth and Structure of the English Language, p. 147.

†English differs from most other languages in that it is more inclined than they are to swallow foreign words raw, so to speak, instead of preferring to translate the foreign expression into some native equivalent.—Otto Jespersen, Growth and Structure of the English Language, p. 153.

திறனும் ஆங்கில மொழிக்குக் குறைகின்றன என்று கருதுகின்றனர்.*

எந்த நிலையிலும் எதற்காயினும் பிறமொழிச் சொற்களைக் கடன் வாங்குதலால் தீமை ஒன்றும் இல்லை என்பது ஒரு சிலர் கொள்கை. பேசும் மக்கள், தம் மொழிச் சொல்லா பிறமொழிச சொல்லா என்று ஆராய்வதே இல்லை; பிறர் அறிவிக்க அறிந்தாலும் அதைப் பற்றிக் கவலைப்படுவ தில்லை. தம் மொழிச் சொல்லை வழங்கும்போதும், அதன் பொருள் என்ன என்பதை (அது எதை உணர்த்துகிறது என்பதை) மட்டும் உணர்கிறார்களே தவிர, அந்தச் சொல்லுக்கு அப் பெயர் அமைந்த காரணத்தை உணர்வதே இல்லை. கற்றுத் தேர்ந்த புலவரும் 'இன்று ஞாயிற்றுக்கிழமை' என்றோ, 'இன்று ஞாயிறு' என்றோ கூறும்போது, இந்த நாள் கதிரவனுடைய தொடர்பால் பெயர் பெற்ற நாள் என்பதை நினைப்பதில்லை.† பேசும் அப்போது நினைப்பதில்லை; சோதிடரும் நினைப்பதில்லை. கிழமைகளின் பெயர்களை ஆராயும் போது அல்லது சோதிடக் குறிப்புக் காணும்போது மட்டுமே, ஞாயிற்றுக்கிழமை என்பது இன்ன காரணத்தால் அமைந்த பெயர் என்பதை உணர்கிறார்கள். ஆகவே, சொல் என்பது பொருளுக்கு அமைந்த குறியீடு என்னும்

*It is well known that English is noted for its readiness in assimilating foreign words that it judges useful or suitable. This habit permitted it to neglect its own vocabulary as a source for new words.—J. Vendryes, Language, p. 350.

†A word is not the natural reflection of an idea, nor its description, nor its definition; it is only its designation, an arbitrary and conventional sign with which we learn to associate it—D. W. Whitney, Language and the Study of Language, p. 70.

அவ்வளவிலேயே வாழ்கிறது. சொல்லின் பிறப்பு எவ்வாறு இருப்பினும், வாழ்வு இதுதான். ஆகையால் கடன் வாங்கிய சொல்லாக இருந்தாலும் பிறமொழிச் சொல்லாக இருந்தாலும், பொதுமக்களுக்கு இரண்டும் ஒன்றேதான்; கற்றவர்களிலும் பலர் இந்த இரண்டிற்கும் வேறுபாடு செய்வதே இல்லை. ஒலியில் வேறுபாடு இருந்தால்தான் பிறமொழிச் சொல்லென உணர்ந்து ஒதுக்க முயல்கின்றனர்; அல்லது தாழ்வு மனப்பான்மை உள்ளபோது உயர்த்திப் போற்றுகின்றனர். தம் மொழியின் ஒலியோடு ஒத்து அமைந்துவிட்ட சொற்களைப் பற்றி இவர்கள் கவலைப்படுவதே இல்லை.

இதைக் குறித்து எண்ணுவோர்—எண்ணக் கடமைப்பட்டோர்—மொழியின் போக்கைப்பற்றி ஆராயும் அறிஞரே ஆவர். பாலும் மோரும் குடிப்பவர் அனைவரும் பசுவைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. பசுவை வளர்த்துக் காக்கும் ஆயரே கவலைப்படுவர்.

கவலைப்படாமலே மொழியின் இயற்கைப் போக்கைக் காப்பாற்றுவோரும் உளர். அவர்கள் நாட்டுப்புறத்தில் நாகரிகக் கல்வி அறியாமல் வாழும் மக்கள்.

'கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்'* என்று தாயுமானவர் வேறு காரணத்திற்காகக் கல்லாதவர்களைப் போற்றினார்; அடுக்கிக் கூறிப் பாராட்டினார். மொழித் துறையிலும் மேற்கூறிய வகையில் கல்லாதவர்கள் நல்லவர்களே போலும்! அவர்கள் இவ்வாறு கண்மூடிக் கடன் வாங்குவதில்லை. அவர்கள் ஏழைகளாதலின் (அறியாதவர்கள் ஆதலின்) கடன் கொடுப்பவர்களும் (பிறமொழி கற்றுப் பெருமை பேசுபவர்களும்) அவர்களிடம் கொடுப்பதில்லை.

---

* தாயுமானவர் பாடல், சித்தர்கணம், 10.

பிறமொழிச் சொற்களைக் கடனாகப் பெறமுடியாத கல்லாத மக்களும் ஞாயிறு என்னும் கிழமைக்கும் ஞாயிறு என்னும் கதிரவனுக்கும் வேறு வேறு சொற்கள் தெளிவாக இருக்கவேண்டும் என்று விரும்பினர். திங்கள் என்னும் கிழமைக்கும் திங்கள் என்னும் வெண்கதிர்க்கும் தெளிவாக வேறுபட்ட சொற்கள் தனித்தனியே இருக்கவேண்டும் என்று விரும்பினர். கருத்துக்கள் தனித்தனியே அமைந்தன; ஆதலின் சொற்களும் தனித்தனியே படைத்துக்கொண்டனர்; தயங்காமல் படைத்துக்கொண்டனர். கிழமைப் பெயர்களாக ஞாயிறு திங்கள் என்பவற்றை வைத்துக் கொண்டனர். கதிர்களின் பெயர்களாக வேறு இரண்டை அமைத்துக்கொண்டனர். செங்கதிரைப் 'பொழுது' என்றனர். வெண்கதிரை 'நிலா' என்றனர். நாட்டுப்புறத்துக் கல்லாத மக்கள் பேச்சில் இன்னும் சூரியனும் சந்திரனும் இடம் பெறாமல், பொழுதும் நிலாவும் இருத்தலைக் காணலாம். 'பொழுது எங்கே வந்திருக்கிறது, பார்,' 'நிலா இன்னும் மேற்கே போகவில்லை' முதலான பேச்சுவழக்குகள் இன்றும் இந்த உண்மையை விளக்கி நிற்கின்றன.

# இழப்பது ஒன்றும் இல்லை

ஆங்கிலத்தில் எழுத்துக் கூட்டல் (spelling) தொல்லை, தமிழில் சந்தி தொல்லை : இவ்வாறு மாணவர் பெரும்பாலோர் கூறிவருந்துகின்றனர். ஆங்கிலத்தில் ஒலிப்பதுபோல் எழுதுவது இல்லை ; ஒலிப்பது ஒருமுறையாகவும் எழுதுவது வேறு முறையாகவும் பல சொற்களில் இருப்பதால் மாணவர் இடர்ப்படுகின்றனர். தமிழில் சொற்களைக் கற்று முறையே எழுதுதல்மட்டும் போதாது ; பெரும்பாலான சொற்களுக்கு இடையே சில மெய்யெழுத்துக்களைச் சேர்த்துச சேர்த்து எழுதல் வேண்டும் ; இன்ன மெய்யெழுத்தை இங்கே சேர்ப்பது என்ற விதிகளை அறிந்து நினைவில் வைக்க முடியாமல் மாணவர் இடர்ப்படுகின்றனர்.

எழுதும் முறை ஒன்றாகவும் ஒலிக்கும் முறை மற்றொன்றாகவும் ஆங்கிலம் இருப்பதற்குக் காரணம், அது பல மொழிகளி லிருந்து பல்வேறு காலங்களில் சொற்களை வரையறை இன்றிக் கடன் வாங்கியதே ஆகும். கடன் வாங்கிய போது பிறமொழிச் சொற்களை ஆங்கில ஒலிக்கு ஏற்ப இவ்வாறு அமைக்கவேண்டும் என்ற விதி வகுத்திருந்தாலும் இந்த நிலை ஏற்பட் டிருக்காது. தொல்காப்பியனார் பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்பே தமிழுக்கு இவ்வாறு விதி வகுத்துள்ளார்.

*வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே

வடசொல் மட்டுமே தமிழில் புகும் நிலை அப்போது இருந்

*தொல்காப்பியம், சொல். 401.

தமையால் தொல்காப்பியனார் அந்த ஒரு மொழியின் சொற்களுக்குமட்டும் விதி வகுத்துள்ளார். ஆங்கில மொழியில் பிற சொற்கள் கலந்து குவிந்தபோது வரையறையோ விதியோ ஒன்றும் இல்லாமையால் இப்போது ஒலியிலும் எழுத்து முறையிலும் குழப்பம் உள்ளது. கற்கும் மாணவர் இடர்ப்பட நேர்கிறது.

தமிழில் சந்தி இருப்பதற்குக் காரணம், பழங்காலத்தில் பார்த்துக் கற்ற தமிழ்க்கல்வி மிகக் குறைவாகவும் கேட்டுக் கற்ற கல்வியே மிகுதியாகவும் இருந்தமை ஆகும். அன்றியும் தமிழ்மக்கள் நுண்ணிய செவிப்புலனோடு ஓசை நுட்பம் அறிந்து பழகியமையால், சொற்களுக்கு இடையே வரும் சந்தி ஒலிகளையும் போற்றிக் காத்தனர். பார்த்துக் கற்கும் கல்வி மிகுந்துள்ள இக் காலத்து மாணவர்க்கு அந்தச் சந்தி ஒலிகள் வேண்டாத சுமையாகவும் தொல்லையாகவும் உள்ளன.

ஆங்கிலத்தில் எழுத்துக் கூட்டல் முறையால்(spelling) வரும் ஐயங்களையும் இடர்ப்பாடுகளையும் எளிதில் போக்கிக் கொள்ள முடிகிறது; எல்லா ஆங்கில அகராதிகளிலும் பெயர் வினைகளும் அவற்றின் பலவகைத் திரிபுகளும் தெளிவாகத் தரப்பட்டுள்ளமையால், மாணவர் அவற்றை அடிக்கடி பார்த்தும், பார்த்து எழுதியும் ஒருவாறு தேர்ச்சி பெற முடிகின்றது. தமிழில் எந்த அகராதி கொண்டும் சந்தி பற்றிய ஐயங்களையும் இடர்ப்பாடுகளையும் தீர்த்துக்கொள்ள வழி இல்லை;* இலக்கணத்தைப் பல முறை கற்றால்தான் அவற்றை ஒருவாறு தீர்த்துக்கொள்ள முடியும்; இலக்-

*Unless he first break up this connection and regard each word as liberated from it, he can neither understand them himself, nor will he ever be able to find them in any lexicon.—Rev. Beschi, A Grammar of the common Dialect of the Tamil Language, p. 14.

கணத்திலும் போதிய அளவு தெளிவாகச் சந்தி விளக்கப்படவில்லை: இவ்வாறு மாணவர் குறை கூறுகின்றனர்.

அவர்கள் கூறுவதிலும் உண்மை உள்ளது. வேறொரு காரணத்தையும் இங்கே கருதல் வேண்டும். ஆங்கிலம் உலக மொழி; செல்வாக்கு உள்ள மொழி; பட்டங்கள் பெறவும் சட்டங்கள் செய்யவும் பதவிகள் எய்தவும் உதவும் மொழி; பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் உள்ள ஆசிரியர்களும் மற்ற அதிகாரிகளும் அதன் பெருமையையும் அதில் எண் (மார்க்கு) வாங்கத் தவறின் வரும் சிறுமையையும் திரும்பத் திரும்ப எடுத்துரைப்பதே கடமையாகக் கொண்டுள்ளனர். தமிழோ, தாய்மொழி; வீட்டுமொழி; பள்ளிகளில் கற்காமலே தேர்ச்சி பெறலாம் என்று பலரும் வாய்விட்டுக் கூறும் மொழி; சந்தியே வேண்டா என்று, பத்திரிகைகள் நடத்தியும் நூல்கள் எழுதியும் வெற்றி பெற்றுப் பலர் வழிகாட்டும் மொழி. ஆகையால் ஆங்கிலத்தில் எழுத்துக்கூட்டல் முறையைக் (spelling) கற்பதற்காக மாணவர் மேற்கொள்ளும் முயற்சியில் கால்பங்கும் தமிழில் சந்தி ஒலிகளைக் கற்பதற்காக மேற்கொள்வதில்லை. அயலாரிடம் பெருமை பெறுவதற்காக ஆறு மைல் ஓடமுனையும் மகன், அன்னையின் அன்புக்காக அரை மைல் நடத்தலும் பெருந்தொல்லை என்கிறான்! என் செய்வது!

பிறமொழியில் இவ்வளவு இடர்ப்படும்போது தாய்மொழிக்காகவும் துன்பப்படு என்று கடிந்துரைப்பதும் அன்புக்குத் தகுதி அன்று. கூடுமானவரையில் தாய்மொழி எளிதாக அமைதல் நல்லதே.

இத்தாலியிலிருந்து வந்து தமிழ் கற்றுத் தமிழராய் வாழ்ந்த பெஸ்கி என்னும் வீரமாமுனிவரும் சந்தி பற்றிய விதிகளை வரையறுத்துக் கூறுவது அரிதாக உள்ளது என்றும், வல்லினம் இன்ன இடத்தில் மிகும் இன்ன இடத்தில் மிகாது

என்று தெளிவாக்க முடியவில்லை என்றும், நெடுங்காலப் பயிற்சிக்குப் பிறகே உணர முடிகின்றது என்றும் கூறியுள்ளார்.* அவர் இலக்கியம்மட்டும் கற்ற புலவர் அல்லர்; இலக்கணம் கற்றுத் தெளிந்து இலக்கியம் இயற்றித்தந்த புலவர்; தொன்னூல்விளக்கம் என்னும் விரிவான இலக்கண நூலும் இயற்றிய புலவர். ஆதலின் அவர் கூறும் கருத்து ஆழ்ந்து எண்ணி உணர்தற்குரியதாகும்.

கேட்டுக் கேட்டுக் கற்ற கல்வியே மிகுதியாக இருந்த பழங்காலத்தில், ஒருவர் ஒரு பாட்டைச் சொல்வாரானால் அதில் உள்ள ஒலிகளை எல்லாம் மிகத் தெளிவாக எடுத்தல் படுத்தல் நலிதல் வேறுபாடு தோன்றச் சொல்லவேண்டியிருந்தது. அதைக் கேட்பவரும் உற்றுக்கேட்டு ஒலி வேறுபாடுகள் அனைத்தையும் மறவாமல் போற்றவேண்டியிருந்தது. இக்காலத்திலோ,

வந்த பையன் அந்தக் காளையைப் பார்த்தான்

என்று அச்சுப் புத்தகத்தில் உள்ள வாக்கியத்தைப் படிப்பவர் (மாணவராயினும், மற்றவராயினும்)

வந்தப் பையன் அந்த காளையை பார்த்தான்

என்று தம் விருப்பம்போல் படிக்கிறார். ஆனால், alien, education, suggestion முதலான ஆங்கிலச் சொற்களை ஆங்கிலேயனைப்போலவே தக்க இடங்களில் எடுத்தும் படுத்

---

*It is so difficult to explain when they ought to be doubled, and when not, that all that should be said cannot be perfectly contained in rules: still I shall here copiously give many rules, which I have learnt by long experience and accurate study.—Rev. Beschi, A Grammar of the Common Dialect of the Tamil Language, p. 14.

தும் ஒலித்துப் படிப்பதில் கண்ணும் கருத்துமாக இருக்கிறார். தமிழ்நாட்டு ஊர்ப்பெயர்களையும் தமிழரைப்போல் ஒலிக்காமல், ஆங்கிலேயன்வாய் ஒலிப்பதைப் போலவே டின்னெ’வெல்லி (Tinnevelly), சி’யாளி (Shiyali) கஞ்சீவரம் (Conjeevaram), எக்மூர் (Egmore) என்று ஒலிக்க முயற்சி செய்து கற்றுக்கொள்கிறார்கள். தமிழையே டமிள் என்று ஆங்கிலேயனைப்போல் ஒலிக்க முயல்கிறார்கள்.

இன்று ஆங்கிலத்திற்கு மேற்கொள்ளும் அவ்வளவு முயற்சியும் ஆர்வமும் அன்று தமிழுக்கு இருந்தன. நூல்கள் பல இல்லாத காலம் ஆதலின், கேள்வி வாயிலாகவே காவியங்களையும் கற்றுத் தேறும் நிலை இருந்தது. உரைநடையைக் கற்பதற்குச் செவியின் பயிற்சி அவ்வளவாகத் தேவை இல்லை. செய்யுட்களைக் கற்றுத் தேர்ச்சி பெறுவதற்குச் செவிநுட்பம் மிகுதியாகத் தேவை. உரைநடை இல்லாமல் எல்லாம் செய்யுளாகவே இருந்த அக்காலத்தில், செவிநுட்பம் இல்லாதவர்க்குக் கல்வி இல்லை என்னும் நிலை இருந்தது.

> செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வம் அச்செல்வஞ்
> செல்வத்து ளெல்லாந் தலை

என்றே அக்காலத்து ஆசிரியரும் சொல்லினர் ; மாணவரும் அவ்வாறே கேட்டு ஒலி மாறாமல் கற்றனர்.

> செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
> செல்வத்துள் எல்லாம் தலை

என்று இக்காலத்தில் கற்பிக்கும் முறையும் கற்கும் முறையும் அக்காலத்தில் இல்லை.

இக்காலத்து முறை, பார்த்துக் கற்பதற்கு ஏற்ற முறையே தவிர, கேட்டுக் கற்பதற்கு ஏற்றது அன்று. ஏன் எனில், சொற்கள் பார்க்கும் கண்ணுக்குத் தனித்தனியே

தோன்றுமே தவிர, கேட்கும் செவிக்குத் தனித்தனியாக ஒலிப்பதில்லை. 'செய்யும் தொழில்' என்று இரண்டு சொற்களாகத் தனித்தனியே எழுதிப் பார்க்கலாம். ஆனால், ஒலிக்கும்போது இரண்டு சொற்களையும் சேர்க்காமலிருக்க முடியாது. சேர்க்காம லிருந்தால் இடையே நிறுத்தித் தனித் தனியே ஒலிக்க நேரும்; அப்போது பொருளும் மாறிவிடும். இரண்டையும் சேர்த்து ஒலித்தாலோ, மகரம் நகரமாகத் திரிய, 'செய்யுந் தொழில்' என்று ஆகும். அதுபோலவே, 'சொல்லி கொடுத்தான்' என்னும் இரு சொற்களையும் சேர்த்து ஒலிக்கும்போது 'சொல்லிக் கொடுத்தான்' என்று ஆகும். இத்தகைய மாறுதல்களையே சந்தியிலக்கணம் கூறும். நுண்ணிய செவிப்புலன் உடையவர்களுக்கு இவை இயற்கையானவை என்பது விளங்கும்.

இவற்றை எழுதும்போது மாறுதல்கள் இல்லாமலே தனித்தனிச் சொற்களாகவே எழுதலாம். அதனால் இழுக்கு ஒன்றும் இல்லை. ஆனால், கேட்டுக் கற்கும் கல்வியே மிகுதியாக இருந்த பழங்காலத்தில் இவை செவியில் நன்கு உணரப் பட்டுக் கேட்போரின் நினைவில் நீங்காமல் நின்றன. பழங் கால மக்களுக்குச் சந்தி நீக்கமுடியாத ஒன்றாக மொழியுடன் ஒன்றியிருந்தது. அதனால், வாய்ப்புக் கிடைத்து எழுதி வைக்கத் தொடங்கியபோது செவியில் உணர்ந்த மாறுதல் களையும் சேர்த்தே எழுதினர்.

வாழைபழம், கீரைதண்டு என நாம் எழுத முன் வருவோமா? மாட்டோம். வாழைப்பழம் கீரைத்தண்டு என வல்லெழுத்து மிக்கு ஒலிப்பதை நம் செவி நன்கு கேட்டுக் கேட்டுப் பயின்ற காரணத்தாலேயே, வாழைப்பழம் கீரைத்தண்டு எனச் சந்தியுடன் எழுதுகிறோம். பழங் காலத்து மக்களின் செவி நம் செவியினும் நுட்பமானது ஆகையால், 'மற்ற கடமை,' 'அணுகி பார்த்தார்' என்

பவற்றை அவர்கள் 'மற்றக் கடமை' 'அணுகிப் பார்த்தார்' எனச் சந்தி சேர்த்தே ஒலித்தனர்; ஒலித்தவாறே எழுதினர்.

ஆங்கிலத்தில் 'a cat' என்னும்போது a தனியே வர, 'an animal' என்னும்போது an என அது னகரத்துடன் சேர்ந்தே வருகிறது. சந்தி இல்லை என்று கூறும் அந்த மொழியிலும் சந்தி உண்டு; அதை உணர்ந்த செவியின் செல்வாக்கே இங்கே 'n' என்ற எழுத்துச் சேரக் காரணமாயிற்று. 'Pin please' என்னும் இரு சொற்களுக்கு இடையே திரிபு இல்லாமல் இருக்கலாம். ஆனால், improper, impatient, impure, immature, irrational என்னும் சொற்களில் 'in' என்னும் எதிர்மறை உறுப்பின் னகரம் m, r முதலிய ஒலிகளாகத் திரிதல் சந்தியே. அவை போலவே append, assign, affirm என்பவற்றின் முதலுறுப்பாகிய 'ad' என்பதன் டகரம் p, s, f எனத் திரிந்ததும் சந்தியே. ஆயினும் அவை ஒரு சொல்லாக வழங்குவனவற்றுள் நேர்ந்தவை ஆதலால் இலக்கண விதிகளில் போற்றிக் கற்கப்படுவதில்லை போலும்.

'தனி பங்கு' எனத் தமிழர் ஒருவரும் ஒலிப்பதில்லை. 'தனிப்பங்கு' என்றே ஒலிக்கின்றனர். தொடர்களாக இருப்பவற்றிலும் தமிழில் செவியின் செல்வாக்கு மிகுதி; ஆதலின் சந்தி தேவையாகிறது. ஆங்கிலத்தில் very pure என்னும் இரு சொற்களுக்கு இடையே பகர ஒலி மிகுதல் தெளிவாகக் கேட்கிறது. ஆயினும் very pure என்றே சந்தி இல்லாமல் எழுதுகின்றனர். காரணம் என்ன? ஆங்கில மொழி, பார்த்துக் கற்றல் மிகுதியாக இருந்தபோது வளர்ந்த மொழி; ஆதலின் கேட்டுக் கற்கும் செவியில் உணரப்படும் சந்திகளைப் பற்றிக் கவலைப்படுவ தில்லை.

இன்று தமிழ்மொழியும் ஆங்கிலம்போல் பார்த்துக் கற்றல் மிகுந்த மொழியாக உள்ளது; பழங்காலத்தில்

இருந்தது போல் இல்லை. வடமொழி போல் செவி வாயிலாகக் கற்ற நிலை இன்று இல்லை. ஆகையால் ஆங்கிலம் போலவே சந்தி இல்லாதவகையில் எழுதப்படல் வேண்டும் எனச் சிலர் கருதுகின்றனர்.*

இயன்றவரையில் இவ்வாறு ஆதல் வேண்டும் என்று விரும்புவோர், இன்றைய தமிழில் இவ்வாறு பல இடங்களில் நெகிழ்வு ஏற்பட்டிருத்தலை உணர்ந்து மகிழ்வர்.

செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எலலாம் தலை

என்று குறள் எழுதப்படுதலும் அச்சிடப்படுதலும் கற்பிக்கப்படுதலும் கற்கப்படுதலுமே அதற்குப் போதிய சான்றாகும்.

இயன்றவரையில் ஆதல் போதாது, முற்றிலும் ஆங்கிலம போலவே ஆதல் வேண்டும் என எதிர்பார்ப்பவர் ஏமாற்றம் உறுவர். அவர் விரும்புமாறு முற்றிலும் ஆதல் வேண்டும் எனின், மேற்கண்ட குறளை,

செல்வத்துள் செல்வம் செவிசெல்வம் அசெல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை.

என்று எழுத நேரும். இத்தகைய மாறுதல் ஒருகாலும் நேராது. சிறுசிறு தொடர்கள் எல்லாம் ஒரு சொல் போலவே சேர்த்து ஒலிககப்படடுச சந்தியுடன்கூடி அமைநதுள்ளன. ஆதலின் ‘ செவி செல்வம் ’ என்றும், ‘ அ செல்வம் ’ என்றும்

---

*Then sandhis or euphonic combination of letters, which are necessary in Sanskrit, are regarded as inconsistent with the character of a spoken language—Pillsbury and Meader, The Psychology of Language, p. 315.

சகரம் மிகாமல் தொடர்கள் அமைதல் இயலாது. ஆங்கிலத்தில் inpure, inproper, inpatient, inmature, inrational, inlogical என்று சொற்கள் அமையா என்பது போலவே, 'செவிசெல்வம்' 'அசெல்வம்' என்பவையும் தமிழில் அமைதல் இயலாது.

சீர்திருத்தம் எந்தத் துறையிலும் எல்லாரிடையிலும் முற்றிலும் நடைபெறுவதில்லை ; ஒரு சிலரின் வாழ்க்கையில் முழுச சீர்திருத்தம் நடைபெறினும், பலர்வாழ்ககை முழுதும் திருந்துவது அரிது. மொழித்துறையோ, தனிப்பட்ட ஒருவர் பொறுப்பில், அல்லது, சிலர் பொறுப்பில் உள்ளது அன்று ; பெருமபான்மையான மக்களின் பொறுப்பில் உள்ளது மொழியாதலின், அடியோடு மாறி அமையும நிலையை என்றும் எதிர்பார்த்தல் இயலாது.

ஆதலின், இயன்றவரையில் எளிதாக அமைந்தால் போதும் என்பவர் மகிழ்சசி அடைதலும, முற்றிலும் மாறல் வேண்டும் என்பவர் ஏமாற்றம் அடைதலும இயற்கை.

இவ்விருசாரார் நிற்க, மூன்றாவதாக மற்றொரு சாரார் உள்ளனர். அவர்கள் ஒரு சிறிதும் மாறுதல் கூடாது என்று எதிர்த்துப் போராடுபவா. மாறுதல் ஏறபட்டால், தமிழ் மொழியின் இயற்கை கெடும், தொடர்களின் பொருளுணர்ச்சி கெடும் என்றெல்லாம் அவர்கள் அஞ்சுகின்றனர்.

அவர்கள் ஒன்றை மறந்துவிட்டார்கள். மொழி ஒன்றைப் பெற்றபின்பே முன் இருந்ததை இழக்கும. எதையும் பெறுமலே, இருந்ததை இழக்காது. 'வரவில்லை' 'செய்யவில்லை' முதலிய சொற்களைப் பெற்ற பிறகுதான், 'வந்திலன்' 'செய்திலன்' முதலிய சொற்களைப் பேச்சுத் தமிழ் இழந்தது. 'வரமாட்டார்,' 'செய்யமாட்டார்' முதலியவறறைப் பெற்ற பிறகுதான், 'வாரார்,' 'செய்யார்' முதலியவற்றை இழந்தது.

இவ்வாறே ஒவ்வொரு துறையிலும், மொழி ஒன்றைப் பெற்றபிறகே ஒன்றை இழக்கின்றது.

ஆகவே, மாறுதல் வேண்டா என்று எதிர்ப்பவர் அஞ்ச வேண்டுவது இல்லை. முற்றுப்புள்ளி காற்புள்ளி முதலிய குறிகளும், இடம்விட்டு எழுதுதல் அச்சிடல் முதலிய வாய்ப்புகளும் தமிழைத் தேடிவந்து நலம் செய்த பிறகே, மேற்கண்ட மாறுதலுக்குத் தமிழ் ஓரளவு இடம் தந்துள்ளது.

> நன்மையுந்தீமையுநாடிநலம்புரிந்ததன்மையானாளப்
> படுமவாரிபெருககிவளமபடுத்துறறவையாராய்வான்
> செய்கவினைஅன்பறிவேறறமவாவின்மையிநநான்கு
> நன்குடையான்கட்டேதெளிவெனைவகையானேறி
> யக்கண்ணும்வினைவகையான்வேறாகுமாநதர்பலர்அறிந்
> தாற்றிசசெய்கிற்பாற்கலலால்வினைதான்சிறநதானென்
> றேவறபாற்றன்றுசெய்வானைநாடிவினைநாடிக்காலத்
> தோடெய்தவுணாநதுசெயலஇதனையிதனாலிவன்முடிக்
> குமென்றாய்நததனையவன்கண்விடல்.

பழங்காலத்தில் ஓலையில் எழுதியபோது எவ்வாறு எழுதினர் என்பதற்கு எடுத்துக்காட்டாகத் திருக்குறளிலிருந்து 'தெரிந்துவினையாடலில்' முதல் ஏழு குறள் மேலே காட்டப்பட்டுள்ளன.* இக்காலத்தவர் படித்தால்—அவர்க்குப் புதிய பகுதியாக இருப்பின்—படிக்கவே முடியாமல் தடுமாறுவர். இக்காலத்தில் உள்ளவைகளான இடம் விடல்,

---

*The Tamilians not only do not distinguish their sentences by any stops, but they do not, either, separate the words from one another; but even to the end of every period they write all so united together, that the whole seems but one word.—Rev. Beschi, A Grammar of the Common Dialect of the Tamil Language, p. 14.

வரியமைப்பு, முற்றுப்புள்ளி காற்புள்ளி முதலியவற்றின் துணை ஆகியவை இல்லாத நிலையில் அக்காலத்தினர் இவற்றைத் தனித்தனியே படித்தறிய எவ்வாறு முடிந்தது எனக் காண்போம்.

1. எல்லாம் செய்யுளாகவே இருந்த காலம் அது. மருத்துவம், இலக்கணம் முதலியவற்றையும் செய்யுளாகவே எழுதிவைத்திருந்தனர். ஆகவே யாப்பிலக்கணம் அவர்களுக்கு இன்றியமையாததாக இருந்தது. செய்யுள் வகைகளின் பெயர் முதலியவற்றை அறிந்திருந்ததோடு, இன்ன செய்யுள் என்று பெயர் அறிந்தவுடன் அதன் ஓசை செவியில் கேட்குமளவிற்குப் பயிற்சி பெற்றிருந்தனர். ஆசிரியப்பா என்றவுடன் நான்கு நான்காக இயற்சீர் அமைந்த அடிகள் அவர்களின் செவியில் ஒலித்தன. வெண்பா என்றவுடன் வெண்டளை அமைந்த நான்கு சீர்கள் செப்பலோசையுடன் அவர்களின் செவியில் ஒலித்தன; இறுதியடி முச்சீராய், அதன் இறுதிச்சீர் நாளமலர்காசுபிறப்பு என்னும் வாய்பாடுகளுள் ஒன்றாய் ஒலித்தது; அந்த அளவிற்குச் செய்யுட்களின் ஓசையில் அவர்களுக்குப் பயிற்சி இருந்தது. படிக்கப் போகும் செய்யுளின் ஓசை இன்னது என்று அறிந்தால், அதன் சீர்களை எளிதில் பிரித்துப் படிக்க முடியும். அதற்காக முன்னமே இது இன்ன செய்யுள்வகை என்று குறித்து விடுவார்கள். நேரிசையாசிரியப்பா, இன்னிசை வெண்பா, கலிவிருத்தம், அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் முதலிய பெயர்கள் தலைப்பில் இருத்தற்குக் காரணம் அதுவே. அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்திலேயே சிறிது வேறுபட்ட ஓசை அமையுமாயின், 'வேறு' என்று தலைப்பிட்டுக் குறிப்பர். இக்குறிப்பை உணர்ந்தவுடனே ஓசை மாறுதலை அமைத்துச் செய்யுளை ஓதுவர். இதுவே பழங்கால முறை. இதன்படி மேலே குறித்த செய்யுட்களுக்குக்

'குறள் வெண்பா' என்ற தலைப்பு இருக்கும். ஆகவே, முதலடியில் நான்கு சீரும் இரண்டாம அடியில் மூன்று சீருமாகச செப்பலோசையில் (வெண்டளையுடன்) அமைத்து ஓதத் தொடங்குவர்.

நன்மையுந் - தீமையு - நாடி - நலம்புரிந்த—
தன்மையா - ளைப் - படும்

என்று ஓசை அமைய ஓதுவர்.

நன்மையுந்தீமையுநாடிநலம்புரிந்த தன்மையாளைப்படும்

என்று சீர் பிரிக்காமல் அமைந்தமையால்தான் இவ்வளவு உதவி வேண்டியுள்ளது. இக்காலத்திலோ,

நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த
தன்மையா ளைப் படும்

என்று ஏழு சீர்களும் தனித்தனியே பிரிக்கப்பட்டும இரண்டு அடியாகப் பகுக்கப்பட்டும் எழுதப்படுவதாலும அச்சிடப் படுவதாலும், மேற்கூறிய உதவி ஒன்றும் இன்றியே எளிதில் தெளிவாக ஓத முடிகிறது. பழங்காலத்தில் ஓசையின் துணையால் செவி அறிந்து உதவியதை, இக்காலத்தில் இடம் விட்டு எழுதுதல் அல்லது அச்சிடுதலின் துணையால் கண் அறிந்து உதவுகிறது.

2. எதுகையும் மோனையும் ஆகிய தொடைவகைகள் இனிய ஓசைநயத்திற்குத் துணைசெய்வன எனினும, செய்யுட்களை அடி அடியாகப் பிரித்துக் கற்பதற்கும உதவியாவன. அடி அடியாகப் பிரிக்காமல் எழுதிவந்த பழங்காலத்தில் 'நன்மையும்' என்பது போல் ஓசை அமைந்த (எதுகை அமைந்த) 'தன்மையான்' என்ற சொல் வந்தவுடனே இரண்டாம் அடி என்ற நினைவு வரும். சில குறட்பாக்களில்,

அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள

என்பதுபோல, நான்காம் சீரிலேயே எதுகை அமையும்; அப்போது முதலடி முடிவுறுகிறது என்பதைச செவி உணர்த்திவிடும.

இவ்வாறு வேறு வேறு அடி என்று உணர்வதற்குப் பழங்காலத்தில் செவி உணர்நத ஓசை நயம் (எதுகை முதலிய வற்றின் அமைப்பு) உதவியாக இருந்ததுபோலவே, இக் காலத்தில் கண் பார்த்து அறியுமாறு தனித்தனி வரிகளில் அசசிடும் முறை உதவி செய்கிறது.

3 மேலே குறித்த ஏழு குறள்களில் இரண்டாம் குற ளின் இறுதியில் 'செய்க வினை' என்று படிகக பிறகு 'அன்பறிவு' என்று மூன்றுவது குறள் தொடஙகுகிறது. இரண்டாம குறளின் முடிவு ஆகலின் அங்கே ஒலியைச சிறிது நிறுத்தல் வேண்டும. அதனை அக்காலததவர் எவவாறு உணர்ந்தனர்? செவி வாயிலாகவே உணர்ந்தனர். 'செய்க வினையன்பறிவு' என யகர உடம்படுமெய் சேர்நதிருப்பின் சேர்த்து ஓதல்வேண்டும் என்றும, உடம்படுமெய் இலலா திருப்பின் நிறுத்தி ஓதல்வேண்டும என்றும வேறுபாடு இருந் தது. இதற்காகச செய்யுளின் இடையே எங்கும உடமபடு மெய் சோநதே ஒலிக்கும வழக்கம் இருநதது. இடையே உடம்படுமெய் இல்லாமல் ஒலிககப்படின், புதிய செய்யுளின் தொடக்கமோ என்ற தடுமாற்றம ஏற்பட்டுவிடும். எடுத்துக் காட்டாக,

வாரிபெருக்கிவளம்படுத்துற்றவைஆராய்வான்செய்கவினை

என ஓதப்படின், 'உற்றவை' என்பதோடு செய்யுள் முடி கிறதோ என்ற தடுமாற்றம் ஏற்பட்டு, அங்கே நிறுத்தப்படும். நான்காம் சீர் உடம்படுமெய் இல்லாமல் உயிரெழுத்தில்

தொடங்குவதால், அந்த செய்யுளின் தொடக்கமோ என்ற ஐயம் ஏற்படும். அவ்வாறு ஓதினால் குறளுக்கு உரிய ஓசை நிரம்பாமல் தடுமாற நேரும். இத்தகைய இடர்ப்பாடு களையும் தடுமாற்றங்களையும் போக்கவே, ஒரு செய்யுளின் தொடக்கத்தில் முதற்சீர் உயிரெழுத்தில் தொடங்கினால் அந்தமட்டும உயிரின் வடிவு தனித்திருக்குமே தவிர, செய்யுளின் இடையிலும் இறுதியிலும்(அளபெடை தவிர) எங்கும் உயிரெழுத்து அமையாமற் காத்தனர் * 'நன்மையுந் தீமையும் .. என்ற குறளில் 'தன்மையான் ஆளப்படும' என்று உயிர் தனித்து வாரமல, முன்னைய மெய்யுடன் ஒன்றி நிற்பதற்குக் காரணம அதுவே. ஆகவே தொடக்கம என்று வேறுபடுத்தி அறியும குறியாகத் தனி உயிரெழுத்துப் பயன் பட்டது. இதறகாக இரண்டு உயிரெழுத்துக்களுக்கு இடையே வரும யகர வகர உடம்படு மெய்கள் தேவையாயின. மெய்யெழுத்தை அடுத்து வரும உயிர அதனுடன் ஒன்றிநிற்கும என்ற விதியும்† தேவையாயிற்று. செவி வாயிலாகக் கற்றல் மிகுந்த நிலை போய், கண் வாயிலாகக் கற்கும நிலை உள்ள இக்காலத்தில் இவற்றின் துணை தேவையில்லை. செய்யுளின் முடிவு தொடக்கம, வாக்கியத்தின் முடிவு தொடக்கம எல்லாம் தெளிவாக அறிவிக்க அச்சிடும் முறை இக்காலத்தில் உதவியாக உள்ளது ; செய்யுளின் இறுதியிலும் வாக்கியத்தின் முடிவிலும் வரும் முற்றுப்புள்ளியும் உள்ளது.

---

*Hence the Tamilians never use the forms of vowels, which I adduced at the beginning of this work, unless the period begins with a word which has a vowel at the beginning of it.—Rev. Beschi, A Grammar of the Common Dialect of the Tamil Language, p. 14.

†உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே -நன்னூல், 204.

நன்மையான் ஆளப் படும்.
ஆராய்வான் செய்க வினை.

என்பவற்றின் இறுதியில் உள்ள முற்றுப்புள்ளிகளே இக் காலத்தில் செய்யுட்களின் முடிவை அறிவிக்க உதவுகின்றன. செய்யுட்கள் தனித்தனியே இடம்விட்டு அச்சிடப்பட்டு நிற்கும் நிலையும் இதனைத் தெளிவாக்குகிறது.

தமிழன் தன்னைக் காத்துக்கொள்ளவும் மறந்து பிறர்க்கு உதவியாக வாழ்பவன். அதனால் அவன் பட்ட இடர்ப்பாடுகள் பல. அவன்மொழி செல்வாக்கு இழந்தமைக்கும் அவன்நாடு உரிமை இழந்தமைக்கும் காரணம் அவனுடைய தாராள மனப்பான்மையே ஆகும். அவன்நிலை சீர்கெட்டுத் தாழ்வுற்றபின், இந்தப் பெருந்தன்மையே திறனின்மை என்று பிறரால் எள்ளி நகையாடப்படுகிறது

இவை போன்ற வாக்கியங்கள் உரைநடையில் எழுதப் படும்போது, ஒவ்வொரு வாக்கியத்தின் இறுதியிலும் உள்ள முற்றுப்புள்ளி அதன் முடிவுபற்றியும் அடுத்ததன் தொடக்கம் பற்றியும் அறிவிப்பதால், பழங்காலத்து உடம்படுமெய்விதியும் மெய்யுடன் உயிர் ஒன்றும விதியும தனிசசொற்களுககு இடையே இக்காலத்தில் தேவை இல்லை. சொல்லினுள்ளும் தொடரினுள்ளும்மட்டும அவை போற்றப்படல் அமையும்.

4. நான்காம் குறளில் ‘ எணைவகையாற்றேறியக் கண்ணும் ’ என்ற இடததிலும், ‘ எனைவகையால்தேறியக் கண்ணும் ’ என்று லகரம் திரியாமல் நின்றால், மேற்கூறிய வாறு ஒலி தொடர்ந்து செல்லாமல தடைப்படடு நின்று ஐயத்திற்கு இடமாகும். லகர மெய்யும் தகர மெய்யும சேர்ந்து ஒலிப்பன அல்ல. ‘ சுல்தான் ’ முதலான ஒலிகள் தமிழில் இல்லை.

நீ சொல். தம்பி வருவானா ?

முதலான வாக்கியங்களில் ஒரு வாக்கியத்தின் முடிவில் லகரமும் அடுத்த வாக்கியத்தின் முதலில் தகரமும் இருந்தால் பழங்காலத்தில் லகரம் திரியாமல் நிற்கும். ஆகவே, தொடர்ந்துசெல்லும் செய்யுள் அல்லது வாக்கியம் என்று உணர்த்துவதற்காகப் பழங்காலத்தில் இத்தகைய திரிபுகள் உதவியாக இருந்தன.

இக்காலத்தில் வாக்கியத்தின் தொடக்கம் முடிவு, தொடர்களின் தொடக்கம் முடிவு முதலியவற்றை எல்லாம் நிறுத்தற்குறிகள் (காற்புள்ளி, அரைப்புள்ளி, முக்காற்புள்ளி, முற்றுப்புள்ளி முதலியவை) உணர்த்துவதால், இவை இப்போது தேவை இல்லை. 'எனைவகையால் தேறியக் கண்ணும்' என்று பிரித்து எழுதுவதால் இன்று பொருளுணர்ச்சி ஒரு சிறிதும் கெடுவதில்லை.

இவ்வாறே இன்று மெய்யீறுகள் திரியும் திரிபுகளை விட்டு, சீர்களையும் சொற்களையும் தெளிவாகப் பிரித்து எழுதலாம்.

ஆனால் விற்றூர் என்பதை வில்தூர் என்றோ, சொற்கள் என்பதைச் சொல்கள் என்றோ எழுதக்கூடாது. சொல்லினுள்ளும், ஒரு சொல்போல் வழங்கும் தொடரினுள்ளும் இத்தகைய திரிபுகள் போற்றப்படல் வேண்டும். ஏனையிடங்களில் இத்தகைய திரிபுகள் வேண்டுவன அல்ல.

கட்டீமை விளக்குமெனை வுணர்ந்தான் றம்பி

என எழுதவேண்டுவ தில்லை.

கள் தீமை விளக்கும் என உணர்ந்தான் தம்பி

என எழுதின் அமையும்.

5. பழங்காலத் தமிழரின் செவிநுட்பத்திற்குச் சான்றாக உள்ளது குற்றியலுகரம் பற்றி எழுதப்பட்டுள்ள இலக்கணம்.

This is a pot

என்ற ஆங்கில வாக்கியம் 'ட்' என்று முடிவதில்லை; 'ட்உ' என்று முடிவதையும் அந்தச் சிறிய உகர ஒலியை ஆங்கில ஒலிமுறைப்படி உள்ளிழுத்தலையும் உணரலாம்.

இது ஒரு பாட்*

என்று தமிழ்வாக்கியத்தை நிறுத்தினால் 'ட்உ' என்னும் ஒலியே கேட்கிறது.

இந்தச் சிறிய உகர ஒலி ஆங்கிலமொழியில் உள்ளது போல் உள்ளிழுக்கப்படாமல், வெளிவிடப்படுகிறது. அதனால் அதைவிடச் சிறிது தெளிவாகக் கேட்கிறது. ஆகவே, இதை எழுத்துவடிவிலேயே குறிக்கத் தொடங்கினர் பழந்தமிழர் ; குற்றியலுகரம் எனப் பெயர் வகுத்து இலக்கணமும் எழுதினர். பிறகாலத்தவர் இதை மற்ற உகரம் போலவே ஒலிக்கவும் எழுதவும் தொடங்கினர். அதனால் தான் மயக்கம் ஏற்படலாயிற்று. தவறும் நேர்ந்தது. ஆதலின் இன்று,

இது ஒரு பாட்டு

என்று முற்றுகரமாக எழுதப்படுகிறது; ஒலிக்கவும் படுகிறது. இன்றைய தமிழில் குற்றியலுகரம் தன் நுட்பத்தை இழந்து மற்ற உகரம் போலவே ஆய்விட்டது எனலாம். இதனாலேயே சில இடர்ப்பாடுகள் பெருகிவிட்டன.

---

*ஆங்கிலத்தில் உள்ள pot என்பதும் தமிழில் உள்ள இந்தச் சொல்லும் வெவ்வேறு பொருளுடையவை. ஒலி ஒப்புமை கொண்டு ஆராய்வதற்காக இங்குத் தரப்பட்டுள்ளன.

இரண்டாம் குறளில் 'வளமபடுத்து உற்றவை' என்றும், மூன்றும் குறளில் 'அன்புஅறிவு' என்றும் 'நன்கு உடையான்' என்றும இவ்வாறே மறறக் குறள்களின் சில தொடர்களிலுமம குற்றியலுகரத்தை அடுதது உயிர்வரும் இடங்களில் பிரிக்கவேண்டியுள்ளது. பிரித்து எழுதின் அல்லது அசசிடின், வெண்பாவிற்கு உரிய ஓசை கெடுகிறது. பிரிக்காமல் எழுதின் அலலது அசசிடின், பயிற்சி குறைந்தவர் படிக்க இடர்படுகின்றனா. பழஙகாலத தமிழ் மக்களுக்குப போதிய பயிறசி இருந்தமையால், இடர்ப்படாமல் ஓதிவநதனர்.

இந்த இடாபபாட்டை நீக்குதறகு, அசசிடுவோர் சிலா குறறியலுகரத்தை மடடும பிறைக்கோட்டினுள் அமைக்கும பழககததைக் கையாளுகின்றனர். 'வளம் படுத்(து)உற்றவை', 'அன்(பு)அறிவு,' 'நன்(கு)உடையான்' என அமைக்கின்றனா. அதனல் அசசின் அழகு கெடுத லோடு, மற்றொருவகையில் முயறசித துன்பம பெருகுவதாகின்றது.

சிலர் வேறுவகைக் கொள்கை உடையவராக உள்ளனர். அதாவது பழங்காலத்து மக்கள் செவி வாயிலாகக் கற்றமையால், அவாகள் செய்புளின் ஓசை குன்றுமல் ஓதுவதில் கருத்தாக இருநதனர். இக்காலத்து மக்கள் பெரும்பாலோர் செய்யுளின் ஓசை பறறிக கவலைப்படாதவர்கள் ; ஒரு சிலரே செய்யுளின் ஓசையில பயிறசி உளளவர்கள். அவர்கள் குறறியலுகரத்தை அடுத்து உயிர் வரும் இடத்தில் அதனைத் தக்கவாறு ஒலிக்க முடியும். 'உயிர்வரின் உக்குறள் மெய்விட்டு ஓடும்' என்னும் விதியையாவது* நினைவிற் கொண்டு குற்றியலுகரத்தை ஒலிக்காமல் விட்டுச

*நன்னூல், 164.

செய்யுட்களை ஓதக் கற்பது அந்த ஒரு சிலர்க்கு எளிது. ஆதலின் பயிற்சி நிரம்பிய ஒருசிலர்க்காகக் குற்றியலுகரத்தைச் சேர்த்து அச்சிடுதல் வேண்டா என்றும், கருத்துக்களை மட்டும் நாடிக் கண் வாயிலாகக் கற்கும் பெரும்பாலோரின் நன்மையைக் கருதிக் குற்றியலுகரத்தைப் பிரித்து அச்சிடுதலே நன்மை என்றும் அவர்கள் கருதுகின்றனர்.

பெரும்பாலோரின் நலம் நாடும் அவர்களின் நோக்கம் நிறைவேறுதல் கூடும் எனத் தோன்றுகிறது.

6. சில இடங்களில் சில உயிரெழுத்துக்களின் முன் வரும் வல்லெழுத்து (க ச த ப என்பவை) மிகுதல் தமிழ் இலக்கணம். நான்காம் குறளில் ‘ஆற்றிச் செய்கிற்பாற்கு’ என்றும், ஐந்தாம் குறளில் ‘நாடிக் காலத்தோடு’ என்றும் வரும் தொடர்களில் சகரமும் ககரமும் மிகுந்தன.

ஓதி கண்டான் (கூந்தலைக் கண்டான்)
ஓதிக் கண்டான் (படித்துக் கண்டறிந்தான்)
பாடி கண்டான் (பாடியைக் கண்டான்)
பாடிக் கண்டான் (பாடல் பாடி அறிந்தான்)

இவற்றில் வல்லெழுத்து மிகாவிடின் ஒரு பொருளும், வல்லெழுத்து மிகின் வேறொரு பொருளும பயத்தல் காணலாம். ஆகவே வல்லெழுத்து மிகுதல் பொருளுணர்ச்சிக்காக ஏற்பட்ட விதி என்றும், அதனைக் கைவிடல் கூடாது என்றும் அறிஞர் வற்புறுத்துவர். ஆனால்,

பாடி எய்தினன் (பாடியை அடைந்தான்)
பாடி எய்தினன் (பாடியபடியே வந்து சேர்ந்தான்)

என்னும் தொடர்களில் வல்லெழுத்தின் துணை இல்லை; பொருளுணர்ச்சியில் தடுமாற்றம் ஏற்படுவதை அத்தகைய சந்திமுறையால் இங்குத் தடுக்க வழி இல்லை. நிறுத்தற்குறிகளாகிய காற்புள்ளி கோடு முதலியவற்றின் துணைகொண்டும்,

சொற்களை மாற்றி அமைப்பதன் வாயிலாகவுமே தடுமாற்றத்தை நீக்க முடிகிறது.

தமிழிலக்கணக்காரரும் உரையாசிரியர்களும் பழந்தமிழிலும் இத்தகைய தடுமாற்றங்கள் இருத்தலை உணர்ந்துள்ளனர். புணர்ச்சி விதிகள் கடுமையாக இருந்த பழங்காலத்திலேயே இந்நிலையைத் தடுக்க முடியவில்லை.

செம்பொன்பதின்றொடி

1. செம்பொன் + பதின்தொடி
2. செம்பு + ஒன்பதின்தொடி

நாகன்றேவன்போத்து

1. நாகன் + தேவன் + போத்து
2. நாகு + அன்றே + வன்போத்து

தாமரைக்கணியார்

1. தாமரை + கணியார்
2. தாம் + அரைக்கு + அணியார்

குன்றேறுமா

1. குன்று + ஏறு + மா
2. குன்று + ஏறு + ஆமா

குறும்பரம்பு

1. குறு + பரம்பு (குறுமை + பரம்பு)
2. குறும்பர் + அம்பு

ஆற்றுக்கரை

1. ஆறு + கரை
2. ஆற்றுக்கு + அரை

செம்பருத்தி

1. செ + பருத்தி (செம்மை + பருத்தி)
2. செம்பு + அருத்தி

3 செம்பர் + உத்தி

இவ்வாறு பல தொடர்களில் சந்தியிலக்கணமுறை இருந்தும் பயன்படாமல் பொருள் தடுமாற்றம் இருத்தலை உணர்ந்த தொல்காப்பியனார்,

எழுத்தோ ரன்ன பொருள்தெரி புணர்ச்சி
இசையின் திரிதல் நிலைஇய பண்பே[1]

என்றார். அவர்க்குப் பின் ஈராயிரம் ஆண்டுகள் கழித்துவந்த பவணந்தியாரின் காலத்திலும் தடுமாற்றங்கள் தீரவில்லை.

எழுத்தியல் திரியாப் பொருள்திரி புணர்மொழி
இசைத்திரி பால்தெளிவு எய்தும் என்ப[2]

என்று அவரும் இலக்கணத்துள் உணர்த்த முனைந்தார். இவ்வாறு சந்தியிலக்கணம் எவ்வளவு இருந்தும் பொருள் தடுமாற்றத்திற்கு இடம் இருந்துவந்தமையால், அதை ஒரு காரணமாகக் கூறி இக்காலத்தில் வற்புறுத்த முடியாது. உண்மையாகக் காணின், 'செம்பொன்பதின்றொடி' முதலியவற்றை இக்கால முறைப்படி இடம்விட்டு எழுதின், பொருள் தடுமாற்றம் இல்லாமல் உணர்த்த முடிவதும் காணலாம்.

செம்பொன் பதின் தொடி
செம்பு ஒன்பதின் தொடி

என எழுதிப் பொருள்மயக்கத்தைத் தீர்த்தல் எளிதாக உள்ளது. இந்தக் காலத்து வாக்கியங்கள் சிலவற்றையும் பழங் காலச் சந்திமுறைமட்டும் கொண்டு எழுதின் பொருள் மயக்கம் ஏற்படுவதும், இக்கால முறைப்படி எழுதின் அத்தகைய மயக்கம் ஏற்படாமையும் காணலாம்.

---

1 தொல்காப்பியம், எழுத்து, 142.

2. நன்னூல், 391.

அவன்மகன்வந்தான்

என்னும் வாக்கியம் பழைய முறைப்படி, ‘அவன் யார் என்றால் மகன், அந்த மகன் வந்தான்’ என்று ஒரு பொருளும், ‘அவனுடைய மகன் வந்தான்’ என்று மற்றொரு பொருளும் தருகிறது.

அவன்மகன் வந்தான்

என்று முதலிரு சொற்களையும் சேர்த்தும், மற்றச் சொல்லுக்கு இடம்விட்டும் அச்சிட்டால் தெளிவாக ஒரே பொருளைத் தருகிறது. ‘அவனுடைய மகன் வந்தான்’ என்ற ஒரே பொருளைத் தந்து மயக்கத்தைத் தீர்க்கிறது.

என்னூனல்லதெனச்சொல்லிக்கொண்டுபோனான்

என்று பழங்கால முறைப்படி எழுதினால், அதைப் படிப்பவர்க்கு, அந்த நூலைப் பற்றிக் கருத்தைமட்டும் சொல்லி விட்டுப் போனானா, கருத்தைச் சொன்னதோடு நூலையும் எடுத்துச் சென்றானா என்ற தடுமாற்றம் ஏற்படும். இக்கால முறைப்படி இடம்விடுதல் முதலியவற்றைப் பயன்படுத்தினால்,

என் நூல் நல்லது எனச் சொல்லிக்கொண்டு போனான்

என்று எழுதின், நூலைப் பற்றிக் கருத்தைமட்டும் சொல்லினான் என்ற பொருளும்,

என் நூல் நல்லது எனச் சொல்லிக் கொண்டுபோனான்

என்று எழுதின், நூலை எடுத்துச்சென்றான் என்ற பொருளும் வேறு வேறாகத் தெளிவாக உணர்த்த முடிகிறது.

ஆகவே, பொருளுணர்ச்சி தெளிவாக விளங்குவதற்கு இக்காலத்தில் அமைந்துள்ள புதிய துணைகள் போதும் என்பது தெளிவாகிறது. ஆயினும், வல்லெழுத்து மிகுதலாகிய சந்திமுறையைக் கைவிடுதல் எளிது அன்று. மொழி

மற்ற எல்லாத்துறைகளையும்விடப் பழமையை விடாமல் போற்றும் இயல்பு மிக்கது. மின்விளக்குகளால் பட்டப் பகல்போல் ஒளி மிகும் வகையில் அலங்காரம் செய்யப்பட்ட திருமணப் பந்தலிலும், பழங்காலத்துக் குடவிளக்கும் பல விளக்கும் இன்னும் இருந்துவருதல்போல், நிறுத்தற் குறிகள் முதலியவற்றோடு, வல்லெழுத்து மிகுதலாகிய சந்தியும் ஓரளவு இருந்துவரும் எனலாம். மின்விளக்கே வேண்டா, எல்லாம் அகல்விளக்குகளாலேயே அலங்காரம் செய்யப்படல் வேண்டும் என்று வற்புறுத்தல்தான் அறியாமை; அதுதான் புதுமை வேண்டாத் தேக்க மனப் பான்மை ஆகும்.

அண்ணன் அழத், தம்பி சிரிப்பான்

என்னும் வாக்கியத்தில் காணப்படுதல்போல், ஒரே இடத்தில் சந்தியிலக்கணம் நிறுத்தற்குறி ஆகிய இரண்டையும் பயன் படுத்துவதும் பொருந்தவில்லை; பழங்காலத்துக் குடுமியை யும் இக்காலத்துக் கிராப்பையும் ஒரே தலையில் காண்பது போல் உள்ளது.

அண்ணன் அழத் தம்பி சிரிப்பான்

என்று எழுதலாம். அல்லது,

அண்ணன் அழ, தம்பி சிரிப்பான்

என்றும் எழுதலாம். சந்தி அல்லது நிறுத்தற்குறி என இரண்டனுள் ஒன்று அமையும்.

அண்ணன் அழத் தம்பி சிரிக்க, குடும்பம் ஆரவாரமாக இருந்தது.

என்று சந்திமுறையை ஓரிடத்திலும் நிறுத்தல்குறியை மற்றோரிடத்திலும் பயன்படுத்தினாலும் குற்றம் இல்லை.

மற்றொன்றும் இங்கு நினைவில் இருத்தல் வேண்டும். இத்தகைய சிறு குறைகளும் ஒரு சில இடர்ப்பாடுகளும்

தமிழில் இருத்தல் கண்டு தமிழ்மொழியே குறை உடையது என எண்ணிவிடல் கூடாது. இந்திய மொழிகளில் தமிழ் தான் குறைபாடு குறைந்த மொழி; அறிவியல்நூல்கள் பெருகி அரசியல் செல்வாக்கும் பெற்றுவிட்டால், தமிழ் இணையற்ற மொழி என்று உலகறிய விளங்க முடியும்.

ஆயின், வீரமாமுனிவர் தாம் எழுதிய ஒரு நூலின் முன்னுரையில் தமிழில் புதிய முறைகளை மேற்கொள்ளத் தயங்குவோரைப் பற்றி, 'இந் நாட்டவர் பழைய முறைகளுக்குக் கட்டுப்பட்டு நடப்பவர்; பகுத்தறிவால் தெளிவு பெற்று வாழ்பவர் அல்லர்' என்று குறித்துள்ளார்.* அவர் இந் நாட்டவரைப் பற்றி எழுதிய இந்தக் கருத்து ஒருசிறிது உண்மையாக இருக்கலாம்; ஆனால் முற்றும் பொருந்துவது அன்று.

வீரமாமுனிவர் செய்த எழுத்துச் சீர்திருத்தத்தைத் தமிழ் ஏற்றுக்கொண்டு இன்று வரையில் போற்றிவருதலே (எ͘, எ, ஒ͘, ஒ என்று குறிலும் நெடிலும் எழுதாமல், எ, ஏ ஒ, ஓ என்று அவர் எழுதியபடி எழுதுதல்) அதை மறுக்கும் சான்றாகும். இன்று நூல்கள் இயற்றுவோர், நிறுத்தற்குறிகளை நன்கு பயன்படுத்தி வருதலும், புதுமைக் கருத்துக்கள் அமைந்த காவியங்களும் கதைகளும் கட்டுரைகளும் நாட்டில் பெருகி வருதலும் தெளிவான சான்றுகளாக உள்ளன. தமிழர் முற்போக்கான கூட்டம் என்பது உண்மையாதல் போலவே, தமிழ் முன்னேறி வளரும் மொழி என்பதும் மறுக்கமுடியாத உண்மையாகும். தமிழர் புத்துணர்ச்சியுடன்

---

*These remarks apply with particular force in this country, the natives of which are swayed not so much by reason as by authority.—Rev. Beschi, A Grammar of the High Tamil, p. 9.

புதுவாழ்வு பெற்ற காலங்களில் எல்லாம், தமிழும் புத்துயிருடன் புதுவளர்ச்சி பெற்று விளங்கிவந்திருக்கிறது. இனியும் அவ்வாறே விளங்கிவரும் என்பதில் ஐயம் இல்லை ; ஆதலின், பழைய சந்தி முறைகள் இக்காலத்தில் முன்போல் போற்றப்படுவ தில்லையே என்று ஒரு சிலர் குறை கூறினும் கவலைவேண்டா. புதிய குறியீட்டு முறைகள் கொண்டு பொருளைத் தெளிவாக—முன்னைய நிலையினும் மிகத் தெளிவாக—உணர்த்த முடிவதால், தமிழ் இழப்பது ஒன்றும் இல்லை என்று உணர்தல் வேண்டும்.

# அழகா? எளிமையா?

வீட்டிலே முழு உரிமை வேண்டும்; வெளியே ஓரளவு கட்டுப்பாடு வேண்டும்; இப்படி அமைந்தால்தான் மக்களின் வாழ்வு சீராக நடைபெற முடிகிறது. எங்கும் உரிமை என்றால் பொதுவாழ்வு கெடுகின்றது; எங்கும் கட்டுப்பாடு என்றாலும் தனிவாழ்வு கெடுகின்றது. இன்ன இன்ன இடங்களில் உரிமை உண்டு என்றும், இன்ன இன்ன இடங்களில் கட்டுப்பாடு வேண்டும் என்றும் வரையறை இருந்தால், மனிதர் தனித்தனியே வளரவும் வாய்ப்பு உளதாகின்றது; பொதுவாகக் கூடிவாழவும் வழி ஏற்படுகின்றது.

சொற்களின் உலகத்திலும் இத்தகைய ஏற்பாட்டைக் காணலாம். இன்ன இன்ன சொற்கள் இன்ன இன்ன கட்டுப்பாடுகளுக்கு இயைந்து வழங்க வேண்டும் என்ற வரையறை இருந்தால்தான், அவை ஒன்றோடொன்று பொருந்திச் சொற்றொடராக அமைந்து கருதிய பொருளை உணர்த்த முடிகிறது. சொற்கள் தனியே வழங்கும்போது எவ்வாறு இருப்பினும், கூடி வாக்கியமாக அமையும்போது கட்டுப்படவேண்டியுள்ளது. இந்தக் கட்டுப்பாடு இன்னது என்று இலக்கணம் உணர்த்துகின்றது.

பெயர்ச்சொற்கள் திணை பால் இடம் உணர்த்த வேண்டும் என்பதும், வினைச்சொற்கள் காலம் உணர்த்த வேண்டும் என்பதும் பொதுவான இலக்கணம். ஆகவே, ஒவ்வொரு பெயர்ச்சொல்லும் ஏதேனும் ஓர் இடத்திற்கு உரியதாய், ஒரு திணையில் ஒரு பாலை உணர்த்துவதாய் வரையறுக்கப்படுகின்றது. வினைச்சொல்லும் இவ்வாறு ஒரு காலத்திற்கு உரியதாய் வரையறுக்கப்படுகின்றது.

'அவன் நல்லவன்' என்று சொல்ல முடியுமே தவிர, 'அவன் நல்லவள்' என்றோ, 'அவள் நல்லவன்' என்றோ சொற்களை அமைக்க முடிவதில்லை. காரணம் என்ன? 'அவன்' என்ற சொல் ஆண்பாலுக்கு உரியதாய் வரையறைப்பட்டதால், அடுத்த சொல்லும் அதே பாலுக்கு உரியதாய் அமையவேண்டி யுள்ளது. இவ்வாறே உயர்திணைச சொல் உயர்திணைக்கு உரியதாகவும், அஃறிணைச் சொல் அஃறிணைக்கு உரியதாகவும் கட்டுப்படவேண்டும். தன்மை முன்னிலை படர்க்கை இடங்களில் ஒன்றை உணர்த்தும் போதும் அந்த ஒன்றையே உணர்த்தும் கட்டுப்பாடு உள்ளது.

நல்லை அல்லை நெடுவெண் நிலவே*

என்பது பழைய தமிழ்ப்பாட்டின் ஓர் அடி. நிலவைப் பார்த்து ஒருத்தி சொல்லும் சொல்லாக இது அமைந்துள்ளது. ஆகவே நிலவு முன்னிலை ஆகின்றது. 'நல்லை' என்பதும் முன்னிலைச் சொல். 'அல்லை' என்பதும் முன்னிலைசசொல். இவற்றில் உள்ள 'ஐ' என்னும் விகுதி (வந்தனை, சென்றனை என்பவற்றிற் போல்) முன்னிலை ஒருமை உணர்த்துவது.

இதே கருத்தை இந்தக் காலத்து எளிய தமிழில் சொல்ல முயன்றால், நேரே சொற்களை அமைக்க முடியவில்லை.

நிலவே ! நீ நல்லவன் அல்ல.
நிலவே ! நீ நல்லவள் அல்ல.
நிலவே ! நீ நல்ல பொருள் அல்ல.
நிலவே ! நீ செய்வது நல்லது அல்ல.
நிலவே ! உன் செயல் நல்லது அல்ல.
நிலவே ! நீ நல்லது செய்யவில்லை.
நிலவே ! நீ நன்மை செய்யவில்லை.

---

*குறுந்தொகை, 47.

நிலவே! உன்னால் நன்மை இல்லை.
நிலவே! நீ நல்ல துணை அல்ல.

இவ்வாறு பலவேறு வகையாகச் சொல்ல முயலலாம். முயற்சி மொழிபெயர்ப்புப் போன்றதாகவே உள்ளது. நேரான சொற்களால் சொல்லி ஒரு வாக்கியத்தை அமைக்க முடியவில்லை. நிலவை நல்லவன் நல்லவள் என்று கூறித் தடுமாறவேண்டி யுள்ளது, அல்லது, நல்ல பொருள் என்று சொல்லவேண்டி யுள்ளது. எதுவும் பொருந்தவில்லை. நீ செய்வது, உன் செயல் என்று வேறு சொற்களை வருவிக்க வேண்டியுள்ளது. வெவ்வேறு வகையில் வளைத்துச் சொல்ல வேண்டியுள்ளது. எவ்வாறோ கருத்தை உணர்த்த முடிகிறது என்ற ஆறுதல் பிறந்தபோதிலும், அந்தப் பாட்டின் அடியில் உள்ள திட்பமும் நுட்பமும் இல்லை என்று குறையுற வேண்டியதாக உள்ளது. தவிர, இவற்றில் இலக்கணக் குற்றங்களும் உள்ளன.

இதையே ஒரு மனிதனைப் பார்த்துக் கூறும் வாக்கிய மாகக் கொண்டால்,

நீ நல்லவன் அல்ல

என்று இக்காலத்து எளிய தமிழில் அமைக்கலாம். ஆனால் இதில் இலக்கணக் குற்றம் நேர்கிறது. 'நீ' என்பது முன்னிலை ஒருமை; 'நல்லவன்' என்பது (படர்க்கை) உயர்திணை ஆண்பால்; 'அல்ல' என்பது (படர்க்கை) அஃறிணைப் பலவின்பால். மூன்று சொற்களும் பொருந்தாதனவாக உள்ளன.

நீ நல்லை அல்லை

என்னும் வாக்கியமாயின், மூன்றும் முன்னிலை ஒருமைச் சொற்களாகவே உள்ளமையால் பொருந்துகின்றன.

நீர் நல்லீர் அல்லீர்
யான் நல்லேன் அல்லேன்
யாம் நல்லேம் அல்லேம்
அவன் நல்லன் அல்லன்
அவள் நல்லள் அல்லள்
அவர் நல்லர் அல்லர்
அது நன்று அன்று
அவை நல்ல அல்ல

என்பவை பழந்தமிழ் வாக்கியங்கள்.

நீர் நல்லவர் அல்ல
(நீங்கள் நல்லவாகள் அல்ல)
நான் நல்லவன் அல்ல
(நான் நல்லவள் அல்ல)
நாங்கள் நல்லவாகள் அல்ல
அவன் நல்லவன் அல்ல
அவள் நல்லவள் அல்ல
அவர் நல்லவர் அல்ல
அது நல்லது அல்ல
அவை நல்லவை அல்ல

என்பவை இக்கால வாக்கியங்கள். ஆனால் இவற்றுள் ஒவ்வொன்றிலும் மேற்கூறியவாறு இலக்கணக் குற்றங்கள் உள்ளன.

தவறான இந்த வாக்கியங்களிலும் ஒருவகை ஒழுங்கு முறை காணலாம். முதலில் உள்ள பெயர்ச்சொல் பிறழாமல் திணை பால் இடம் உணர்த்துகிறது; இடையே உள்ள பண்புச்சொல் இடம் உணர்த்தாமல், கூடியவரையில் திணை பால் உணர்த்துகிறது; இறுதியில் உள்ள முற்றுசசொல் திணை பால் இடம் உணர்த்தத் தவறிவிட்டது. தவறுகளிலும் இந்த ஒழுங்குமுறை அமைந்துள்ளது காணலாம்.

'மேலே கண்டவற்றுள், பழந்தமிழ் வாக்கியங்கள் செறிவு உடையன; இக்கால வாக்கியங்கள் அக் கருத்துக்களை உணர்த்திய போதிலும், செறிவு இழந்துவிட்டன; இலக்கணமும் தவறிவிட்டன.

வேறு சில வாக்கியங்களைக் காண்போம் :—

அது நல்லது
அது நன்றாக இருக்கிறது

இவை இக்கால வாக்கியங்கள். இரண்டும் பிழை அற்றவை; இவை இரண்டும் இருவேறு பொருள் குறிப்பன. இவற்றையே பழந்தமிழில் எழுதின்,

அது நன்று

என்று இரண்டையும் ஒரே வகையாகத்தான் எழுதமுடியும். ஆகவே, இக்காலத்து வாக்கியங்களில் உள்ள இருவேறு பொருளை உணர்த்தும் ஆற்றல் இதில் இல்லாமை காணலாம்.

அவன் நல்லவன்
அவன் நன்றாக இருக்கிறான்

என்பவற்றைப் பழந்தமிழில், தெளிவு இல்லாமல்,

அவன் நல்லன்

என்று கூறமுடியும். இக்கால வாக்கியங்களில் முன்னது பிழையற்றது. பின்னதில் சிறு பிழை காணலாம். 'அவன்' உயர்திணை ஆண்பாற்சொல்; நன்றாக என்பதில் 'நன்று' அஃறிணை ஒன்றன்பாற்சொல். ஆதலின் திணைபால் பொருந்தவில்லை.

அவள் நல்லவள்
அவள் நன்றாக இருக்கிறாள்
அவர் நல்லவர்
அவர் நன்றாக இருக்கிறார்

முதலான வாக்கியங்களிலும் இவ்வாறே காணலாம்.

'அது நன்று' என்பது வேறு ; 'அது நன்றாக இருக்கிறது' என்பது வேறு. இந்தப் பொருள்வேறுபாடு பழங்கால மக்களுக்கு ஒருவாறு புலனாகியிருந்தது. ஆயின் அதை உணர்த்த இவ்வளவு தெளிவான வழி காணவில்லை.

கடுக்கலந்த கைபிழிஎண்ணெய் பெற்றமையான் மயிர் நல்லவாயின

எனச் செயற்கைப் பொருள் ஆக்கமொடு வருதற்கு எடுத்துக் காட்டுக் கூறிய ஆசிரியர்,

மயிர் நல்ல, பயிர் நல்ல எனச் செயற்கைப் பொருள் ஆக்கம் பெறாது வந்தனவா லெனின்...

என ஆக்கமின்றி வழங்கும் வழக்கையும் எடுத்து ஆராய்தல் காணலாம். *ஆக்கச் சொல் இன்றி, 'நன்றாக இருக்கின்றன' என இயல்பை உணர்த்தும் பொருள் வேறுபாடு பிற்காலத்தே தெளிவாயிற்று எனலாம்.

மேலே கண்ட இக்கால வாக்கியங்களில் 'நன்று' என்பது திணை பால் உணர்த்தும் 'து' விகுதிபெற்றது. அதற்கு ஈடான சொல் வேறொன்று உள்ளது. அது 'நலம்' என்பது. விகுதி இல்லாத அந்தச் சொல்லைப் பயன்படுத்தி,

அவன் நலமாக இருக்கிறான்
அவள் நலமாக இருக்கிறாள்
அவர் நலமாக இருக்கிறார்
நான் நலமாக இருக்கிறேன்
நீ நலமாக இருக்கிறாய்

முதலிய வாக்கியங்கள் இக்காலத்தில் வழங்குகின்றன.

இவற்றால் உணரக் கூடிய உண்மைகளாவன :—இக்கால வாக்கியங்கள் பழங்கால வாக்கியங்களை விடப் பொருள் வேறுபாட்டைத் தெளிவாக உணர்த்துகின்றன ;

*தொல்காப்பியம், சொல். 21.

ஆனால் இலக்கணப் பிழை உடையனவாக இருக்கின்றன. இவற்றில் பண்பை உணர்த்தும் சொற்கள் திணை பால் பொருந்தாதனவாக உள்ளன; அல்லது, திணைபால் உணர்த்தும் விகுதி அற்றனவாக உள்ளன.

அவன் நல்ல பையன்
அவள் நல்ல பெண்
அவர் நல்ல மனிதர்
அவர்கள் நல்ல மக்கள்
அது நல்ல நூல்
அவை நல்ல நூல்கள்
நான் நல்ல நண்பன்
நாங்கள் நல்ல நண்பர்கள்
நீ நல்ல நண்பன்
நீர் நல்ல நண்பர்
நீங்கள் நல்ல நண்பர்கள்

மேற்கண்ட உண்மைகள் இந்த வாக்கியங்களில் பொருந்தியுள்ளனவா என்று ஆராய்வோம். இவற்றிலும் பொருள் தெளிவாக உள்ளது. இறுதியில் உள்ள ஐந்து வாக்கியங்களிலமட்டும் பிழை காணப்படுகிறது. நான் நாங்கள் நீ நீர் நீங்கள் என்பவற்றிற்கு ஏற்ப, பயனிலைகள் தன்மை முன்னிலை யிடங்களை உணர்த்தாமல் படர்க்கைச் சொற்களாக உள்ளன. அதுவே பிழை. மனிதனேன், நண்பரேம், நட்பினை,நட்பினீர் முதலிய சொற்கள் இறுதியில் அமைந்திருக்க வேண்டும். இடையில் உள்ள பண்பு உணர்த்தும் சொல் திணை பால் இடம் ஒன்றும் காட்டாமல் ‘ நல்ல ’ என்று ஒரே வடிவில் எல்லாவற்றிற்கும் பொதுவாக அமைந்துள்ளது.

இங்குக் காணும் தவறுகளிலும் மேலேகுறித்த ஒழுங்கு முறை உள்ளது ; அதாவது, முதலில் உள்ள சொல்மட்டும்

தவறாமல் திணைபால் இடம் உணர்த்த, மற்றவை அவ்வாறு உணர்த்துவதில்லை.

இவற்றையே ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துக் காண்போம் :—

He is a good boy
She is a good girl
They are good people
It is a good book
They are good books
I am a good friend
We are good friends
You are a good friend

மேற்கண்ட உண்மைகளை இந்த ஆங்கில வாக்கியங்களிலும் காணலாம். எழுவாய், திணை பால் இடங்களைத் தெளிவாக உணர்த்துகிறது. பயனிலை, எண் (ஒருமை பன்மை மட்டும் உணர்த்துகிறது (am—விதிவிலக்கு என்க). பண்பை உணர்த்தும் பெயரடை (adjective) திணை பால் உணர்த்தாத பொதுச் சொல்லாக உள்ளது.

இக்காலத் தமிழ்க்கும் பழந்தமிழ்க்கும் இவ்வகையில் வேறுபாடு இருத்தல் போலவே, இக்கால ஆங்கிலத்திற்கும் பழைய ஆங்கிலத்திற்கும் வேறுபாடு உண்டு. இக்கால ஆங்கிலத்தில் good என்ற ஒரே சொல் எல்லாத் திணைபாலிடங்கட்கும் பொருந்தி வருகிறது.* பழைய ஆங்கிலத்தில் திணை பால் வேறுபாடுகளுக்கு ஏற்ப, god, goden, gode, godum, godes, godre, godra, goda, godan, godena

*The greatest change towards simplicity and regularity is seen in the adjectives, where one form now represents the eleven different forms used by the contemporaries of Alfred.—Otto Jespersen, Growth and Structure of the English Language, p. 119.

எனப் பல வேறு வடிவங்களை வழங்கிவந்தனர். இன்று இத்தனையும் விட்டு, good என்ற ஒரு சொல்லையே எவ்வகைப் பெயர்க்கும் அடையாகப் பயன்படுத்தும் எளிய முறை அமைந்துள்ளது.

பழைய ஆங்கிலத்தில் மட்டும் அல்லாமல், லத்தீன், கிரீக், ஜெர்மன் முதலாய ஐரோப்பிய மொழிகளிலும் பண்பு உணர்த்தும் பெயரடை(adjective)திணைபால் இடங்களுக்கு ஏறப வெவ்வேறாக உள்ளது; good என்பதுபோல் பொதுவாக வழங்குதல் இல்லை.

'நல்ல' என்ற பெயரடைபோலவே, ஆறும் வேற்றுமைத் திரிபுகளாகிய என் எம் உன் உம் முதலியவற்றையும் எல்லாப் பெயர்ச்சொற்களுக்கும் பயன்படுத்தலாம்; என் வீடு, என் மனைவி, என் மக்கள் எனத் திணை பால் இடவேறுபாடு இல்லாமல் எல்லாப் பெயர்ச சொற்களுக்கும் வழங்கலாம். ஆங்கிலத்திலும் my, your முதலிய சொற்களை அவ்வாறு வழங்கலாம.

என் மனைவியும் மக்களும்

my wife and children

என ஒருமை பன்மை இரண்டும் சேர்ந்து வரும் தொடர் களுக்கும வழஙகலாம். திணைபாலிட வேறுபாடு கடந்த பெயரடைகள்போல் பொதுவாக வழங்கும் தன்மையே இத்தகைய வாய்ப்பைத் தருகின்றது. ஆனல் பிரஞ்சு மொழியில் பெயரடைகளும் ஆறும் வேற்றுமை ஏற்ற இடப் பெயர்களும் மற்றவைகளும், அடுத்து வரும் பெயர்ச் சொற் களின் திணைபால் வேறுபாடுகளுக்கு ஏற்ப வெவ்வேறு வடி வம் கொண்டு நிற்றலால், இரண்டு சொற்களுக்கு முன் இரு வேறு வடிவங்களுடன் தனித்தனியே நிற்கவேண்டும்.

என் மனைவியும் மக்களும்
my wife and children

என்பதைப் பிரஞ்சு மொழியில்,

ma femme et mes enfants

என்று கூற வேண்டும். 'என்' என்பதற்கு நேரான சொல் மனைவிக்கு முன் ma என்றும், குழந்தைகளுக்கு முன் mes என்றும் வடிவு வேறுபடுகிறது.

வேறு பெயர்ச்சொல் பெயரடையாக வரும்போதும், தமிழில் அது பொதுவாக நிற்கிறது. ஆனால் பிரெஞ்சு மொழியில் அந்த அடை மேற்கூறியவாறு வரும் சொல்லின் திணை பால்களுக்கு ஏற்ப வேறுபடுகிறது. எடுத்துக்காட்டாக,

உள்ளூர்ச் செய்தித்தாளும் குழுக்களும்

என்று தமிழில் கூறப்படுவது,

the locale press and committees

என்று ஆங்கிலத்தில் அமையும். பிரஞ்சு மொழியில்,

la presse locale et les comites locaux

என்று ஆகும். உள்ளூர் என்பதற்கு நேரான பெயரடை, ஒருமைக்கு முன் locale என்றும், பன்மைக்கு முன் locaux என்றும் இவ்வாறு வெவ்வேறு வடிவங்களுடன் நிற்கிறது.

ஐரோப்பிய மொழிகளின் இனத்தைச் சார்ந்த வட மொழியிலும் பெயரடை பால் உணர்த்துகின்றது. வட மொழியைச் சார்ந்த வட இந்திய மொழிகளிலும் இந்த நிலைமை உள்ளது. இந்தி மொழியில்

வஹ் அச்சா லடகா ஹை
வஹ் அச்சீ லடகீ ஹை
வே அச்சே ஆத்மீ ஹைன்

முதலான வாக்கியங்களில் நல்ல என்பதற்கு நேரான அச்சா

என்ற சொல், அச்சா அச்சீ அச்சே என வெவ்வேறு வடிவில் நின்று பால் உணர்த்துவது காணலாம்.

அவன் நல்லன் பையன்
அவள் நல்லள் பெண்
அவர்கள் நல்லவர்கள் மனிதர்கள்

என்பவை போல் உள்ளன அந்த வாக்கியங்கள். ஐரோப்பிய மொழிகள் பலவும் வட இந்திய மொழிகள் பலவும் இதே நிலையில்தான் உள்ளன.

இந்தி முதலிய மொழிகளின் வாக்கியங்களை நாம் கற்கும் போது, பண்பை உணர்த்தும் சொல் இவ்வாறு திணை பால் உணர்த்தவேண்டிய தில்லையே, ஏன் இந்தத் திணறல் என்று தோன்றும். 'நல்ல' என்ற பொதுச் சொல்லை எங்கும் பயன்படுத்தும் தமிழ்மொழி, 'good' என்ற பொதுச் சொல்லை எங்கும் பயன்படுத்தும் ஆங்கிலம்போல் சிறந்த நிலையில் உள்ளது எனத் தோன்றும்.

ஆனால், பழந்தமிழ் வாக்கியங்களை ஆராயும்போது, பண்பை உணர்த்தும் சொல்லும் திணை பால் இடம் உணர்த்தும் நிலையைக் காண்கிறோம். அங்கே நம் கண்ணுக்குக் குறை தோன்றாமல், செறிவும் இலக்கண அமைப்பும் தோன்றி மகிழ்விக்கின்றன. இக்காலத் தமிழில் தெளிவும் ஒழுங்கும் தோன்றி மகிழ்விக்கின்றன.*

---

*So far, then from a language suffering any loss when it gradually discards those endings in adjectives and verbs which indicated this agreement with the primary, the tendency must, on the contrary, be considered a progressive one, and full stability can be found in that language alone which has abandoned all these clumsy remnants of a bygone past.—Otto Jespersen, The Philosophy of Grammar, p. 345.

இவ்வளவும் பண்பு உணர்த்தும் பெயரடை பற்றிய ஆராய்ச்சி ஆகும்.

இனி, பயனிலையாகிய முற்றுச்சொல் பற்றி ஆராய்வோம்.

அவன் வந்தான்
அவள் வந்தாள்
அவர் வந்தார்
(அவர்கள் வந்தார்கள்)
அது வந்தது
அவை வந்தன
(அவைகள் வந்தன)
நீ வந்தாய்
நீர் வந்தீர்
(நீங்கள் வந்தீர்கள்)
நான் வந்தேன்
நாம் (நாங்கள்) வந்தோம்

இவை இக்காலத் தமிழ்வாக்கியங்கள். பழந்தமிழ் வாக்கியங்களில் வநதனன், வநதனை, வந்தனென், வநதனெம் முதலியனவாகச் சிறிது வேறுபட்ட வடிவங்கள் இருந்த போதிலும், அவைகளும் இத்தகையனவே ஆகும். இவற்றில் எல்லாப் பயனிலைகளும் திணைபால் இடங்களை உணர்த்துதல் காணலாம். முநநூறு ஆண்டுகளுக்குமுன் தமிழிலிருந்து பிரிந்து தனியே வளர்ந்த மலையாள மொழியில்,

அவன் வந்நு
அவள் வந்நு
நீ வந்நு
ஞான் வந்நு

என எல்லாத் திணைபால் இடங்களுக்கும் ஒரே வினைமுற்றுப் பயன்படுதலைக் காணல் வேண்டும். ஆங்கிலத்திலும்,

he came
she came
you came
I came

என எல்லாத் திணைபாலிடங்களுக்கும் ஒரே வினைமுற்றுப் பயன்படுதலைக் காணலாம். டச்சுப் பேச்சு மொழியிலும் இவ்வகையான பொதுமையே உள்ளது.

தமிழராகிய நாம இந்தி முதலிய மொழிகளில் பெயரடைகள் வெவ்வேறு வடிவம் கொண்டு திரிதலைக் கண்டு வெறுக்கிறோம; மலையாளிகளும் ஆங்கிலேயரும் டச்சுக்காரரும் நம் மொழியை ஆராய்வார்களானால், தமிழ்வாக்கியங்களில் பயனிலை வெவ்வேறு வடிவங்கள் கொண்டு திரிகின்றனவே என வெறுப்பர்.

வேறு வகையாகச சொன்னால், தமிழ் ஆங்கிலம் முதலியவற்றில் பெயரடை திணைபாலிடம் உணர்ததாத பொதுமை அடைந்துள்ளது; மற்ற மொழிகளில் இந்த நிலை இல்லை. மலையாளம் ஆங்கிலம் டசசு முதலியவற்றில் வினைமுற்றும் திணைபாலிடம் உணர்த்தாத பொதுமை அடைந்துள்ளது; தமிழிலுமம மற்ற மொழிகளிலும் இநத நிலை இல்லை.

எது திணை பால் இடம் உணர்த்த வேண்டும்? எது உணர்த்த வேண்டுவதில்லை? வரையறை ஏதேனும் செய்தல் கூடுமா?

ஒரு வாக்கியத்தில் ஒரு பொருளைப் பற்றிக் குறிப்பதானால், அந்தப் பொருளின் திணைபால் முதலியன பற்றி ஒருமுறை அறிவித்தல் போதும். ஒரு வாக்கியத்திலேயே திரும்பத் திரும்பச சிலமுறை அந்தத் திணைபால்களை அறிவித்தலால் பயன் இல்லை.

இன்னும் கரிய பசு ஒன்று வரவில்லை

என்ற வாக்கியத்தில் கருதப்படும் பொருள் பசு. பசு என்ற

சொல்லாலேயே அஃறிணை என்ற திணையும், ஒரு என்ற அடையால் ஒன்றன்பால் என்ற பாலும் தெளிவாக அறியக் கிடத்தலால், வேறு சொற்களால் இந்தத் திணை பால்களை அறிவிக்கவேண்டுவ தில்லை.

கன்று ஈன்ற அந்தக் கரிய பசு ஒன்று இன்னும் வரவில்லை

என்பது போல் ஒரு வாக்கியத்தில் இரண்டு அல்லது இரண்டனுக்கு மேற்பட்ட பொருள்கள் கருதப்படும் இடத்திலும், அவற்றின் திணை பால்களை ஒவ்வோரிடத்தில் உணர்த்தினால் போதும். எல்லாச சொற்களாலும் அவற்றின் திணை பால்களை உணர்த்திக்கொண் டிருக்க வேண்டுவதில்லை. ஆகவே, பெயர்சசொல் மட்டும் திணை பால் இடம் உணர்த்தினால் போதும் என்று ஏற்படுகிறது.

அநதப் பொருள்களின் பண்பு முதலியவற்றை உணர்த்தும் பெயரடைகள் அவற்றின் திணைபாலிடங்களை உணர்த்த வேண்டுவதில்லை.* பொருள்களின் தொழில் முதலியவற்றை உணர்த்தும பயனிலைகளும் திணைபாலிடங்களை உணர்த்த வேண்டுவ தில்லை.

கரிது பசு ஒன்று இன்னும் வந்தது அன்று
கரிது பசு ஒன்று இன்னும் வந்திலது.

எனப் பெயரடைகளும் பயனிலைகளும் திணைபாலிடம் உணர்த்துதல் மிகையே ஆகும்.† பொருளுக்கும் பொருளை

---

*It is a great advantage of the English language that Secondary words are so often indifferent with regard to number ; the red rose, the red roses, etc.—Otto Jespersen, The System of Grammar, p. 33.

†The old flexion is an article of luxury, modification of the idea belonging properly to the subject is here transferred to the predicate, where it has no business.—Otto Jespersen, Language. p. 335.

உணர்த்தும் பெயர்க்கும் திணைபால் வேறுபாடு கூறுவது பொருந்தும்; பொருளின் பண்புக்கோ, தொழிலுக்கோ திணைபால் வேறுபாடு கூறுதல் பொருந்தாது.

ஆங்கில மொழியில் பெயரடையும் வினைமுற்றும் திணை பால் இடங்களைக் காட்டுவதில்லை எனக் கண்டோம். ஆனால் நிகழ்கால வினைமுற்றுக்கள்மட்டும் விதிவிலக்காக உள்ளன. ஆங்கில நிகழ்கால வினைமுற்றுக்கள், தமிழைப்போல் திணை பால் காட்டாவிடினும் ஒருமை பன்மையாகிய எண் வேறு பாட்டை உணர்த்துகின்றன.

he comes
they come

என நிகழ்காலத்தில் எண் வேறுபாட்டை உணர்த்தும் இதனையும் ஆங்கில வளர்ச்சியில் உள்ள குறையாகவே கருதுகிறார் யெஸ்பெர்ஸன் என்னும் மொழியியல் அறிஞர். டச்சுமொழி இந்த வேறுபாட்டையும் உணர்த்தாமல் பொது வாக உள்ளமையால் அதன் வளர்ச்சி இதனினும் சிறந்தது என்கிறார். மலையாள மொழியும் இந்த வேறுபாடு இல்லாத பொதுவான வினைமுற்றுக்களை உடையதாக இருக்கிறது.

அவன் வருந்நு
அவர் வருந்நு

என்பன மலையாளம்.

ஆங்கிலத்தில் நிகழ்கால வினையில் உள்ள இந்தச் சிறு வேறுபாடு பழைய ஆங்கிலத்தின் கூறே ஆகும். இதுவும் மறைய வேண்டும் என்பதும், மறையாவிடின் எளிதில் கருத்து வெளியிடுவதற்கு இதுவும் தடை ஆகும் என்பதும் அறிஞர் கருத்தாகும்.*

*Even English, which has in most respects gone farthest in simplifying its inflexional system, is here

வினைமுற்று, எல்லாத் திணைபாலிடங்களுக்கும் பொதுவாக வழங்கவேண்டும் என்ற இந்த வளர்ச்சிமுறை இன்று தமிழில் உடன்பாட்டு வினைமுற்றுக்களில் இல்லை எனினும், எதிர்மறை வினைமுற்றுக்களில் புகுந்துள்ளது.

அவன் வந்திலன்
அவள் வந்திலள்
அவர் வந்திலர்
அது வந்திலது
அவை வந்தில
யான் வந்திலேன்
யாம் வந்திலேம்
நீ வந்திலை
நீர் வந்திலீர்

என்பனவாகப் பழந்தமிழில் எதிர்மறை வினைமுற்றுக்கள் இருந்தன.

அவன் வரவில்லை
அவள் வரவில்லை
நான் வரவில்லை
நீ வரவில்லை

முதலியன இக்காலத் தமிழின் எதிர்மறை வினைமுற்றுக்கள். இவற்றில் வரவில்லை என்ற ஒன்றே எல்லாத் திணை பால் இடங்களுக்கும் பொதுவாக வழங்குதல் காணலாம்.

பழைய தமிழில் திணை பால் இடங்களுக்கு ஏற்பப் பலவகை வினைமுற்றுக்களைக் கற்றுப் பேசவேண்டியிருந்தது.

---

inferior to Danish, in that in the present tense of most verbs it separates the third person singular from the other persons by giving it the ending -(e)s...small and unimportant as these survivals may seem—Otto Jespersen, Progress in Language, p. 33

இக்காலத் தமிழில் ஒரே வகை வினைமுற்றைக் கற்று அதையே எங்கும் வழங்கும் முறை உள்ளது. முன்னது மூளை நினைவிலிருத்திக் கற்கச் சுமையானது; பின்னது எளிதில் கற்கக் கூடியது. இதனால் பொருளுணர்ச்சியில் ஒரு சிறிய குறையும் இல்லையாதலின், மொழி எளிய கருவியையே பயன்படுத்துவ தாயிற்று.

இந்தப் போக்குப் பழந்தமிழிலேயே இரண்டொரு சொற்களில் புகுந்துள்ளது. இல்லை என்ற சொல் இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்கும் பொதுவாக வழங்கும் குறிப்பு முற்று என இலக்கணக்காரர் குறித்துளளனர்.* அவன் இல்லை, அவள் இல்லை, நீ இல்லை, நான் இல்லை என அது எங்கும் வழங்குதல் காணலாம்.† அவ்வாறே உண்டு என்ற சொல்லும் பிற்காலத்தில் பொதுமையான வளர்ச்சி பெற்று விட்டது.‡

உண்டு என்பதில் உள் (உண்மை) பகுதி; து, விகுதி. இந்த விகுதி அஃறிணை ஒன்றன்பால் விகுதியே யாகும். ஆதலின், உண்டு என்னும் சொல் அஃறிணை ஒன்றன்பாலே உணர்த்தாதோ எனின், உணர்த்தவில்லை என்றே கூறல் வேண்டும்.

---

*வேறுஇல்லை உண்டுஐம் பால்மூ விடத்தன—நன்னூல், 339.

†மெய்ந்நிலை மயக்கம் மானம் இல்லை.—தொல் எழுத்து. 47.

உ ஊ ஒ ஓ என்னும் நான்குயிர்
வ என் எழுத்தொடு வருதல் இல்லை —ஷை 63.

அத்தின் அகரம் அகரமுனை இல்லை—ஷை 126.

யாரும் இல்லைத் தானே கள்வன்—குறுந்தொகை, 25

‡பெண்டிரும் உண்டுகொல்—சிலப்பதிகாரம், 19 : 51–3.

அவன் உண்டு
அவைகள் உண்டு
நீ உண்டு

என்னும் வாக்கியங்களில் 'உண்டு' எந்தத் திணைபாலையும் உணர்த்தவில்லை. அதில் உள்ள 'து' விகுதி தன் பொருளிழந்து, சொல்லமைப்புக்குத் துணையாக நிற்கிறது.

'இல்லை' என்பது 'இல்ல' என்ற சொல்லின் திரிபே ஆகும்.*

'இல்ல' என்பதன் விகுதியாகிய 'அ' அஃறிணைப் பலவின்பால் உணர்த்துவது. ஆயினும் அவர் இல்லை, நீ இல்லை முதலிய வாக்கியங்களில் அந்த விகுதி தன் பொருளை இழந்து சொல்லமைப்புக்குமட்டும் துணைபுரிகிது.

'இன்று' என்னும் சொல்லும் இவவாறு பொதுவாக வழங்கத் தொடங்கியிருக்கக் கூடும். ஆயின், 'உண்டு' என்னும் சொல் இம் முயற்சியில் வெற்றி பெற்றதுபோல், 'இன்று' வெற்றி பெறவில்லை. நற்றிணையில் ஒரு பாட்டில்

பெருமலை நாடன் கேண்மை நமக்கே
விழுமம் ஆக அறியுநர் இன்றுஎனக்
கூறுவை மன்னோ நீயே

என்னும் பகுதியில் அறியுநர் இலர், அல்லது, அறியுநர் இல்லை என்னுமல், அறியுநர் இன்று எனக் கூறப்பட் டுள்ளது காண்க.

நீ அல்ல, நான் அல்ல, அவர் அல்ல, அது அல்ல முதலாய வாக்கியங்களில், அல்ல என்னும் குறிப்புமுற்றும்

---

*தல, கட, கர முதலிய பழந் திராவிடச் சொற்களே தலை, கடை, கரை எனத் திரிந்தன என்பர் மொழிநூலார். இவை போலவே 'இல்ல' என்பது 'இல்லை' எனத் திரிந்ததாகும்.

†நற்றிணை, 309.

இக்காலத் தமிழில் இவ்வாறே திணைபால் உணர்த்தாமல் பொதுவாக வழங்குகிறது. இதில் உள்ள அகர விகுதியும் மேற்கூறியவைபோல், தன்பொருள் இழந்து சொல்லமைப் புக்குத் துணை புரிந்து நிற்கிறது எனலாம்.

இவ்வாறு விகுதிகள் திணை பால் இடம் உணர்த்தும் தன்மை இழந்து, சொல்லமைப்புக்குமட்டும் உதவியாக நிற்றல் உண்டு. ஆங்கிலத்தில் இவைபோல் உள்ள சில விகுதிகளைக் குறித்து எழுதுகையில், ஸ்வீட் என்னும் அறிஞர், 'கோட்' என்னும் சட்டையின் பின்புறம் அழகுக் காக வைக்கப்படும் பொத்தான்களைப் போன்றவை என் கின்றார். ஒரு காலத்தில் அந்தப் பொத்தான்கள் பயன் பட்டன ; குதிரைச்சவாரியின்போது சட்டையின் கீழ்ப் பகுதியை மடக்கிப் பொருத்துவதற்கு அந்தப் பொத்தான் கள் ஒரு காலத்தில் பயன்பட்டன. இக்காலத்தில் அவ்வாறு சட்டையின் கீழ்ப்பகுதியை மடக்கும தேவை இல்லையாயி னும், அந்தப் பொத்தான்கள் நீக்கப்பட வில்லை ; அழகுக்காக வைக்கப்பட்டுள்ளன. உண்டு, இல்லை முதலிய பொது வினைகளில் உள்ள பால் காட்டும் விகுதிகள் அத்தகை யவை ஆகும்.*

இரண்டு, ஐந்து, எட்டு முதலாய எண்ணுப் பெயர் களில் உள்ள 'து' ஈறும், அஃறிணை ஒன்றன்பால் விகுதி யாகிய 'து' என்பதே ஆகும். அதுவும் பாலுணர்த்தும் பொருளை இழந்து, சொல்லமைப்புக்குப் பயன்பட்டு விட்டது.

---

*We might as well argue that the buttons that are still put at the back of men's dress coats are useful because our dress coats were originally coats with long tails which were buttoned up in riding.—Henry Sweet, The Practical Study of Languages, p. 70.

அவற்றின் விகுதியில் அஃறிணைப் பொருளுணர்ச்சி இருந்து வந்தமையாலேயே, பழந்தமிழில் எண்களை உயர் திணைப் பெயர்களாக்கி வழங்கிய

தலைவர் இருவர்
நண்பர் ஐவர்
மக்கள் எண்மர்

முதலான தொடர்கள் இருந்தன. அவ்விகுதிக்கு அஃறிணைப் பொருளுணர்ச்சி இக்காலத்தில் இல்லாமையால் போலும், இக்காலத் தமிழில் இரண்டு ஐந்து எட்டு என்னும் எண்களே உயர்திணைப் பெயர்களோடு சேர்ந்து வழங்குகின்றன.

இரண்டு தலைவர், தலைவர் இரண்டுபேர்
ஐந்து நண்பர், நண்பர் ஐந்துபேர்
எட்டு மக்கள், மக்கள் எட்டுப்பேர்

முதலிய தொடர்கள் வழங்கக் காண்கிறோம்.

இவற்றில் ஒருவகைச் சொற்களையே பல திணை பால் இடங்களுக்கும் பொதுவாக வழங்கும் எளிமை இருத்தலால், பொதுமக்களிடையே இவை செல்வாக்குப் பெறுகின்றன. உளன், உளள், உளர், உளேன், இலன், இலள், இலர், அல்லன், அல்லள், அல்லர், இருவர், மூவர், நால்வர் முதலாய பல வடிவங்களைக் கற்று நினைவிலிருத்தும் முயற்சி குறைவதால், இந்த எளிய முறை மொழியில் இடம் பெற்றுவிடுகிறது.

அவன் காணானாயின்...
அவள் காணாளாயின்...
அவர் காணாராயின்...
அது காணாதாயின்...
அவை காணாவாயின்...
யான் காணேனாயின்...

யாம் காணேமாயின்...
நீ காணுயாயின்...
நீர் காணீராயின்...

என்பன போன்ற பழந்தமிழ்த் தொடர்கள் வழக்கிழந்து வருகின்றன.

அவன் காணுவிட்டால் ..
அவள் காணுவிட்டால்...
நீ காணுவிட்டால்...

முதலாய தொடர்கள் இக்காலத்தில் பயின்றுவழங்குகின்றன. காணுயின் முதலியவை திணை பால் இடம் உணர்த்துவன. காணுவிட்டால் என்பது திணை பால் இடங்களுக்குப் பொது வாக நிற்பது. காணுயின் முதலாய பலவகை வடிவங் களைக் கற்று இடர்ப்படுதலை விட, காணுயின் என்னும் ஒரே தொடரைக் கற்று வழங்குதல் மிக எளிதாக உள்ளது.* ஆதலின் திணை பால் இட வேறுபாடுகளுக்கு ஏற்ப அமைந்த பழந்தமிழ்த் தொடர்கள் மெல்ல மறைகின்றன.

நீ செல்வாயேல்...
நீர் செல்வீரேல்...
யான் செல்வேனேல்...
அவன் செல்வானேல்...

முதலிய பழந்தமிழ்த் தொடர்கள் வழக்கு இழந்து வருவதற்கும்,

நீ சென்றால்...
நீர் சென்றால்...

---

*The evolution of language shows a progressive tendency from inseparable irregular conglomerations to freely and regularly combinable shorter elements —Otto Jespersen, Progress in Language, p. 55.

யான் சென்றால்...

முதலாய தொடர்கள் பயின்று வருவதற்கும் இதுவே காரணம் ஆகும்.

அவன் வந்தான், அவள் வந்தாள் முதலிய வாக்கியங்களில் உள்ள வினைமுற்றுக்களிலும் ஆன் ஆள் முதலிய விகுதிகள், திணை பால் உணர்த்துவதற்காகமட்டும் பயன்படவில்லை. அதற்காகமட்டும் இருப்ப தாயின், மேற்கண்டவை போன்ற மாறுதல் ஏற்பட் டிருக்கக்கூடும். அவற்றால் வேறொரு பயனும் இருப்பதாலேயே அவை நீங்காமல் நிற்கின்றன. வேறொரு பயனாவது : அந்த வாக்கியங்களின் முடிவை உணர்த்தல், அவை வினைமுற்றுக்கள் என உணர்த்தல். வந்தான், வந்தாள் முதலியவற்றில் பால்காட்டும் விகுதிகள் நீங்கின், வந்து என்னும் வடிவே நிற்கிறது. அது வினையெச்ச வடிவாகும். வந்து என்னும் வினையெச்சத்தினின்றும் முற்றுவினை வேறுபட்டது என்பதை உணர்த்துவதற்கும் இந்த விகுதிகள் பயன்படுதலால், அவை நீங்காமல் நிலைத்திருக்கின்றன.

எதிர்மறை வினைகள் முதலியன திணை பால் உணர்த்தாமல் பொதுவாக வழங்கத் தொடங்குவதை மேலே கண்டோம்.

பெயரை அடுத்துவரும் பெயரடைகள் (நல்ல முதலியவை) தமிழில் திணை பால் இடம் உணர்த்தாமல் பொதுவாக வழங்கிவருதலையும் கண்டோம்.

பெயரை அடுத்துவரும் வேறு சில சொற்களும் அவ்வாறு திணை பால் இட வேறுபாடு இன்றிப் பொதுவாக வழங்கத் தொடங்குதலை இனிக் காண்போம்.

அவர் எல்லோரும் வந்தனர்
அவை எல்லாம் வந்தன

நாம் எல்லாம் வந்தோம்
நீர் எல்லீரும் வந்தனிர்

என்பன பழந்தமிழ் வாக்கியங்கள். இவற்றுள் அவர் முதலிய பெயர்ச் சொற்கள் திணை பால் இடம் உணர்த்துத லால், பெயர்களை அடுத்துவரும் எல்லாம் என்னும் சொல் அவற்றை உணர்த்தல் வேண்டா; உணர்த்துதல் மிகையே ஆகும். ஆயினும் இலக்கணம் அதை வற்புறுத்துகிறது. முதற்சொல் திணைபாலிடம் உணர்த்திய பின், துணைச்சொல் உணர்த்துதல் வேண்டா என்னும் அறிஞர்கொள்கையைப் பேசும் மக்கள் அறியார். ஆயினும் எல்லீரும் முதலிய பல வடிவங்களுக்கும் ஈடாக 'எல்லாம்' என்னும் ஒரு வடிவையே பொதுவாக வழங்கும் போக்கினராய், இன்றைய தமிழ் மக்கள், அவர்கள் எல்லாம், நீங்கள் எல்லாம், நாங்கள் எல்லாம் எனப் பேசுகின்றனர். இவற்றில், எல்லாம் என்பது பாலுணர்த்தும் தன்மை இழந்து பொதுவாகிவருகின்றது.

எல்லாம் என்னும் சொல் இவ்வாறு மூவிடத்துப் பன்மைகளுக்கும் பொதுவாக வழங்கிவரும் வழக்கு நெடுங் காலத்திற்கு முன்பே ஏற்பட்டுவிட்டது.

தன்மை யான்நான் யாம்நாம்; முன்னிலை
எல்லீர் நீயிர் நீவிர் நீர்நீ;
அல்லன படர்க்கை; எல்லாம் எனல்பொது.*

என்கிறார் பவணந்தியார். இதற்கு எடுத்துக்காட்டுக்கள் காட்டிய சங்கரநமச்சிவாயர்,

> எல்லாம் என்னும் பெயர் மூவிடத்தும் வருமாறு: யாம் எல்லாம், நீயிர் எல்லாம், அவர் எல்லாம், அவை எல்லாம் என வரும்

என்கின்றார்.

*நன்னூல், 285.

தொல்காப்பியனார் காலத்தில் இந்நிலைமை இல்லை. எல்லாம் என்னும் சொல் உயர்திணையில் முன்னிலைப் பன்மைக்கும் படர்க்கைப் பன்மைக்கும் வழங்கவில்லை. நீர் எல்லாம், அவர் எல்லாம் என்னும் தொடர்கள் அவர் காலத்தில் வழூவாகக் கொள்ளப்பட்டன என்பதை,

> தன்னுள் உறுத்த பன்மைக்கு அல்லது
> உயர்திணை மருங்கின் ஆக்கம் இல்லை*

என்னும் விதியால் அறியலாம்.

ஆனால் அவர்க்குப் பின், சங்க காலத்தில், 'நெறி தாழ் இருங்கூந்தல் நின் பெண்டிர் எல்லாம்' என்ற படர்க்கைப் பெயருடன் வழங்கத் தொடங்கிவிட்டது. உரையாசிரியர் சேனாவரையர் அதனை இடவழுவமைதி என்கிறார்.†

தான் தாம் என்பன படர்க்கையிடப் பெயர்கள். தான் ஒருமை ; தாம் பன்மை.‡ இந்த எண் வேறுபாடு தவிர, பாலும் திணையும் உணர்த்தாதவை இவை. இவைகள் தனியே பெயர்ச்சொற்களாக நின்று வழங்குமிடத்து,

> தான் வந்தான்
> தான் வந்தது
> தாம் வந்தார்
> தாம் வந்தன

என எண் வேறுபாடு உணர்த்துகின்றன. இவ் வாக்கியங்களில் தான் தாம் என்பவை முதற்சொற்களாக (primary words ஆக) உள்ளன. இந்த வழக்குகள் இக்காலத்து அருகி

---

*தொல்காப்பியர், சொல், 187.

† ஷை சேனாவரையம்.

‡ தாம்என் கிளவி பன்மைக்கு உரித்தே—தொல்காப்பியம், சொல். 184.

தான்என் கிளவி ஒருமைக்கு உரித்தே—ஷை 185.

வருகின்றன. காரணம், இவை தேற்றம் பிரிநிலை முதலிய பொருள்களில் வேறு பெயர்ச்சொற்களை அடுத்துத் துணைச் சொற்களாக (secondary words ஆக) வழங்குதல் மிகுதியாக உள்ளது. இவ்வாறு வழங்குமிடத்து, 'அவர் தான் வந்தார்' என்பன போன்ற வாக்கியங்களில், 'தான்' என்பது எண் வேறுபாடும் அற்ற பொதுச்சொல்லாக வழங்கத் தொடங்கியுள்ளது.

மொழியைப் பழமையுலகத்தின் வாயிலாகக் கொண்டு பயன் பெறுவோர் சிலர்; அழகுக் கலையின் அரிய கருவியாகக் கொண்டு பயன் பெறுவோர் சிலர்; ஆயின், அன்றாட வாழ்வில் பிறருடன் பழகுவதற்கும் கருத்துக்களை வெளியிடுவதற்கும் உரிய கருவியாகக் கொண்டு பயன் பெறுவோரே மிகப் பலர். அரசியல் முதலிய துறைகளில் மாறுதல் நிகழ்வதற்குப் பெரும்பாலோரின் விருப்பம் காரணமாக இருத்தல் போலவே, மொழியின் மாறுதல்களுக்கும் இந்த மூன்றும் வகையினரின் விருப்பம் காரணமாக அமைகிறது. பழைய இலக்கியங்களைக் கற்றுத் திளைக்கும் சிலரும் அழகிய செறிவான நடையைப் போற்றி மகிழும் சிலரும் எவ்வளவு தடுத்து நின்றபோதிலும், பெரும்பாலோராகிய இவர்களின் போக்கிலேயே மொழி செல்லும். தடைகள் ஒரு சில காலம் ஈர்த்துப் பிடித்து நிறுத்தலாம்; இறுதியில் வெற்றி பெறுவது பெரும்பாலோரின் போக்கே ஆகும். ஆங்கிலம் முதலாய பல மொழிகளின் வரலாறுகள் இதற்குச் சான்றாக உள்ளன. தமிழ்மட்டும் விதிவிலக்காக நிற்றல் அரிது.

இங்கிலையில், முதற் சொற்களுக்கு(primary words) மட்டும் திணை பால் இட வேறுபாடுகள் தேவை எனவும், மற்றத் துணைச் சொற்களுக்கு (secondary words)

அவை தேவையில்லை எனவும் ஆங்கிலம் முதலிய மொழிகள் கொண்டுள்ளதுபோல், தமிழும் கொள்ள நேரும்.*

இல்லை, உண்டு, எல்லாம் முதலிய சொற்களின் வளர்ச்சிகள் இதனை நெடுங்காலமாகவே அறிவுறுத்திவருகின்றன. இலக்கணத்திலும் இலக்கியத்திலும் காலப்போக்கில் ஏற்பட்டுள்ள நெகிழ்ச்சிகளும் இதனை அறிவுறுத்துகின்றன. ஒரு காலத்தில் வழுவாக இருந்தவை மற்றொரு காலத்தில் வழுவமைதி ஆதலும், பிறகு படிப்படியே செல்வாக்குப் பெற்று வழாநிலை எனப்படுதலும் கண்டோம். ஆகவே இலக்கணக் குற்றம் என விரைந்து குறைகூறுதலை விடுத்து, மொழியின் போக்கைப் பொறுமையுடன் ஆராய்வதால் உண்மைகள் விளங்கப் பெறலாம்.†

---

*The historian examines his texts over various centuries and finds a growing tendency to neglect the forms, distinctive of number, etc. And then the linguist philosopher may step in and say that the demand for grammatical concord in these cases is simply a consequence of the imperfection of language, for the ideas of number, gender (sex), case and person belong logically only to primary words and not to secondary ones like adjective (adjunct) and verb.—Otto Jespersen, The Philosophy of Grammar, p. 345.

†The study of linguistic history is of the utmost importance to the grammarian. It broadens his mind and tends to eliminate that tendency to reprobation which is the besetting sin of the non-historic grammarian, for the history of languages shows that changes have constantly taken place in the past, and that what was bad grammar in one period may become good grammar in the next... The traditional grammarian of the old type states the rules and looks upon deviations as blunders, which he

பழங்காலத்துத் தட்டுமுட்டுச் சாமான்கள் கலைத்திறன் மிக்க வேலைப்பாடு பொருந்தியவைகளாக இருந்தன. சோறு உண்ணும் கலமாக இருந்தாலும், நீர் பருகும் குவளையாக இருந்தாலும், வெற்றிலைத் தட்டாக இருந்தாலும் வேலைப்பாடும் அழகும் மிகுந்து விளங்கின. இக்காலத்து யந்திரங்களில் உண்டாக்கப்படும் தட்டு, குவளை முதலிய பொருள்கள் எல்லாம் ஏறக்குறைய ஒரே வகையாய்க் குறைந்த விலையில் விற்கப்படும் எளிய பொருள்களாக உள்ளன. பழங்காலத்து வீடுகளின் வாயில்நிலைகள் முதலியன சிற்ப வேலைப்பாட்டுடன் பொலிந்தன ; பொலிகின்றன ; இக் காலதநுப் புதிய வீடுகள் எல்லாம் சிமெண்டினால் ஆகிய பெட்டிகள் போல் உள்ளன. வாழ்க்கையில் ஒருவகை மாறுதல் எல்லாத் துறையிலும் நேர்தல் போலவே, மொழித் துறையிலும்—சிறப்பாக, வாக்கிய இலக்கணத்திலும்—நேர்கிறது போலும்! பழங்கால மக்களுக்கு ஓய்வு மிக்கிருந்தமையால் அமைதியாக எண்ணிக் கலைத்திறனுடன் அழகுபடப் பேசும வாய்ப்பு இருந்தது. கலைக்கு உரிய வாய்ப்பும் ஓய்வும் பொதுவாகக் குறையும் யந்திர நாகரிக வாழ்வில், குறைந்த முயற்சியில் நிறைந்த பயனைப் பெறும் வேட்கையே மொழித்துறையிலும் உள்ளது எனலாம். அதுதான் வளரும் மொழிகளின் போக்கு என்கின்றனர் மொழியியலார்.*

---

thinks himself justified in branding as illogical. The linguistic philologist finds out the reasons why the rules are broken in this or that case.—Otto Jespersen, The Philosophy of Grammar, p. 345.

*That language ranks highest which goes farthest in the art of accomplishing much with little means, or, in other words which is able to express the greatest amount of meaning with the simplest mechanism.—Otto Jespersen, Language, p. 324.

தமிழ் வாக்கியங்களும் அழகைப் பெரிதாகப் போற்றுமல் எளிமையைப் பெரிதும் போற்றத் தலைப்பட்டுள்ளன என்பதை மேலே கண்டோம். இந்த எளிமையிலேயே அழகும் கலந்து விளங்க முடியுமானால், அது வரவேற்கத் தக்கதே ஆகும். கருத்து உயிர்; சொற்கள் உடல். சொற்களின் அழகு பற்றிய முயற்சி குன்றியபோதிலும், கருத்துக்களிலாவது அழகை வளர்த்துப் போற்றும் நிலை ஏற்பட்டால், புறத்தே அமையும் எளிமையோடு அகத்தே ஒரு புதிய அழகாவது ஏற்படக்கூடும். இனி வளரும் தமிழ் அத்தகைய எளிமையும் அழகும் இயைந்த இயையைக் காணுமோ?

# பெரியோர் சிறுபிழை

**ஙனம்**

"ஙப்போல் வளை" என்றார் ஓர் அவ்வையார். ங ஙா ஙி ஙீ ஙு ஙூ ஙெ ஙே ஙை ஙொ ஙோ ஙௌ என்னும் பன்னிரண்டு உயிர்மெய் யெழுத்துக்களைச் சிறுவர்கள் கற்கிறார்கள். இவற்றுள் ங தவிர மற்றப் பதினொன்றும் எந்தச் சொல்லிலும் வருவதில்லை; ஆகையால் இவற்றைப் பிறகு எந்த வகுப்பிலும் சிறுவர் படிக்க வாய்ப்பே இல்லை. ங என்ற ஓர் எழுத்தே சொற்களில் வழங்குவது. அந்த ஓர் உயிர்மெய்யைக் கற்பதற்காக அதனோடு மற்றப் பதினொன்றையும் பார்த்தும் எழுதியும் கற்கவேண்டியுள்ளது. ங இவ்வாறு தன் இனமாகிய பதினோரெழுத்துக்களையும் வாழச் செய்வது போல், முயற்சியும் ஆற்றலும் உள்ள ஒருவன், வாழ வகை இல்லாத தன் சுற்றத்தாரைத் தழுவிக் காப்பாற்ற வேண்டும் என்னும கருத்துடன் அமைந்தது இந்த மணிமொழி. இதனால் சுற்றத்தாரை ஓம்பும் ஒருவனுக்கு ங உவமை ஆயிற்று.

ங எங்கு எவ்வாறு சொல்லில் அமைந்துவருகிறது எனக் காண்போம் :

அங்ஙனம் இங்ஙனம் உங்ஙனம் யாங்ஙனம் எங்ஙனம் என்னும சொற்களில் ங அமைந்துள்ளது.

> சுட்டியா எகர வினாவழி அவ்வை
> ஒட்டி ஙவ்வும் முதலா கும்மே.*

என்கிறார் பவணந்தியார். ஆனால் அங்ஙனம் முதலிய சொற்கள் பழந்தமிழ் இலக்கியத்தில் இல்லை.

---

*நன்னூல், 106.

ஈங்கனம் செல்க தானென என்னை
யாங்கறிந் தனளோ தாங்கருங் காவலன்[1]

யாங்கனம் ஒத்தியோ வீங்குசெலல் மண்டிலம்[2]

யாங்கனம் மொழிகோ ஓங்குவாட் கோதையை[3]

என்னும் அடிகளின் ஈங்கனம் யாங்கனம் என்னும் சொற்களே உள்ளன. ஆதலின் அங்ஙனம் இங்ஙனம் முதலிய வடிவங்கள் பிழையானவை என்பது தெளிவு.

அங்ஙனம் முதலியவற்றை எடுத்துக்காட்டிய மயிலைநாதர், சங்க இலக்கியத்தில் பயிற்சி நிரம்பியவர். சங்கர நமச்சிவாயர், சிவஞான முனிவர் முதலியோரும் அவ்வாறே பழந்தமிழ் இலக்கியப் பயிற்சி நிரம்பியவர்கள். அங்ஙனம், இங்ஙனம் முதலிய சொற்கள் பழந்தமிழில் இல்லை என்று அறிந்தும் அவற்றையே எடுத்துக்காட்டுக்களாகத் தந்துள்ளனர்.

சங்கரநமச்சிவாயர்மட்டும் அறிந்தும் தவறு செய்வார் போல் தடுமாறுகிறார். அங்ஙனம் இங்ஙனம் முதலியவற்றை நினைக்கும்போது, ஆங்கனம் ஈங்கனம் முதலிய சொற்களும் அவற்றின் முதலுருப்பாகிய ஆங்கு ஈங்கு முதலிய சொற்களும் அவர்க்கு நினைவுக்கு வருகின்றன. அதனால், "இவற்றை அங்கு எங்கு என்றாற்போல ஒரு மொழிகளென்றால் என்னை எனின்...." என்று இல்லாத ஐயப்பாட்டை எழுப்பிக்கொண்டு அமைதி கூறுகிறார்.

தோல் இருக்கச் சுளை விழுங்கினாற்போல், ஈங்கனம் யாங்கனம் முதலிய உண்மை வடிவங்கள் பழைய இலக்கியத்தில் இருத்தலை நன்கு அறிந்திருந்தும்,

---

1. புறநானூறு, 208.
2. ஷை 8.
3. ஷை 49.

> ஙனம் என்பது இடத்தினையும் தன்மையினையும் உணர்த்தும் தும் பல பொருளொரு சொல்லாய் வருகின்றது

என்கின்றார் சங்கரநமச்சிவாயர். அவ்வாறாயின், ஙனம் என்னும் சொல் இடத்தையோ தன்மையையோ உணர்த்தி எங்கும் ஒரு சொல்லாய் வரவில்லையே என்று பிறர் மறுக்கக் கூடும் என்பதை உணர்ந்தவராய்,

> தனித்துவருந் தன்மையதன்றி முடவன் கோலூன்றி வந்தாற்போலச் சுட்டு வினா வாகிய இடைச்சொற்களை முன்னிட்டு வருதலான்

என்கிறார். ஙனம் என்பது சொல் என்றும், அதில் ஙகரம் முதலெழுத்து என்றும் துணிந்து சொல்லமுடியாதவராய்,

> ஏனைய மெய்கள்போல முதலாகாமையின் அவ்வோடென்னுது ஒட்டி என்றும், ஒருவாற்றான் முதலாதலின் இழிவு சிறப்பாக ஙவ்வும் என்றும் கூறினர்

என்று நூலாசிரியரைக் காக்க முயல்கிறார். ஙகரம் மொழிக்கு முதலாகாது என்பவர் சங்கரநமச்சிவாயரின் காலத்திலும் இருந்தனர் என்பதற்கும் அவருடைய உரையே சான்றாக உள்ளது.

> இங்ஙனம் கூறலான் ஙகரம் மொழிக்கு முதலாகாது என்பார்க்கு உடன்படலும் மறுத்தலுமாய்ப் பிறர்தம் மதம் மேற்கொண்டு களைவே என்னும் மதம்படக் கூறினார் என்றுணர்க

என்ற உரைப் பகுதி இதனைப் புலப்படுத்தும். அங்ஙனம் இங்ஙனம் முதலியவை குற்றம் என எடுத்துக்காட்டுவார் உண்டு எனக் கூறும் உரையாசிரியர், "இங்ஙனம் கூறலான் ஙகரம்..." என்னும் பகுதியில் தாமே இங்ஙனம் என்று தவறான வடிவை எடுத்தாளுகிறார்.

தொல்காப்பியனார் மொழிமுதலாகும் எழுத்துக்களைக் கூறுமிடத்து ஙகரத்தைக் கூறவில்லை. இந்த உரையாசிரியர் இதையும் புறக்கணித்து எழுதியுள்ளார்.

இவ்வாறு ஙனம் என்பது சொல் அன்று என்றும், அங்ஙனம் முதலியவைகளே வழுவற்ற சொற்கள் என்றும் பலர் கருதும் நிலைமை இருந்தும், பெரும் புலவராகிய அவ்வையார் இதனைப் புறக்கணித்து 'ஙப்போல் வளை' என்று எழுத முன்வந்த காரணம் என்ன? சுற்றத்தாரைத் தழுவிக காப்பவனாகிய ஒருவனுக்கு உவமையாகக் கூறும் எழுத்து, இவ்வாறு உண்டா இல்லையா என்று ஐயுறும் எழுத்தாக அமையலாமா? 'எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்' எனப் போற்றிக் கூறிய அவ்வையார், அந்த எண்ணையும எழுத்தையும் இகழ்வதுபோல் பழைய இலக்கணத்தையும் இலக்கியத்தையும் புறக்கணித்து, 'ஙனம்' என்ற பிழையான சொல்லைப் போற்றி எடுத்துக்காட்டுதல் தகுமோ? அவ்வையார் போன்ற பெரியோர் இத்தகைய பிழை செய்யலாமோ? சிறுபிழையே ஆயினும், பெரியோர் செய்யத் தகுமோ?

அவ்வையார் இத்தகைய பிழை செய்யவில்லை என்று கூறி அவர் பெருமையைக் காக்கவும் இடம் உண்டு. அவர் 'ஙப்போல் வளை' என்று கூறினார். இங்கு 'ங' என்றது ஙகர உயிர்மெய்யெழுத்து எனக் கொள்ளவேண்டுவ தில்லை. அவ்வாறு கொண்டு, ஙனம் என்னும் சொல்லையும், அதற்கு வாழ்வு நல்க முயன்ற பவணந்தியாரையும், அவர்க்கு அரண் செய்ய முயன்ற உரையாசிரியரையும் சான்று காட்ட வேண்டுவது மில்லை. 'ஙப்போல் வளை' என்பதில் ங என்றது உயிர்மெய்யெழுத்தை அன்று எனவும், ங் என்ற மெய்யெழுத்தையே எனவும், ங என்றதில் உள்ள அகரம் எழுத்துச் சாரியை எனவும் கூறிவிடலாம். அவ்வாறு கூறின், அங்கனம், இங்கனம், எங்கனம் முதலிய பழந்தமிழ்ச் சொற்

களையும், அங்கு இங்கு எங்கு முதலிய (என்றும் உள்ள) தமிழ்ச்சொற்களையும் எடுத்துக்காட்டி, இவற்றில் ங் என்ற மெய்யெழுத்து ஒன்றுமட்டும் வழங்கி, வழக்கில் இல்லாத ங ஙா ஙி ஙீ முதலான பன்னிரண்டு உயிர்மெய்யெழுத்துக்களை யும் நெடுங்கணக்கில் இடம்பெறச் செய்து காத்துவருதல் போல், குடும்பத் தலைவன் ஒருவன் வாழ வழியற்ற சுற்றத்தார் எல்லோரையும் காக்கவேண்டும் என்று விளக்கம் கூறலாம். அவ்வாறு கூறின், அவ்வையாா ஒரு சிறு பிழையும் செய்யாத பெரும்புலவராகவே விளங்குவார்.

ஆனால், அப்போது பவணந்தியார், சிறு பிழை செய்த இலக்கண ஆசிரியராக நிற்கிறார். அவரைக் காக்க வழி உண்டோ எனின், இல்லை. இலக்கிய ஆட்சியும் இலக்கண மரபும் அதற்கு இடந்தரவில்லை. ஆயின், மொழியியல் (Philology) இடம் தருகிறது.

ஆங்கனம், ஈங்கனம் முதலாய சொற்களில் இரண்டாம் எழுத்தாகிய மெய் மூக்கினம் (nasal) ஆகும். மூன்றாம் எழுத்தில் உள்ள மெய் மென்மையாக ஒலிக்கப்படும் வல்லி னம் (sonant) ஆகும். ங க இரண்டும் பின்னண்ணத்தில் நாவின் முயற்சியால் பிறக்கும ஒலிகளாகும். காற்று வெளிப் படும் முயற்சியிலேயே இரண்டினுக்கும் வேறுபாடு உண்டு. காற்று மூக்கின் வாயிலாக வெளிப்படின் ங பிறக்கும்; இல்லையேல் க பிறக்கும. இதுவே வேறுபாடு. முன்னுள்ள ங என்னும் மெய்யை ஒலிக்கும்போது காற்று மூக்கின் வாயிலாக வெளிப்படும் அதே நிலையில் அடுத்த மெய்யும் ஒலிக்கப்படுமானால் அதுவும் ங ஆகிவிடும். அவ்வாறு ஆதல் இயற்கை. அடுத்துவரும் மெய்யால் முன்னுள்ள மெய் மாறுதலும் உண்டு. முன்னுள்ள மெய்யால் அடுத்துவரும் மெய் மாறுதலும் உண்டு. முன்னது, இருந்ததன் திரிபு (regressive assimilation) எனப்படும்; பின்னது

வந்ததன் திரிபு (progressive assimilation) எனப்படும் ; முள்செடி—முட்செடி என்பதில் இருந்தது திரிந்தது (regressive assimilation) ; என் தம்பி—என்றம்பி என்பதில் வந்தது திரிந்தது(progressive assimilation). அங்கனம் என்பது அங்ஙனம் எனத் திரிந்ததும் இவ் வகையைச் சார்ந்ததாகும்.

அங்கு + அனம்—அங்கனம் என்று ஆகிய தொடர் மொழியில், அங்கு என்னும் ஒரு சொல்லிலேயே அவ்வாறு திரிதல் உண்டோ எனின், உண்டு எனலாம். நெருநல் நென்னல் ஆயிற்று ; பெருமான் பெம்மான் ஆயிற்று. தமிழைமட்டும் ஆராயாமல், அதன் இனமொழிகளையும் ஆராயின் மேலும் தெளிவாகும். தமிழில் உள்ள பொழுது, தெலுங்கில் பொத்து ஆயிற்று ; எருது எத்து ஆயிற்று. தமிழ் எருமை கன்னடத்தில் எம்மே ஆயிற்று. தமிழிலும் மலையாளத்திலும் உள்ள பல சொற்களை ஒப்பிட்டால் இது மேலும் தெளிவாகும் :

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| இன்று | இன்னு |
| வந்து | வந்நு |
| மரங்கள் | மரங்ஙள் |
| நிலங்கள் | நிலங்ஙள் |
| தங்கள் | தங்ஙள் |
| நங்கள் | ஞங்ஙள் |
| நீங்கள் | நிங்ஙள் |

நீங்கள் நிங்ஙள் ஆனது போன்றதே ஆங்கனம் அங்ஙனம் ஆன திரிபு.

ஆயின், இவற்றைக் கொண்டும் நன்னூலார் குற்ற மற்றவர் எனக் காட்டல் இயலாது. ஙகர மெய்யுடன் அகரவுயிர் கூடி இயங்குதல் உண்டு என்பதை இதனால்

விளக்க முடியுமே தவிர, ங மொழிமுதல் எழுத்தாக வரும் என்று காட்ட முடியாது. ஆதலின் அவ்வை ஒட்டி ங வரும் என்று கூறாமல், 'அவ்வை ஒட்டி ஙவ்வும் முதலாகும்மே' என்றது பொருந்தவில்லை. முதலாகும் என்று கூறிய பவணந்தியார் அ+ஙனம் என்று பிரித்து, பிரிக்கும் முறையில் பிழைபட்டார். அங்கு+அனம் - அங்கனம் என்று பிரித்தாற் போலவே, அங்ஙு+அனம் - அங்ஙனம் என்று பிரித்திருக்க வேண்டும். ஆகவே, அங்ஙனம், இங்ஙனம் என்பவை திரிந்த சொல்வடிவங்கள் என்று உடன்பட்ட போதிலும், ஙனம் என்பது ஒரு சொல் என்று உடன்பட முடியவில்லை.

## 'கின்று' இடைநிலை

நன்னூலார் இஙகுச் செய்த பிழைபோலவே, வேறு சில இடங்களிலும் பிழைபடப் பிரித்து விதிகள் எழுதியுள்ளார். வீரசோழியம் என்னும் இலக்கண நூல் நன்னூலுக்குச் சிறிது முற்பட்டது. அந்த நூலாசிரியர் பிழை செய்யினும் நன்னூலார் செய்திருக்க வேண்டுவதில்லை. வீரசோழியம் வடமொழியின் இலக்கணத்தைத் தமிழுக்குப் போர்த்த புனைந்த ஒருநூல் ஆகும். அதன் ஆசிரியர், தமிழ்மொழியின் இயல்பு அறியாமல் அடிப்படையிலேயே தவறு செய்யத் துணிந்தவர். நன்னூல் எழுதிய பவணந்தியார் அவ்வாறு செய்தவர் அல்லர். ஆதலின் அவர் எண்ணிப்பார்த்துப் பிழை இல்லாமல் சொற்களைப் பிரித்து உணர்த்தியிருக்கலாம்.

நிகழ்கால இடைநிலைகளைக் கூறிய பவணந்தியார், ஆநின்று கின்று கிறு என மூன்று கூறியுள்ளார்.

> ஆநின்று கின்று கிறுமூ விடத்தின்
> ஐம்பால் நிகழ்பொழுது அறைவினை இடைநிலை.*

---

*நன்னூல், 143.

இந்த இடைநிலைகளுள் ஆநின்று என்பது பழையது. செய்யாநின்றான், உண்ணாநின்றாள் முதலிய சொற்களில் உள்ள இடைநிலை அது. இவற்றை ஒருமொழியாகக் கொள்ளாமல் தொடர்மொழியாகக் கொண்டிருக்கலாம். செய்யா+நின்றான், உண்ணா+நின்றாள் எனப் பிரித்து, முதலில் உள்ளது செய்யா என்னும் வாய்பாட்டு உடன் பாட்டு வினையெச்சம் என்றும், அடுத்தது இறந்தகால வினை முற்று என்றும் பகுத்து, தொடர்மொழிகளாகக் கொண் டிருப்பின், ஆநின்று என்ற இடைநிலை பிறந்திருக்காது. செய்துகொண்டிருந்தான், உண்டுகொண்டிருந்தான் எனப் பொருள் படுதலால் இறப்பில் நிகழ்வு என்னும் உண்மைக் காலமும் இதனால் தெளிவாகியிருக்கும்.

தொல்காப்பியனார் செய்யா என்னும் வாய்பாடு கூற வில்லை. செய்யூ என்னும் வாய்பாடுமட்டுமே கூறியுள் ளார்.* உரையாசிரியரும் சேனாவரையரும் ஊகாரம் ஆகார மாகத் திரிந்துவரும் என்கிறார்.† நேமிநாத ஆசிரியர் குணவீர பண்டிதர் செய்யூ என்னும் வாய்பாட்டைக் கூறவில்லை. ஆதலின் அவர்காலத்தில் அது வழக்கிறந்துவிட்டது என உணரலாம். அவர் செய்யா என்னும் வாய்பாட்டைத் தந்துள்ளார்.‡

ஆகவே அதுகொண்டு, 'ஆநின்று' என்பதில் உள்ள 'ஆ' என்பது வினையெச்சவிகுதி என்றும், 'நின்று' என்பதில் 'நில்' என்பது துணைவினை என்றும், நின்று என்பது அதன் இறந்தகால வடிவு என்றும் கூறலாம்.

---

*செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி.
— தொல்காப்பியம், சொல். 228.

† ஷை ‡நேமிநாதம், 43.

'உண்ணாநின்றார்' என்ற சொல்லில் உள்ள நில் என்பதைத் தனியே பிரித்து உணர்த்துகிறார் சேனாவரையர்.

> இனி அவை நிகழ்காலம்பற்றி வருங்கால், நில்கின்று என்பனவற்றோடு வரும். நில்லென்பது லகாரம் னகாரமாய் றகாரம் பெற்று நிற்கும். உதாரணம் : உண்ணாநின்றனம், உண்கின்றனம், உண்ணாநின்றாம், உண்கின்றாம், உண்ணாநின்றனெம், உண்கின்றனெம், உண்ணாநின்றேம், உண்கின்றேம், உண்ணாநின்றனேம், உண்கின்றனேம் எனவரும்[1]

என்கின்றார். உண்ணாநின்றனென், உண்ணாநின்றேன்[2] எனும் தன்மையொருமை வினைகளையும், உண்ணாநின்றனன் உண்ணாநின்றான், உண்ணாநின்றனள், உண்ணாநின்றாள்[3] என்னும் படர்க்கை ஆண்பால் பெண்பாற் சொற்களையும், உண்ணாநின்றனர், உண்ணாநின்றார்[4] என்னும் பலர்பாற் சொற்களையும், உண்ணாநின்றன, உண்ணாநின்ற[5] என்னும் பலவின்பாற் சொற்களையும், உண்ணாநின்றது[6] என்னும் ஒன்றன்பாற் சொல்லையும், உண்ணாநின்றனை, உண்ணாநின்றாய்[7] என்னும் முன்னிலையொருமைச் சொல்லையும், உண்ணாநின்றனிர், உண்ணாநின்றீர்[8] என்னும் முன்னிலைப் பன்மைச சொல்லையும் தொடர்ந்து பல இடங்களிலும் எடுத்துக்காட்டிச் செல்கின்றார். உண்ணாநின்றேம் என்பதை இறந்தகாலத்து நிகழ்வுபற்றி வந்தது என்றும், அதுபோல் உண்ணாநிற்பல் என்பது எதிர்காலத்து நிகழ்வுபற்றி வந்தது என்றும் மேலும் விளக்கம் செய்துள்ளார்.[9] 'ஆநின்று' என்று நன்னூலார்

---

1. தொல்காப்பியம், சொல். 202. சேனாவரையம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2. | ஷை | 203. | 6. | ஷை | 217. |
| 3. | ஷை | 205. | 7. | ஷை | 223. |
| 4. | ஷை | 206. | 8. | ஷை | 224. |
| 5. | ஷை | 216. | 9. | ஷை | 202. |

போல் கூருமல், நில் என்பதையே சேனுவரையர் பிரித்து எடுத்துக்கூறுவது போற்றத்தக்கது. உண்மை இவ்வாறு இருக்க, பவணந்தியார்க்கு ' ஆநின்று ' என்பது இடைநிலை யாய்ப் பிரிந்து தோன்றியது வியப்பாகவே உள்ளது.

உண்ணுநின்றனம் என்பதுபோல் வேறு சில சொற் களும் உள்ளன ; ' உண்ணுகிடந்தனம், உண்ணுவிருந்தனம் எனக் கிட இரு என்பனவும் சிறுபான்மை நிகழ்காலத்து வரும் ' என்று சேனுவரையர் குறித்துள்ளார். உண்ணு நின்றனம் என்பதில் ' ஆநின்று ' இடைநிலையாயின், உண்ணு கிடந்தனம், உண்ணுவிருந்தனம் என்பவற்றில் ' ஆகிடந்து ' ' ஆவிருந்து ' என்பவை இடைநிலைகளாதல் வேண்டும். ' ஆநின்று ' இடைநிலை எனக் கூறிய பவணந்தியார், ' ஆகிடந்து ' ' ஆவிருந்து ' என்பவற்றை இடைநிலைகள் எனக் கூருதது ஏனே தெரியவில்லை.

நில் கிட இரு என்னும் துணைவினைகளைப்(auxiliaries) பிரித்துணர்த்திய சேனுவரையர், கின்று என்பதைமட்டும் பிரிக்காமலே உணர்த்துகின்ருர். நின்று, கிடந்து, இருந்து என்பவற்றில் நில் கிட இரு என்பவை தனியே பொரு ளுணர்த்துதல்போல் கின்று என்பதில் பிரிந்துநிற்கக் கூடியது ஒன்று சேனுவரையர்க்குப் புலனுகவில்லை. கில் என்னும் துணைவினை ஒன்று உண்டு ; ஆற்றற் பொருளை உணர்த்துவது அது ; செய்யகில்லேன், உண்ணகில்லேன் முதலிய சொற்களில் உள்ளது அது. செய்கின்றேன், உண்கின்றேன் முதலிய சொற்களில் இப்பொருள் இல்லை. ஆதலின், ' கில் ' என்று பிரித்தல் இயலாது. அதனுல் கின்று என்று பிரித்தார் போலும்.

ஆயினும், உண்ணுகிடந்தார், உண்ணுவிருந்தார் முத லியவை போல, உண்கின்ருர் செய்கின்ருர் முதலிய சொற் களும் சங்ககாலத்திற்குப்பின் (அல்லது, சங்ககாலத்தின் பிற்

பகுதியிலிருந்து) தோன்றி வளர்ந்தவை. வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் தோன்றிய சொற்களில், இடைநிலைகளைப் பிரித்து உணர்தல் அரிது அன்று.

அதன் தோற்றத்தை ஆராயின், அது சங்க இலக்கியமாகிய பத்துப்பாட்டிலும் எட்டுத்தொகையிலும் இல்லை எனக் காண்கிறோம். சங்க இலக்கியத்துள் உள்ள நோக்கின்று[1] உயங்கின்று[2] முதலான சொற்கள் வேறு; நோக்கிற்று உயங்கிற்று என்னும் சொற்களின் மென்மை வடிவங்களே அவை. அவை இறந்தகாலம் காட்டுவன; இறந்த கால இடைநிலையாகிய 'இன்' பெற்று அமைந்தவை. ஆதலின் அவை வேறு; கின்று என்னும் நிகழ்கால இடைநிலை பெற்ற சொற்கள் வேறு. பதினெண்கீழ்க்கணக்கிலும்[3] சிலப்பதிகாரத்திலும்[4] மணிமேகலையிலுமே[5] கின்று அமைந்த சொற்கள் முதல்முதலாகக் காணக்கிடக்கின்றன. நாயன்மார்[6]

---

1. புறநானூறு, 141.
2. அகநானூறு, 43.
3. வாழ்கின்றார்—திணைமாலை நூற்றைம்பது, 109
   உழல்கின்றார்— ஷை 139.
   சோர்கின்ற—திணைமொழியைம்பது, 19.
   ஒறுக்கின்றது—பழமொழி நானூறு, 238.
   ஈகின்றார்— ஷை 303.
4. விளம்புகின்ற—மணிமேகலை, 27-106.
   உருள்கின்ற—சிலப்பதிகாரம், 29-10.
5. உரைக்கின்ற—மணிமேகலை, 17-68.
6. போதுகின்றேன்—தேவாரம், 6-பூம்புகலூர்.
   இருக்கின்றான்— ஷை திருவாரூர்.
   விரைகின்றேன்—திருவாசகம், திருச்சதகம், 14.
   வாழ்கின்றாய்— ஷை 20.

ஆழ்வார்களின்[1] காலத்தில் பெருகி வழங்கியுள்ளன. பதினோராம் நூற்றாண்டில் (அல்லது, சிறிது முன்பு பத்தாம் நூற்றாண்டில்) புத்தமித்திரனார் தாம் எழுதிய இலக்கண நூலில் 'கிறான், கிறாள், கிறார்[2] முதலியவற்றை விகுதி என வடநூல்முறையைப் பின்பற்றிக் குறிப்பிட்டுள்ளமையால், அக்காலத்தில் அது செல்வாக்குப் பெற்றுவிட்டது என உணரலாம். அடுத்து வந்த பவணந்தியார் கின்று கிறு என்பவற்றை இடைநிலை என்று குறித்ததோடு[3] அல்லாமல், 'செய்கின்ற' என்பதைப் பெயரெச்ச வாய்பாடுகளுள் ஒன்றாகவும் குறிக்கின்றார்.[4] ஆதலின், கி. பி. இரண்டாம் நூற்றாண்டுக்குப் பிறகு இந்த இடைநிலை தோன்றி வளர்ந்து பத்தாம் நூற்றாண்டளவில் மொழியில் வேரூன்றி விட்டது எனக் கூறலாம். ஆதலின், இந்த இடைநிலை வரலாற்றுக் காலத்திற்கு உட்பட்டது, ஆராய்ச்சிக்கு எட்டக் கூடியது எனலாம்.

வரலாற்றுக்கு எட்டாத இறந்தகால இடைநிலைகளையும் எதிர்கால இடைநிலைகளையும் தெளிவான பாகுபாடு செய்து கூடியவரையில் உண்மை கண்டு உணர்த்த முயன்ற பவணந்தியார், இந்த நிகழ்கால இடைநிலையைப் பற்றி இன்னும் தெளிவாக உணர்த்தியிருக்கக் கூடும். ஆனால் அந்த யானைக்கும் அடி சறுக்கியது.

---

1. வருகின்றான்—பெரியதிருமொழி, 3-3-1.
   என்கின்றாள்— ௸ 8-1-1.
   சிதைக்கின்ற—திருவிருத்தம், 34
   உதைக்கின்ற— ௸
2. வீரசோழியம், கிரியாதாதுப்படலம், 4.
3. நன்னூல், 143.
4. ௸ 340.

'செய்கின்ருன்' என்பதில் செய் - பகுதி, கின்று - இடைநிலை, ஆன் - விகுதி எனப் பிரித்தவர், கு என்னும் சாரியை கண்டு பிரித்திருப்பாரேல் தெளிவு ஏற்பட்டிருக்கும். செய்+கு+இன்று+ஆன் எனப் பிரித்து, 'இன்று' நிகழ்கால இடைநிலை எனக் கூறியிருக்க வேண்டும். ஆ, போ என்னும் பகுதியோடு 'உம்' விகுதி சேரும்போது ஆகும் போகும் எனக் குகரச் சாரியை சேர்வதுபோல், செய்கின்ருர் உண்கின்ருர் முதலியவற்றில் 'இன்று' என்னும் இடைநிலைக்குமுன் குகரச் சாரியை சேர்ந்துள்ளது எனப் பிரித்து உணர்த்தியிருக்க வேண்டும். இன்று என்பதற்கு இப்போது என்ற பொருள் உள்ளமையால், நிகழ் காலம் உணர்த்தும் தகுதி அந்த இடைநிலைக்கு உளதாகின்றது. இதை விடுத்து, கின்று என்று பொருளற்ற ஒன்றைப் பிரித்தெடுத்துக் கூறுவதில் பயனில்லை.

அங்ஙனம் என்பதை அங்கு+அனம் எனப் பிரிக்காமையால் இடர்ப்பாடு விளைந்தது போலவே, செய்கின்ருன் என்பதைச செய்+கு+இன்று +ஆன் எனப் பிரிக்காமையால் இடர்ப்பாடு விளைந்தது.

செய்கின்ருன் என்பதே செய்கிருன் என நின்றது ஆகையால், கிறு என்று தனியே ஓர் இடைநிலை எடுத்துக் கூறவேண்டுவதும் இல்லை.

எல்லாப் பிழையையும் பவணந்தியாரின் குறையாகவே கூறுதலும் பொருந்தாது. புத்தமித்திரனுர், கின்ருன் கின்ருள் கிருன் கிருள் என்று பிரித்து உணர்த்திய காரணத்தால், பவணந்தியார் அவ்வழியே சிறிது சென்று கின்று கிறு எனப் பிரித்துணர்த்தினுர்.

### 'ஆல்' உருபு

இவ்வாறே மூன்ரும் வேற்றுமை உருபு கூறியவிடத்தும் பவணந்தியார் பிழைபடுகின்ருர். தொல்காப்பியனுர் மூன்

ரும் வேற்றுமை உருபாக ' ஆன் ' என்பதைக் கூறியிருக்க, பவணந்தியார் அதனுடன் ' ஆல் ' என்பதையும் கூறுகின்ருர். பழைய இலக்கியத்தில் காணப்படுவது ' ஆன் ' உருபே. பவணந்தியார்க்கு இந்த உண்மை தெரியும். ஆயினும் அவர் 'ஆல்' என்பதையும் உணர்த்துதல் கூடாது என்று அவர்மேல் குற்றம் கூறல் பொருந்தாது. அவர்க்குமுன் புலவர் பலர் தம்தம் நூல்களில் ஆன் உருபுக்கு ஈடாக ஆல் உருபை வழங்கியிருக்கக் கண்டமையால், இலக்கியம் கண்டு இலக்கணம் எழுதும் பொறுப்பை மேற்கொண்ட பவணந்தியார் அதனையும் உருபாக எடுத்தோதியுள்ளார். தனித்தனி உருபுகளாக இரண்டு கூருமல், ஒன்று மற்றென்றன் திரிபு என உணர்த்தியிருந்தால், குறைகூற இடமிருந்திக்காது.

தொல்காப்பியத்திற்கு உரை எழுதியவர்கள் ஆனுருபு வழங்கும் தொடர்களையே எடுத்துக்காட்டுகின்றனர் ; ஆல் உருபைப் பற்றி ஒன்றும் குறிக்கவில்லை. நன்னூலுக்கு உரை எழுதிய மயிலைநாதரும் சங்கரநமச்சிவாயரும் ஆன்உருபு அமைந்த புறநானூற்று அடி ஒன்றை ஆல் உருபாகத் திரித்து உதாரணம் காட்டியுள்ளனர்.

தூங்குகையா னோங்குநடைய
உறழ்மணியா னுயர்மருப்பின*

என்னும் அடிகளைத்

தூங்குகையா லோங்குநடைய
உறழ்மணியா லுயர்மருப்பின

என்று திரித்து எழுதியுள்ளனர். புறநானூற்றுக் காலத்தில் பழம் புலவர்கள் கண்டும் கேட்டும் அறியாத ஆல் உருபை, அவர்களின் பாட்டிலேயே அமைத்துக் காட்டியுள்ளனர். அன்றியும், தொல்காப்பியனுர் அறியாத அந்த உருபை

*புறநானூறு, 22.

அவர்க்கு முற்பட்ட அகத்தியர் அறிந்திருந்ததாக ஒரு நூற்பாவைக் காட்டுகின்றனர்.

ஆலும் ஆனும் ஓடும் ஒடுவும்
சாலு மூன்றும் வேற்றுமைத் தனுவே
செய்வோன் காரணம் செயத்தகு கருவி
எய்திய தொழின்முத லியைபுட னதன்பொருள்

என்று யாரோ இயற்றிய நூற்பாவை அகத்தியனார் பெயரால் காட்டுகின்றனர்.

இனி இந்த ஆல் உருபு எவ்வாறு தோன்றியது என ஆராய்வோம். இதுவும் பிழைபடப் பிரித்ததன் விளைவே ஆகும்.

அவற்கண்டு என்பதை (அவன்+கண்டு, அவல்+கண்டு என) இருவகையாகப் பிரித்தல் கூடும். மாணிறம் என்பதையும் (மால்+நிறம், மான்+நிறம் என) இருவகையாகப் பிரித்தல் இயலும். லகரம் னகரம் இரண்டுமே வல்லினம் வரின் றகரமாகத் திரியும்; லகரம் மெல்லினம் வரின் னகரமாகும்; னகரமோ வந்த மெல்லினத்தோடு இயையும். ஆகையால், சில தொடர்களைப் பிரிக்கும்போது மேலே காட்டியவாறு நிலைமொழி ஈறு னகரமோ லகரமோ என ஐயுற நேரும். அதனால், அறிவாற் றெளிந்தான், அறிவானேர்ந்தான் என்பன போன்றவற்றை,

அறிவான்+தெளிந்தான்
அறிவான்+நேர்ந்தான்

எனப் பிரித்து, ஆன் உருபு எனக் கொள்ளாமல் பிழைபட்டு,

அறிவால்+தெளிந்தான்
அறிவால்+நேர்ந்தான்

எனப் பிரித்து, ஆல் உருபு எனக் கொண்டனர். இவ்வாறு

ஒருசிலர் சில இடங்களில் செய்த சிறு பிழை, நாளடைவில் பெருவழக்காகப் பரவலாயிற்று. வல்லினமோ மெல்லினமோ வராமல், வருமொழி முதலில் உயிர் வருமிடத்திலும், '

அறிவா லறிந்தான்

என ஐயமற ஆல் உருபே சேர்த்து வழங்கும் வழக்குப் பிற்காலத்தில் ஏற்படலாயிற்று.

முன்னோர் பிரித்த முறையினின்றும் வழுவி வேறு வகையாகத் தொடர்களைப் பிரிப்பதனால் புதிய உருபும் இடைநிலையும் சொல்லும் பிறந்த கதையை மேலே கண்டோம். பிழைபடப் பிரித்த காரணத்தால், ஆன் உருபோடு ஆல் உருபும் சேர்ந்தது. இன்று என்னமல் ' கின்று ' இடைநிலை என்றனர். உயிர்மெய்யாக வாழ்வு பெறாத ஙகர மெய்யெழுத்து, அகரத்தோடு சேர்ந்து வாழும் வாழ்வை ' ஙனம் ' என்ற சொல்லில் பெற வைத்தனர். எல்லாம சிறு பிழையால் விளைந்த விளைவுகள்.

இவ்வாறு தவறுபடப் பிரித்தலால் புதிய சொற்கள் ஏற்படுதல் எல்லா மொழிகளிலும் உண்டு. a+numpire என்று பிரிக்கத் தெரியாமல் an+umpire என்று பிரித்து umpire என்ற புதிய சொல் ஆங்கில மொழியில் இடம் பெற்றது; a+naddre என்று பிரிக்காமல், an+adder. என்று பிழைபடப் பிரித்த காரணத்தால, adder என்பது சொல்வடிவாக ஆங்கில அகராதியில் இடம் பெற்றது. பழந்தமிழிலக்கியத்தில் உள்ள 'அளை' என்ற சொல்லை உடம்படுமெய்யாகிய வகரத்தினின்றும் பிரிக்கத் தவறிய பிழையால் (பலவளை, பல+அளை, பல+வளை) வளை என்ற சொல் வடிவு (எலிவளை, நண்டுவளை முதலியவற்றில்) புதிதாகத் தமிழில் ஏற்பட்டதும் இப்படியே. இதனை மொழியியல்

அறிஞர் யெஸ்பர்ஸன் பிறழ்பிரிப்பு metanalysis என்ற பெயரால் குறிப்பிடுகின்றார்.*

**செய்யும்**

இவ்வாறு பிழைபடப் பிரித்த காரணத்தால், தமிழ் மொழியில் கால இடைநிலை ஒன்று பல்வேறு வடிவம் எடுத்துப் பலவகைப் பெயர்களால் வழங்குகின்றது. பின்வரும் சொற்களை ஆராய்ந்தால், அதன் உண்மைவடிவம் விளங்கும்.

செய்யும் என்னும் சொல்லில் உள்ள உம் என்பதை விகுதி என்று இலக்கணக்காரர் கூறுகின்றனர். எந்தப் பெயரால் அது கூறப்படினும், அது பால் காட்டும் விகுதி அன்று என்பது தெளிவு. ஏன் எனின்,

அது செய்யும்
அவை செய்யும்

என அஃறிணை ஒருமை பன்மை இரண்டனுக்கும் பொதுவாக அது வழங்குகிறது. ஆனால் பழங்காலத்தில், அவற்றோடு உயர்திணை ஆண்பாலிலும் பெண்பாலிலும் வழங்கி வந்தது எனத் தொல்காப்பியத்தால் அறியலாம்.[1] பவணந்தியாரும்[2] அதைக் கூறுகிறார். பழந்தமிழ் இலக்கியமும் இதற்குச்

---

*I have ventured to coin the term 'metanalysis', by which I mean that words or word-groups are by a new generation analyzed differently from the analysis of a former age.—Otto Jespersen, Language, p. 173.

1. பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
அவ்வயின் மூன்றும் நிகழும் காலத்துச்
செய்யும் என்னும் கிளவியொடு கொள்ளா.
—தொல்காப்பியம், சொல். 227.

2. பல்லோர் படர்க்கை தன்மை முன்னிலையிற்
செல்லா தாகும் செய்யுமென் முற்றே.—நன்னூல், 348.

சான்றாக உள்ளது.[1] அஃறிணை ஒருமை பன்மையையோ உயர்திணை ஆண்பால் பெண்பாலையோ உணர்த்தும் தன்மை இந்த 'உம்' விகுதிக்கு இல்லை. ஆதலின் இதனைத் திணை பால் வேறுபாடு அற்ற சொல் எனவே கூறவேண்டும். ஆனால், 'நிகழூஉங் காலத்துச் செய்யுமென் கிளவி' என்று தொல்காப்பியனார் காலத்தை வரையறுத்துக் கூறுவதால், இந்த 'உம்' என்பது கால இடைநிலை போன்றது எனக் கொள்ளலாம்.

## செய்கு

தன்மை ஒருமை வினைமுற்றில் வரும் கு டு து று[2] என்னும் விகுதிகளையும், தன்மைப்பன்மை வினைமுற்றில் வரும் கும் டும் தும் றும்[3] என்னும் விகுதிகளையும் இங்கு ஆராய்ந்தால், இவற்றில் உள்ள உ என்பதும் உம் என்பதும் 'செய்யும்' என்பதில் உள்ள உம் விகுதியோடு தொடர்பு உடையன என்று கொள்ள இடம் தருகின்றன. கின்று என்பதில் உள்ள குகரச் சாரியை தனியே பிரிக்கத்தக்கதாக இருத்தல்போல, இவற்றில உள்ள க் ட் த் ற் என்னும்

---

1. சேர்ப்பான் வரும்—அகநானூறு, 50.
   எந்தை...என்னும்—ஷை 12.
   வேட்டுவன்...பெறும்—புறநானூறு, 214.
   இவள்...வாடும்—கலித்தொகை, 3-10.
   ஐயை சொல்லும்—சிலப்பதிகாரம், 11-151.
   பிரான்...உழிதரும்—திருவாசகம், திருச்சதகம், 7.
   இவள்...மயங்கும்—பெரியதிருமொழி, 2-7-6.
   நம்பி...வரும்—சிந்தாமணி, 1909.
   இவள்...விழும்—மதுரைக்கலம்பகம், 15.
   சிவன் செயும்—திருவெங்கைக் கலம்பகம், 59.
2. தொல்காப்பியம், சொல். 202.
3. ஷை 203.

மெய்களும் ஒலிநயத்திற்காகத் தோன்றியவை என்று பிரிக்கத் தக்கன.

தொல்காப்பியனார் இவை இன்ன காலம் உணர்த்தும் எனக் குறிக்கவில்லை. ஆயின் இளம்பூரணர்,

உம்மொடு வரூஉம் கடதற எதிர்காலம் பற்றிவரும்[1]

என்கிறார். சேனாவரையர்,

குற்றுகர நான்கும்...எதிர்காலம் பற்றிவரும்[2]

என்கிறார். இவ்வுரையாசிரியர்களின் கருத்தின்படி, உ உம் இரண்டும் எதிர்காலம் காட்டுவன ஆகின்றன. ஆயின், செய்யும் என்பதில் உள்ள உம் விகுதி நிகழ்காலம் உணர்த்துவது என்கிறார் தொல்காப்பியனார். பவணந்தியாரோ செய்யும் என்பது நிகழ்காலம் எதிர்காலம் இரண்டையும் உணர்த்தும் என்கிறார்.[3] புத்தமித்திரனார் எதிர்காலத்தை உணர்த்தும் என்கிறார்.[4]

உம் என்பது நிகழ்காலம் உணர்த்தும் என்று தொல்காப்பியனார் கூறுவதைவிட, நிகழ்காலமும் எதிர்காலமும் உணர்த்தும் என்று பவணந்தியார் கூறுவது பொருந்தும். அதைவிட, உம் எதிர்காலம் உணர்த்துவது என்றும், சில இடங்களில் நிகழ்காலத்தை உணர்த்தவும் பயன்பட்டது என்றும் கூறுதல் மிகப் பொருந்தும். உம் என்பது விகுதியா இடைநிலையா என்று தடுமாறுதல் வேண்டா. அது பால் காட்டாமல் காலம் காட்டும் உறுப்பு என்பது தெளிவு. சொல்லின் இறுதியில் அமைதலால் விகுதி என்றும், இடை

1. தொல்காப்பியம், சொல். 202.
2. ஷை 203.
3. 'செய்யு நிகழ் பெதிர்வும்'—நன்னூல். 145.
4. வீரசோழியம், தாதுப்படலம், 7.

யில் அமையாமையின் இடைநிலை அன்று என்றும் கூறுவ தால் பயன் இல்லை. ஒரு முழுச் சொல்லாக இருந்து, பிறகு இடைச்சொல்லாகப் பயன்பட்டது என்ற அளவிற்கு உண்மை உள்ளது. உம்பர்,[1] உம்மை என்பவற்றில் உம் என்பது இனி எய்தும் மேலுலகத்தையும் இனிவரும் பிறப் பையும் உணர்த்துதல் காணலாம். டாக்டர் குண்டர்ட் என்பவர், உகரம் 'மேலே' என்னும் பொருள் உணர்த்து வது என்று சொல்லி, 'உயர்' என்ற சொல்லையே எடுத்துக் காட்டாகத் தருகிறார்.[2]

'மேலே' என்பதே பொருள் எனக் கொள்ளினும், இடத்தை நோக்காது காலத்தை நோக்கின், அடுத்து மேலே வரும் காலம் எதிர்காலம் எனப் பொருளாகிறது. அவ்வாறன்றி, அகரச் சுட்டு அறிவிற்கோ கண்ணிற்கோ எட்டிய சேய்மைப் பொருளையும், இகரச சுட்டு அவ்வா றன அண்மைப் பொருளையும் உணர்த்துதல்போல், உகரச் சுட்டு அறிவிற்கும் கண்ணிற்கும் எட்டாத பொருளை உணர்த்துவது எனக் கொண்டும் ஆராயலாம். உப்பக்கம், ஊங்கண், உது (உதுக்காண்) முதலிய சொற்களாலும் இதனைத் தெளியலாம். உகரத்திற்கு இத்தகைய பொருளைக் கொண்டு, கருத்திற்கு எட்டாததாகிய எதிர்காலமே இங்கு உணர்த்தப்படுவது எனத் தெளிந்தால் உம் அல்லது உ என் னும் இடைசசொல் எதிர்காலத்தை உணர்த்துதல் காணலாம்.

தொல்காப்பியனாரின் காலத்தில் நிகழ்கால இடை நிலைகளாகிய கின்று கிறு என்பவை இல்லை என்பதை மேலே கண்டோம். எதிர்கால வினைச்சொற்களே அக்

1. அதனும்பர் - அதற்குமேல்.
—சிலப்பதிகாரம். 11-120. பழைய உரை.

2. 'உம்'—டாக்டர் குண்டர்ட் இயற்றிய மலையாள அகராதி.

காலத்தில் நிகழ்காலத்தையும் உணர்த்திவந்தன. நிகழ்காலம் என்பது மக்களின் கருத்து வளர்ச்சியில் பிற்காலத்தே தோன்றியதாகும். பழங்கால மக்கள் இறந்தகாலத்தைத் தெளிவாக உணர்ந்தனர்; எதிர்காலத்தையும் ஒருவாறு உணர்ந்தனர். நிகழ்காலம் என்பது ஒரு நொடிப்பொழுதின் அளவே நிற்பதாய், அடுத்த நொடியில் இறந்தகாலமாய்க் கழிவது ஆதலின் அது உணர்வதற்கு அரியது; கருத்து நுட்பம் வளர்ந்த பிற்காலத்தே அதை உணர்த்தும் தேவை ஏற்பட்டது. அப்போதும் இறந்தகாலத்தி லிருந்து மட்டும் அதை வேறுபடுத்த விரும்பினர். அந்நிலையில் எதிர்காலச சொல்லாலேயே நிகழ்காலத்தையும் உணர்த்தினர். கோதர்களின் மொழியில் இன்றுவரையில் இதே நிலைமை உள்ளது என்கிறார் கால்டுவெல்.* தொல்காப்பியனார், செய்யும் என்னும் சொல் நிகழ்வு எதிர்வு இரண்டிலும் வழங்குதலை உணர்ந்து, எதிர்காலத்திற்கு வேறு பல சொற்கள் இருப்பதால், செய்யும் என்பதை நிகழ்காலத்திற்கு என வரையறைப்படுத்த விரும்பினார். ஆயின், அதுவோ மீண்டும் மீண்டும் எதிர்காலத்தை உணர்த்தி இலக்கியங்களில் வழங்குவதாயிற்று. இது கண்ட பவணந்தியார், செய்யும் என்பது இரண்டுகாலத்தையும் உணர்த்துவதாகக் கூறியுள்ளார். கிறு கின்று என்னும் இடைநிலைகளை உடைய நிகழ்கால வினைசசொற்கள் மிகுந்த இக்காலத்தில், செய்யும் என்பது தெளிவாக எதிர்காலத்தைமட்டுமே உணர்த்துதல் காணலாம். அது வரும், அவைகள் ஓடும் என்னும் வாக்கியங்களில் நிகழ்காலப் பொருளே இல்லை; எதிர்காலம் மட்டுமே இவற்றில் உணர்த்தப்படுவதை மக்களின் பேச்சைக் கொண்டு அறிய

*Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 494.

லாம். ஆதலின், தொல்காப்பியனார், ' நிகழூங் காலத்துச் செய்யும் என்னும் கிளவி '[1] என ஓதியபோதிலும் அது எதிர் காலம் உணர்த்துவதாகக் கொள்வதே பொருந்தும். தமிழிலிருந்து பிரிந்து வளரும் மலையாளமொழியில் செய்யும் என்னும் முற்று எதிர்காலமே உணர்த்திவருதலும் இங்குக் கருதத்தக்க தாகும்.

தொல்காப்பியனார், ' நிகழூம் காலத்துச் செய்யுமென் கிளவி ' என்றதற்கு ஏற்பவே எல்லா உரையாசிரியர்களும் அது நிகழ்காலம் உணர்த்தும் எனக் கூறியுள்ளனர். தெய்வச் சிலையார் என்னும் உரையாசிரியர்மட்டுமே, அது எதிர் காலமும் உணர்த்தும் என்று குறித்துள்ளார்.

> ஈண்டு நிகழ்காலம் குறித்தது என்னை, எதிர்காலம் குறித்து வாராதோ எனின், எதிர்காலத்துக்கண் வருவது காலமயக்க மாகக் கொள்க[2]

என்று அவர் எழுதியுள்ளார். உண்மை ஒருவாறு அவர்க் குப் புலனாயிற்று எனலாம். அதனாலேயே எதிர்காலத்தில் வருவதைக் குறிப்பிட்டுள்ளார். உள்ளவாறு காணின், அது எதிர்காலத்தில் வருதல் இயல்பு என்றும், நிகழ்காலத் தில் வருவது காலமயக்கம் என்றும் கொள்ளவேண்டும்.

## எதிர்கால இடைநிலைகள்

வ ப என்பவற்றைப் பவணந்தியார் எதிர்கால இடை நிலைகள் என்கிறார். மேற்போக்காகக் காணின், இவற்றிற் கும் மேலே கண்ட உம் என்னும் இடைச் சொல்லுக்கும் தொடர்பே இல்லைபோல் தோன்றுகிறது. இவ்வாறு தொடர்

1. தொல்காப்பியம், சொல். 222.
2. தொல்காப்பியம், சொல். 220. தெய்வச்சிலையார் உரை.

பற்ற தோற்றம் ஏற்படுவதற்கும் மேற்குறித்த பிறழ்பிரிப்பு (metanalysis) என்பதே காரணம் எனலாம்.

செய்யும்+என் —செய்யுமேன்*
—செய்மேன்
—செய்வேன்

உண்ணும்+என் —உண்ணுமேன்
—உண்மேன்
—உண்பேன்

என ஆகும் மாறுதல்களைப் படிப்படியே ஆராய்ந்தால் உண்மை விளங்கும்.

செய்யுமேன், உண்ணுமேன் என்பவற்றின் இடையில் உம் என்பதன் உகரம் கெடுதல் தமிழில் இயல்பாக உள்ளது. தொல்காப்பியனாரே இதனை எடுத்துரைக்கிறார்.

செய்யும் என்னும் பெயரெஞ்சு கிளவிக்கு
மெய்யொடும் கெடுமே ஈற்றுமிசை உகரம்
அவ்விடன் அறிதல் என்மனார் புலவர்†

என்று அவர் கூறியவிடத்தில் பெயரெச்சத்தையே குறித்த போதிலும், செய்யும் என்னும் சொல்லே சில இடங்களில் முற்றாகவும் சில இடங்களில் பெயரெச்சமாகவும் வழங்குகின்றது ஆதலின் இவ்விதி இங்கும் பொருந்தும் எனக் கொள்ளலாம்.

வாவும் புரவி என்பது வாம் புரவி என்றாயிற்று

என்று பெயரெச்சத்திற்கு எடுத்துக்காட்டுத் தந்த இளம் பூரணர்,

---

*புறநானூறு 252-ஆம் பாட்டில் உள்ள கொய்யுமோன் என்னும் படர்க்கை ஆண்பாற் சொல் செய்யுவோன் என்னும் பொருளதாய் எதிர்காலம் உணர்த்தல் இங்குக் கருதத் தக்கது.

†தொல்காப்பியம், சொல். 238.

அவ்விடனறிதல் என்றதனால் 'அம்பலூரு மவனொடு மொழிமே' என்புழி, மொழியும் என்பது மொழிம் என்றாயிற்று. மெய்யொழிந்து கெடுதலும் உடைத்து. அது 'சாரனொடஎன் தோழியும் கலுழ்மே' என்புழிக் கலுழும் என்பது கலுழ்ம் என்றாயிற்று

என்று எழுதிய விளக்கத்தால், செய்யும் என்பது முற்றாக வரினும் எச்சமாக வரினும், உகரம் கெடுதல் உண்டு என்னும் உண்மை தெளிவாகின்றது.

செய்யுவேன்—செய்வேன்
கொள்ளுவார்—கொள்வார
உண்ணுபார்—உண்பார்

என்பவற்றில் உகரம் ஏறிய மெய்யுடன் (ய் + உ, ண் + உ) கெட்டது என்று கொள்ளவேண்டும். சங்கப் பாட்டுக்களில் மொழிமே* (மொழியுமே), புரைமே† (புரையுமே) என்னும் முற்றுச்சொற்களில் இவ்வாறு மாறிய வடிவங்கள் உள்ளன. ஆதலின், பவணந்தியார்,

செய்யுமென் னெச்ச ஈற்றுயிர்மெய் சேறலும்
செய்யுளுள் உம்உந்து ஆகலும் முப்பேறல்
உயிரும் உயிர்மெய்யும் ஏகலும் உளவே‡

என்று எசசம் முற்று இரண்டிற்கும் தனித்தனியே எடுத்துக் கூறினார். ஆதலின்,

செய்யுமேன்—செய்மேன்
உண்ணுமேன்—உண்மேன்

என்பவற்றில் உகரம் ஏறிய மெய்யுடன் (ய்+உ, ண்+உ) கெட்டது எனக் கொள்ளல்வேண்டும். அடுத்த நிலையில்,

---

*குறுந்தொகை. 51. †கலித்தொகை, 54. 20.
‡நன்னூல், 341.

செய்மேன்—செய்வேன்
உண்மேன்—உண்பேன்

எனத் திரிந்த திரிபு ஒலிநூலார்க்கு உடன்பாடு ஆகும்.

மாமன் (தமிழ்) — மாவு (குடகு)
மாமி (தமிழ்) — மாவி (குடகு)
நாம் (தமிழ்) — நாவு (கன்னடம்)

என்பவற்றில் மகரம் வகரமாகத் திரியும் திரிபு காணலாம். மகரமும் வகரமும் இதழ் பற்றிப் பிறக்கும் மெய்கள் (labials) ஆதலின் ஒன்று மற்றொன்றாதல் இயல்பே. பகரமும் இதழ் பற்றிப் பிறப்பதே. ஆதலின், மகரமும் பகரமாகிறது ; வகரமும் பகரமாகிறது (வங்காளம்-பங்காளம், கவி-கபி).

ஆகவே, செய்வான் உண்பான் என்னும் சொற்களின் இன்றைய வடிவத்தை மட்டும் ஆராய்வோர்க்கு வ் ப் இரண்டும் எதிர்கால இடைநிலைகள் எனத் தோன்றும். ஆனால், இச் சொற்களின் பிறப்பை ஆராய்வோர்க்கு, அவை இரண்டும் எதிர்காலம் உணர்த்தும் உம் என்னும் இடைச்சொல்லின் திரிபே என்பது விளங்கும்.

**கொண்மார்**

செய்யும் என்பதனோடு நெருங்கிய உறவு உடைய பல சொற்கள் உள்ளன. அவை பலவகையாய்த் திரிந்து உறவு இல்லாதனபோல் தோன்றுகின்றன. அவற்றுள் ஒன்று செய்ம்மார் என்னும் வினைச்சொல்.

செய்ம்மார் என்பது பால்காட்டும் விகுதி உடையது. அது வினையொடு முடிவது என்பதே தொல்காப்பியனார் இதைப் பற்றிச் சிறப்பாக எடுத்துக் கூறுவது.

மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை
காலக் கிளவியொடு முடியும் என்ப.*

வழக்கில் வினையொடு முடியும் இடங்கள் இருத்தலை நோக்கி,† அது இந்த வினைமுற்றின் சிறப்பியல்பு என்று கூறமுடியாது. வினைமுற்று வினையெச்சமாகவும் வழங்கும் இயல்பினதாகிய தமிழில், வினையைக் கொண்டு முடிவது என்று இதனை வேறுபடுத்திக் காட்ட முடியாது.

வினைமுற்றே எச்சமாக வழங்கிய நிலையில் தொடக்கத்தில் இருந்து, பிறகு, வினைமுற்றாக வேறொரு சொல் பயன்பட்டபின், இது எச்சமாகமட்டும் வழங்கி வினைகொண்டு முடியும் மரபு ஏற்பட்டிருக்கக் கூடும்.

செய்வான் அவன்
செய்வான் வந்தான்

என்பவற்றில், முன்னது, வினைமுற்று; அவன் என்னும் பெயர் கொண்டது. பின்னது, முற்றெச்சம்; வினைமுற்றைக் கொண்டு முடிந்தது. நாளடைவில், செய்வான் என்னும் வினைமுற்று வழக்கிறந்து வேறொரு சொல் தோன்றக் கூடுமாயின், முற்றெச்சமாகிய வழக்குமட்டுமே நிற்கும். அப்போது இது வினைமுற்று அன்று எனவும், முற்று எச்சமாய்த் திரிந்தது அன்று எனவும் கூறுதல் பொருந்துமோ ? அதன் வரலாற்றை ஆராய்ந்து உண்மையை உடன்படுதலே பொருந்தும். அதுபோலவே, கொண்மார் என்னும் சொல் இன்று வினைகொண்டு முடிவதை மட்டும் கருத்தில் கொண்டு, அதன் வரலாற்றைப் புறக்கணித்துவிட்டு இது ஒரு தனிவகையான சொல் என்று கூறுவதில் பயனில்லை.

---

*தொல். சொல். 207.

†கொண்மார் நிறுத்தார்—கலித்தொகை. 65-24.
பெய்ம்மார்...நின்றுகொய—குறுந்தொகை, 208.

மாரைக் கிளவி வினையோடல்லது பெயரொடு முடியாமை யின், எச்சமாய்த் திரிந்து வினைகொண்ட தெனப்படாமை அறிக

என்று சேனாவரையர் தருக்க முறைப்படி கூறும் முடிவு பொருந்தாது. சொல்லின் வரலாற்றைப் புறக்கணித்த முடிபாகும் இது. அன்றியும், மனிதனுடைய மொழி முற்றி லும் காரண காரியப் பொருத்தம் உடையதாய்த் தருக்க முறைக்குக் கட்டுப்பட்டே நடக்கும் என்பது இல்லை. தருக்க முறைப்படியே முழுதும் அமைந்த மொழி எங்குமே இல்லை என்கிறார் அறிஞர் யெஸ்பர்ஸன்.*

எள்ளுமார் வந்தார்
கொண்மார் வந்தார்

என்பன சேனாவரையர் காட்டும் எடுத்துக்காட்டுக்கள். எள்ளுமார் கொண்மார் என்பவை இங்கு வினைமுற்றுக்கள் அல்ல ; முற்றின் திரிபுகள். எள்ளுவார், கொள்ளுவார் என் னும் வினைமுற்று வடிவங்கள் இருத்தலால், எள்ளுமார் கொண்மார் என்னும் வடிவங்கள் வழக்கு இழந்தன.

எள்ளுமார், கொண்மார் (கொள்ளுமார்) என்னும் பழைய வடிவங்களி லிருந்தே எள்ளுவார் கொள்ளுவார் (கொள்வார்) என்னும் வடிவங்கள் அமைந்தன. பின்னர்த்

---

*No language is logical in every respect, and we must not expect usage to be guided always by strictly logical principles—Otto Jespersen, Growth and Structure of the English Language, p. 12.

There have been often attempts to find a sort of logical framework behind the rules of grammar, but language is too rich and not sufficiently rectilinear to lend itself to this presentiment. It overflows the bounds of logic on everyside.—M. Breal, Semantics, p. 220.

தோன்றிய சொல்வடிவங்கள் செல்வாக்குப் பெற்றால், முன்னைய வடிவங்கள் வழக்கிறந்து மறைதல் மொழிகளின் இயற்கை. ‘ சிதல் ’ என்பதி லிருந்து ‘ செல் ’ பிறந்தது ; ஆயின் ‘ செல் ’ என்பது இன்று வழங்க, சிதல் வழக்கற்று மறைந்தது. ‘ நால்கு ’ என்ற பழைய வடிவம் மறைந்து, ‘ நான்கு ’ என்ற திரிபு வாழ்கிறது. ‘ கால்பு ’ என்ற உண்மை வடிவம் மறைய, ‘ காம்பு ’ என்ற திரிபு வழக்கில் உள்ளது. இவை போலவே, எள்ளுமார் கொள்ளுமார் (கொண்மார்) என்ற பழைய வினைமுற்றுக்கள் மறைய, எள்ளுவார் கொள்ளுவார் (கொள்வார்) என்ற வினைமுற்று வடிவங்கள் வழக்கில் உள்ளன எனக் கொள்ளல் வேண்டும்.

எள்ளுமார் கொண்மார் முதலியவற்றைப் பல்லோர் படர்க்கை உணர்த்துவன என்று தொல்காப்பியனாரே கூறுகின்றார் ; உரையாசிரியர்களும் உடன்படுகின்றனர். பல்லோர் படர்க்கை (படர்க்கைப் பலர்பால்) உணர்த்தும் விகுதி அர் அல்லது ஆர் என இருத்தல் வேண்டும். அவர், தமர், சிலர், பலர், சான்றார், கற்றார் முதலியவற்றில் உள்ள பலர் பால் விகுதியே இங்கு'ம் இருத்தல் வேண்டும். எள்ளுமார் கொண்மார் முதலியவற்றில் ஆர் விகுதி தெளிவாக உள்ளது. அதைப் பிரித்துக் கூறாமல், தொல்காப்பியனார். மாரைக் கிளவி என (மார்விகுதி எனப்) பிரித்துக் கூறுதல் எவ்வாறு பொருந்தும்? அதில் உள்ள ‘ம்’ (அல்லது உம்)காலம் உணர்த்துவது என உணர்ந்து, உம்+ஆர் என இடைநிலையையும் விகுதியையும் பிரித்துக் கூறாமல் இரண்டையும் சேர்த்து ‘ மார் ’ விகுதி என்பதும், அதற்குச் சேனாவரையர் அரண் செய்வதும் பொருந்தவில்லை. ப் வ் என்னும் எதிர்கால இடைநிலைகளைப் பிரிக்காமல், பான் வான் பாள் வாள் பார்

வார் முதலியனவாக எடுத்துரைக்கும் வீரசோழிய முறை போன்றதாகவே உள்ளது இது.

செய்யும் என்ற எதிர்காலச் சொல்லுடன் பலர்பால் விகுதி சேர்ந்ததே இது எனக் கொள்வது, சொல்வரலாற்றிற்குப் பொருத்தமாகவும் நேர்மையாகவும் உள்ளது.

எள் + உம் + ஆர்—எள்ளுமார்
கொள் + உம் + ஆர்—கொள்ளுமார்
கொள் + ம் + ஆர்—கொள்மார்-கொண்மார்

எனக் கொள்ளல் நேரிது. உம் என்பதில் உகரம் கெட்டு மகரம் மட்டும் நிற்றல் உண்டு என்பதை மேலே விரிவாகக் கண்டோம்.

உடன்பாட்டு வினைமுற்றாக எள்ளுமார் கொண்மார் முதலியவை வழக்கிறந்த பிறகும், படன்மார்[1] காணன்மார்[2] என எதிர்மறை வினைமுற்றுக்கள் உள்ளன. இவற்றைச் சேனாவரையரே எடுத்துக்காட்டியுள்ளார்.

பாடு + அல் + ம் + ஆர்—பாடன்மார்
காண் + அல் + ம் + ஆர்—காணன்மார்

என்று அமைந்த இந்த எதிர்மறை வினைமுற்றுக்களில் மட்டும் ஆர் விகுதியே கொள்கிறார்; இவற்றைப் படுவார் காண்பார் என்பவற்றின் எதிர்மறை என்றும் கொள்கிறார்; மகரம் ஒருமொழிப் புணர்ச்சியால் பெற்றது என்கிறார்.[3] இந்த முறையிலேயே,

---

1. புறநானூறு, 375. 2. நற்றிணை, 64.

3. பாடன்மார் எமரே எனவும் காணன்மார் எமரே எனவும் மாரீற்றுச் சொல் பெயர் கொண்டு வந்தனவா லெனின், அவை பாடுவார் காண்பார் என்னும் ஆரீற்று முற்றுச் சொல்லின் எதிர் மறையாய் ஒருமொழிப் புணர்ச்சியான் மகரம் பெற்று நின்றன. —தொல்காப்பியம், சொல். 207. சேனாவரையம்.

எள்+உம்+ஆர்—எள்ளுமார்
கொள்+ம்+ஆர்—கொண்மார்

எனக் கொண்டு, ஆர் விகுதி என்றும், மகரம் ஒருமொழிப் புணர்ச்சியால் பெற்றது என்றும் கூற முன்வரவில்லை. இவற்றிற்கு மட்டும் மார் விகுதி என்று கொள்வது, தமக்கு வேண்டும் ஒன்றனுக்கு வேண்டியவாறு காரணம் கூறும் நெறியாகவே உள்ளது.

கொண்மார் முதலியவற்றில் மார் விகுதி எனக் கொள் வதாயின்,

அள்ளிலைத் தாளி கொய்யு மோனே
இல்வழங்கு மடமயில் பிணிக்கும்
சொல்வலை வேட்டுவன் ஆயினன் முன்னே*

என்னும் புறப்பாட்டில், கொய்யுமோன் ஆயினன் என மோன் ஈற்றுச் சொல் (அல்லது மான் ஈற்றுச் சொல்) வினை கொண்டு முடிதலும் கூறியிருக்கவேண்டும். இங்குக் கொய்யு மோன் என்பது கொய்வோன் என்பதன் பழைய வடிவம் எனலாம்.

கொய்+உம்+ஆன்—கொய்யுமான்
கொய்+வ்+ஆன்—கொய்வான்

இவற்றின் ஆன் விகுதியில் ஆகாரம் ஓகாரமாகத் திரியும் போது,† சான்றார் சான்றோர் ஆதல் போல்,

கொய்+உம்+ஓன்—கொய்யுமோான்

என ஆகும். அது பற்றி அதைத் தனிவகையான சொல் எனக் கொள்ளல் பொருந்தாது.

*புறநானூறு, 225.

†ஆஓ ஆகும் பெயருமா ருளவே
ஆயிடன் அறிதல் செய்யு ளுள்ளே

—தொல்காப்பியம், சொல். 195.

**என்மனார்**

தொல்காப்பியனார் காலத்தில் எள்ளுமார் கொண்மார் என்னும் முற்றுக்கள் வினைகொண்டு முடியும் வழக்கிறந்து விட்டன என்று கூறும்போது மற்றொன்றும் கருதல் வேண்டும். ஆர் விகுதி பெற்ற சொற்கள் வினைகொண்டு முடியாமற் போயினும், அர் விகுதி பெற்ற சொற்கள் வினைகொண்டுமுடிதல் அவர் காலத்தில் வழக்கில் இருந்து வந்தது. ஆர் விகுதியும் அர் விகுதியும் மாறி மாறி வழங்குதல் தமிழ் வினைகளில் இயல்பாக உள்ளது. ஒரே வினைமுற்று அன் சாரியை பெற்றபோது விகுதி அர் எனக் குறுகலும் சாரியை இல்லாதபோது விகுதி ஆர் என நீளுதலும் எங்கும் காணலாம்.

உண் + ட் + ஆர்—உண்டார்
உண் + ட் + அன் + அர்—உண்டனர்
வந்தார், வந்தனர்
சென்றான், சென்றனன்
பாடுகிறாள், பாடுகின்றனள்

இவ்வாறே உம் அல்லதும் என்பதைக் கால இடைநிலையாகப் பெற்ற வினைமுற்றின் விகுதி சாரியை பெறாமல் ஆர் என நீண்டும், அன் சாரியை பெற்று அர் எனக் குறுகியும் அமைவதைப் பின்வரும் எடுத்துக்காட்டில் காணலாம்.

செய் + ம் + ஆர்—செய்ம்மார்
செய் + ம் + அன் + ஆர்—செய்ம்மனார்.

இதுபோலவே அமைந்த சொல் 'என்மனார்' என்பது. தொல்காப்பியனார் இச்சொல்லைப் பல இடங்களில் வழங்கியுள்ளார். எழுத்ததிகாரத்தில் மட்டும் இருபது முறை இச்

சொல்லை வழங்கியுள்ளார்.* இவ்வாறு தொல்காப்பியத்தில் பயின்று வழங்கிய ஒரு சொல்லை வரலாற்று முறைகொண்டு ஆராயாமல், தருக்கமும் வாய்பாடும்மட்டுமே கொண்டு ஆராய்ந்த காரணத்தால், உரையாசிரியர்கள் பலரும் இச் சொல்லிற்குப் பல்வேறு வகையாக விளக்கம் கூறியுள்ளனர்.

இனி, என்மனார் என்பது, என்ப என்னும் முற்றுச் சொல்லைக் குறைக்கும் வழிக் குறைத்தல் என்பதனாற் பகரம் குறைத்து விரிக்கும் வழி விரித்தல் என்பதனால் மன்னும் ஆரும் என்பன இரண்டிடைச் சொற் பெய்து விரித்தான்

என்கிறார் இளம்பூரணர். அவர் கருத்துப்படி, என்ப என்பதிலிருந்து பிறந்த சொல் என்மனார் என்பது. என்ப என்பதில் முதலில் பகரம் கெட்டதாம்; பிறகு, மன், ஆர் என இரண்டும் சேர்ந்தனவாம். ஏன் கெட்டது, ஏன் சேர்ந்தன, இத்தகைய வரலாறு உண்டா என்ற ஆராய்ச்சிகள் இல்லை.

என்மனார் என்பது செய்யுண்முடிவு எய்தி நின்றதோர் ஆரீற்று எதிர்கால முற்றுச்சொல்.........என்மனார் என்பது இடர்ப்பட்டுழிச் சிறுபான்மை வாராது, நூலுள்ளும் சான்றோர் செய்யுளுள்ளும் பயின்று வருதலானும், இசைநிறை என்பது மறுத்துப் பொருள் கூறுகின்றார் பின்னும் இசைநிறை என்றல் மேற்கோண்மலைவாதலாலும், அவர்க்கது கருத்தன்றென்க. மாணுக்கர்க்குணர்வு பெருகல்வேண்டி வெளிப்படக் கூறாது உய்த்துணரவைத்தல் அவர்க்கியல்பாகலாற் செய்யுண்முடிபு என்பது கூறாராயினார்.†

*தொல்காப்பியம், எழுத்து. 6, 33, 53, 131, 147, 159, 179, 223, 273, 284, 289. 332, 334, 345, 370, 414, 433, 474, 478, 483.

†தொல்காப்பியம், சொல். 1.

என்கிறார் சேனாவரையர். செய்யுண்முடிபு என்ற ஒன்றைக் கூறி விளக்கமில்லாமல் விடுகின்றார் இவர். நோய் வந்த காரணம், நோயின் தன்மை முதலியன கூறாமல், நோய்க்கு ஒரு புதிய பெயர் கூறி மருட்டும் முறை போன்றது இது. இளம்பூரணர் தந்த விளக்கத்தையும் மறுத்து, அவர்க்கும் தம் கருத்தே கருத்து என்று அமைதி கூறுகிறார்.

நச்சினார்க்கினியரோ, என் என்னும் பகுதியும் ஆர் என்னும் பால்காட்டும் விகுதியும் சேர்ந்து அமைந்த சொல் என்றும், நிகழ்காலம் காட்டுவது என்றும் கூறுகிறார்.

என்ப என்பது என்மனார் எனத் திரிந்தது என்றும், எதிர்காலத்தை உணர்த்துவதற்குரியது இங்கு நிகழ்காலத்தை உணர்த்துகிறது என்றும் கூறுகிறார் தெய்வச்சிலையார்.[1]

கல்லாடனாரும்[2] நக்கீரனாரும்[3] இளம்பூரணர் கூறியது போலவே கூறியுள்ளனர்.

இந்தச் சொல்லைப் பற்றி இவ்வளவு தடுமாற்றம் வேண்டுவதில்லை.

என் + ற் + ஆர்—என்றார்
என் + ற் + அன் + அர்—என்றனர்

என்ற சொற்கள் அன் பெற்றும் பெறாதும் இருவேறு வகையாக அமைதல் போலவே,

என் + ம் + ஆர்—என்மார்
என் + ம் + அன் + ஆர்—என்மனார்

என அன் பெற்றும் பெறாதும் இருவேறு வகையாக அமையும்

1. தொல்காப்பியனார், சொல். 1.
2. ” ”
3. இறையனார் அகப்பொருள்.

எனக்கொள்ளல் பொருந்தும். மகரம் (உம் என்பதில் உயிர்கெட்டு நின்று) எதிர்காலத்தை உணர்த்துகிறது எனக் காலஇடைநிலை காட்டலும் எளிதாகும். சேனாவரையரும் தெய்வச்சிலையாரும் எதிர்காலம் உணர்த்துவதாகக் கருதுதலும் இதற்குத் துணைபுரிகிறது. என்மார் என்ற சொல் மார் விகுதியுடையது என்றும், வினையொடு முடிவது என்றும், என்மனார் என்பது செய்யுள்முடிபு என்றும், மன் ஆர் என்பவை காரணமின்றிச் சேர்ந்தவை என்றும் பற்பல வகையாகக் கூறி இடர்ப்பட வேண்டுவதில்லை.

என்மனார் என்ற சொல்லைப் போல், என்மார் என்ற சொல் பயின்று வழங்கவில்லை எனினும் பழைய இலக்கியத்துள் வழங்கியுள்ள சொல்லே ஆகும்.[1] உண்மார்[2] முதலிய சொற்களும் சில இடங்களில் வழங்கியுள்ளன.

**செய்ம்மன**

இதுபோலவே மற்றொருசொல்லும் தெளிவின்றி விளக்கப்படுகிறது. அது செய்ம்மன என்பது. தொல்காப்பியனார் செய்ம்மன என்னும் வாய்பாட்டையும்[3] கூறுகிறார்; இசைக்குமன என்னும் சொல்லையும் தம் நூற்பாவில் ஆளுகிறார்.[4]

> இசைக்கும் என்பது செய்யும் என்னும் பெயரெச்சம். மன் என்பது இடைச்சொல்.

என்று விளக்குகிறார் இளம்பூரணர். அவர் 'இசைக்குமன்' என்றே பாடம் கொண்டார்.

---

1. பரிபாடல், 11. 115-121. 2. புறநானூறு, 46.
3. தொல்காப்பியம், சொல். 222.
4. ஷை 1.

> இசைக்கும் என்பது செய்யும் என்னும் முற்றுச்சொல். மன் என்னும் இடைச்சொல் மன என ஈறுதிரிந்து நின்றது. மன் என்று பாடம் ஓதுவாரும் உளர்.[1]

> செய்ம்மன என்பது மன ஈற்று முற்றாய் எதிர்காலம் உணர்த்தும்.[2]

என்பவை சேனாவரையர் விளக்கம்.

இசைக்கும் என்பது செய்யும் என்னும் வாய்பாட்டு முற்று என்றும், மன் என்பது அசையிடைச்சொல் என்றும் நச்சினாக்கினியர் விளக்குகிறார்.

> இசைக்குமன என்பது செய்ம்மன என்னும் தொழிற் பெயர். அது செய்யுமன என விரிந்து நின்றது.

என்கிறார் தெய்வச்சிலையார். மற்றவர்கள் முற்று என்று சொல்வதை இவர் தொழிற்பெயர் என்கிறார்.

நச்சினார்க்கினியர் போலவே, இசைக்கும் என்னும் முற்றுடன் மன என்னும் அசைநிலை யிடைச்சொல் சேர்ந்தது என்கிறார் கல்லாடனார்.

நச்சினார்க்கினியர் இசைக்குமன என்பதை முற்று என்கிறார்; செய்ம்மன என்பதை எச்சம் எனக் கருதுகிறார்.

மேலே செய்யும், கொண்மார் என்பவற்றின் வரலாற்றைக் கொண்டு ஆராய்ந்தால், இத் தடுமாற்றங்கள் எளிதில் நீங்கும்.

> செய் + ம் + அன் + அ—செய்ம்மன
> இசை + கு + ம் + அன் + அ—இசைக்குமன.

இசைக்குமன என்பதில் கு என்பது சாரியை. செய்கின்றார், என்பதில் கு + இன்று எனப் பிரித்துக் கு சாரியை எனக்

1. தொல்காப்பியம், சொல். 8.
2. ஷெ 222.

கொண்டாற்போல் இங்கும் கொள்ளவேண்டும். ம், கால இடைநிலை ; உம் என்பதில் உயிர் கெட்டு, மெய் மட்டும் நின்றது (கலுழும்—கலுழ்ம் என்பது போல). இசைத்தன, இசைக்கின்றன என்பவற்றில் அன் சாரியையும் அகர விகுதியும் அமைந்தாற்போல் இவற்றிலும் அமைந்துள்ளன. எதிர்காலம் உணர்த்தும் எனச சேனாவரையர் கூறுவதும் பொருந்துகிறது.

தெய்வச்சிலையார் ‘செய்ம்மன’ என்பதை விளக்கும் போது,

> இது இக்காலத்துச் செய்வது செய்வன செய்பவை செய்யுமவை என வழங்கும் போலும்

என்று எழுதுவது பொருந்தும். வழங்கும் போலும் என்று ஐயுற்றுக் கூறவேண்டுவ தில்லை. வழங்கும் அல்லது வழங்குகின்றன என அறுதியிட்டு உரைத்தற்கு உரிய சான்றுகள் அதன் வரலாற்றில் உள்ளன.

**பாயுந்து**

மேற்கூறியவைபோல் தெளிவாகாமல் நிற்கும் இன்னொருவகைச் சொற்கள் பழந்தமிழ்ப் பாட்டுகளில் உள்ளன. ‘செய்யுந்து’ என்னும் வாய்பாட்டுச் சொற்கள் என அவற்றைக் குறிக்கலாம். புறநானூற்றில் இவ்வாய்பாட்டுச் சொற்கள் பின்வருமாறு முடிபுகள் பெற்று அமைந்துள்ளன.

| வினை | முடிவு |
|---|---|
| பாயுந்து | மிழலை[1] |
| தூங்குந்து | ,, |
| தரூஉந்து | ,, |

1. புறநானூறு, 24.

| | |
|---|---|
| ஒலிக்குந்து | நாஞ்சில்[1] |
| பூக்குந்து | ,, |
| பறிக்குந்து | ,,[2] |
| உகளுந்து | ,, |
| குறாஉந்து | ,, |
| மறுக்குந்து | முசிறி[3] |
| கலக்குந்து | ,, |
| சோக்குந்து | ,, |
| கறக்குந்து | உறந்தை[4] |
| பறிக்குந்து | ,, |
| ஆகுந்து | ,,[5] |
| உறைக்குந்து | ,,[6] |
| வைகுந்து | ,, |
| நிலைக்குந்து | கடல்[7] |
| ஒலிக்குந்து | கழி |
| ஆருந்து | பிடவூர்[8] |
| பெயர்க்குந்து | ,, |
| இரீஇயுந்து | ,, |
| வழங்குந்து | வாட்டாறு[9] |
| பூக்குந்து | ,, |
| ஒப்புந்து | ,, |
| இரியுந்து | வாட்டாறு |
| தாங்குந்து | ,, |
| தூங்குந்து | ,,[10] |

---

1. புறநானூறு, 137.
2. ஷ 339.
3. ஷ 343.
4. ஷ 352.
5. ஷ 380.
6. புறநானூறு 384.
7. ஷ 386.
8. ஷ 395.
9. ஷ 396.
10. ஷ 400.

இவற்றுள் பறிக்குந்து, உகளுந்து முதலிய சில சொற்க ளுக்கு முடிபுகள் தெரியவில்லை. அப்பாட்டுக்கள் முற்றிலும் கிடைக்கவில்லை ; சில அடிகள் சிதைந்துள்ளமையால், முடிபுகள் இன்னவை என்று அறிய வழி இல்லை.

இவற்றுள் ஒரு பாட்டின் ஆசிரியர் யார் என்பது தெரியவில்லை.* மற்றப் பாட்டுக்கள் புலவர் எழுவரால் பாடப் பட்டவை. பாட்டுடைத் தலைவர்களும் வேறு வேறானவர். சோழவேந்தரும் பாண்டிய வேந்தரும் பாடப்பட்டுள்ளனர் ; சேரநாட்டுக் குறுநில மன்னன் ஒருவனும் பாடப்பட்டுள் ளான். ஆகவே, தமிழ் நாட்டு முப்பகுதிகளுள் பாண்டிய நாட்டுக்கோ சோழநாட்டுக்கோ சேரநாட்டுக்கோ உரிய கிளைமொழியைச (dialect) சார்ந்த சொற்கள் என்று இவற்றை ஒதுக்குவதும் பொருந்தாது. ஆகையால் இச் சொற்கள் மற்றச் சொற்களோடு ஒத்த வரலாறு உடையன வாகவே இருத்தல்வேண்டும்.

புறநானூற்றின் முதல் இருநூற்றறுபத்தாறு பாட்டுக் களுக்குப் பழைய உரை உள்ளது. மேற்குறித்த சொற்க ளுள் முதல் ஐந்து சொற்களும் அவ்வுரைப்பகுதியுள் வருதலால், அந்த உரையாசிரியரின் விளக்கங்கள் அவற்றிற்கு. மட்டும் உள்ளன.

> மேல் எண்ணப்பட்ட பெயரெச்சம் மூன்றும் (பாயுந்து, தூங்குந்து, தரூஉந்து) மிழலை என்னும் பெயர் கொண்டன ; அவை உம் உந்தாய் நின்றன.†
>
> முன் நின்ற பெயரெச்சம் மூன்றும் நாஞ்சில் என்னும் நிலப் பெயர் கொண்டன.‡

என்பவை அவருடைய விளக்கங்கள்.

---

*புறநானூறு, 339. †ஷை 24. ‡ஷை 137.

உம்உந்து ஆகும் இடனுமா ருண்டே*

என்று தொல்காப்பியனார், இவ்வாறு திரிவதற்கு விதியும் ஓதியுள்ளார். இளம்பூரணர் சேனாவரையர் நச்சினார்க்கினியர் தெய்வச்சிலையார் ஆகிய எல்லா உரையாசிரியரும் இவ் விதிக்கு எடுத்துக்காட்டாகப் புறநானூற்றுச் சொற்களையே தந்து விளக்கியுள்ளனர்.

பவணந்தி முனிவரும் இவ்வாறே விதி ஓதியுள்ளார். செய்யும் என்ற பெயரெச்சத்தின் திரிபு இவை என்கிறார். மயிலைநாதர் சங்கரநமச்சிவாயர் முதலிய உரையாசிரியர்களும் புறநானூற்றுச் சொற்களை எடுத்துக்காட்டாகத் தந்து விளக்கியுள்ளனர்.

இக் கருத்து இவ்வாறு வற்புறுத்தப்பட்டிருக்க, திரு. கே. என். சிவராஜபிள்ளை, உந்து என்பது உம் என்னும் விகுதியிலிருந்து தோன்றியது எனக் கொள்ளாமல், அந்த இந்த போன்ற சுட்டு எனக் கொள்கிறார்; நிகழ்கால வினையெச்சம் என்றும் குறிக்கிறார்.†

தொல்காப்பியனார் 'உம் உந்து ஆகும்' என உம் என்பதனோடு தொடர்புபடுத்திக் கூறியது நன்மையாயிற்று. இல்லையேல் உரையாசிரியர்கள் செய்ம்மன முதலியவற்றைப் பிழைபடப் பிரித்ததுபோல், பாயுந்து முதலியவற்றையும் பிழைபடப் பிரித்து இடர்ப்பட்டிருப்பர். செய்யும் என்னும் வாய்பாட்டுச் சொல்லே செய்யுந்து எனத் திரிந்தது என்னும் தெளிவு ஏற்பட்டது ஓரளவு நன்மையே ஆகும்.

ஆயின், உம் என்பது உந்து எனத் திரிந்தது ஏன்? காரணம் இன்றி ஒரு சொல் திரிதல் இல்லை என்பது மொழி நூலாரின் கொள்கை.

---

*தொல்காப்பியம், சொல். 292.

†உந்து என்னும் இடைச்சொற் பிரயோகம், பக். 45-51.

மற்றும் ஒன்று : தொல்காப்பியனார் இதனைப் பெய ரெச்சம் என்று கூறாமல் இருக்க, உரையாசிரியர்களும் பவணந்தியாரும் பெயரெச்சம் என்று கூறியது ஏன் ? பின் வரும் 'சான்றுகள் பெயரெச்சம் என்னும் கொள்கையை மறுக்கின்றன.

திரு. சிவராஜபிள்ளை, உந்து என்னும் ஈறு அந்த இந்த என்னும் சுட்டுக்களோடு தொடர்பு உடையது என்பதும் பொருந்தவில்லை.

பின்வருங் காரணங்களைக் கருதுவோம்.

(அ) புறநானூற்றில் 137-ஆம் பாட்டில் ஒலிக்குந்து பூக்குந்து என்னும் சொற்களுடன் படரும் என்னும் பெய ரெச்சமும் உள்ளது. செய்யும் என்ற வாய்பாட்டுப் பெய ரெச்சத்தின் திரிபு எனின், ஒலிக்கும் பூக்கும் என்பவற்றை ஒலிக்குந்து பூக்குந்து எனத் திரித்த புலவர் படரும் என் பதைப் படருந்து எனத் திரிக்காதது ஏன் ? அவ்வாறு திரித் திருந்தால் பாட்டின் ஒலிநயமும் மிக்கிருக்கும்.

கயத்திட்ட வித்து வறத்திற் சாவாது
கழைக்கரும்பின் ஒலிக்குந்து
கொண்டல் கொண்டநீர் கோடை காயினும்
கண்ணன்ன மலர்ப்பூக்குந்து
கருங்கால் வேங்கை மலரின் நாளும்
பொன்னன்ன வீசுமந்து
மணியன்னநீர் கடற்படரும்
செவ்வரைப் படப்பை நாஞ்சிற் பொருந

என்னும் அடிகளில் படரும் என்பதைப் படருந்து எனத் திரித்து ஓதி உணர்ந்தால், ஒலிநயம் மிகுகின்றதே அன்றிக் குறையவில்லை. ஆயின், புலவர் ஒருசிறைப்பெரியனார் வேண்டுமென்றே படரும் என்பதைச் செய்யும் என்னும்

வாய்பாடாகவே வைத்துள்ளார். ஒலிக்குந்து பூக்குந்து என்பவற்றி னின்றும் வேறுபட்ட பெயரெச்சம் என்று தெளிவுறுத்துவதற்காகவே அவ்வாறு வைத்துள்ளார். ஒலிக் குந்து பூக்குந்து என்பவை பெயரெச்சமாயின், ப்டரும் என்பதையும் படருந்து எனத் திரித்திருப்பார். அவற்றைப் பெயரெச்சம் எனப் புலவர் கொள்ளவில்லை என்பது இதனால் தெளிவாகின்றது.

(ஆ) புறநானூற்று 386-ஆம் பாட்டில் நிலைக்குந்து ஒலிக்குந்து என்னும் சொற்களை விட்டுத் தொலைவில் நிற்கின்றன கடல் கழி என்னும் பெயர்கள். அன்றியும், பெயர்களாகிய அவை முதலில் நிற்க, பெயரெச்சங்கள் இறுதியில் நிற்றல் தமிழ்மொழியின் இயல்புக்கு ஒவ்வாத தாகும். 'வந்த திங்கள்' என்பதை மாற்றித் 'திங்கள் மாலையில் கிழக்கே எழுந்து வந்த' என்று செய்யுளிலும் அமைக்கத் தமிழ்மொழி இடம் தராது. அவ்வாறாயின், உணர்ச்சி மிக்க புறநானூற்றுப் பாட்டுக்களில் அதற்கு இடம் ஏது?

கடலே, கால்தந்த கலன்எண்ணுவோர்
கானற் புன்னைச் சினைநிலைக் குந்து
கழியே, சிறுவெள் ளுப்பின் கொள்ளை சாற்றிப்
பெருங்கனன்னாட் டுமனொலிக்குந்து
அன்னநன் னாட்டுப் பொருநம் யாமே

என்ற பாட்டைச் சிலமுறை ஓதின், கடல் கழி என்பவை பெயரெச்சம் கொண்டுமுடியும் பெயர்களாக நிற்கவில்லை என்பது தெளிவாகும்.

நீயே, புறவின் அல்லல் அன்றியும் பிறவும்
இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை;

இவரே, புலனுழு துண்மார் புன்கண் அஞ்சித்
தமதுபகுத் துண்ணும் தண்ணிழல் வாழ்நர்*

நிலவே, நீல்நிற விசும்பிற் பல்கதிர் பரப்பிப்
பால்மலி கடலிற் பரந்துபட் டன்றே;
ஊரே, ஒலிவருஞ் சும்மையொடு மலிதொகுபு ஈண்டிக்
கலிகெழு மறுகின் விழவய ரும்மே†

என்னும் பாட்டுக்களைப்போலவே இதுவும் அமைந்துள்ளது. அப்பாட்டுக்களில் நீயே என்றும் இவரே என்றும், நிலவே என்றும் ஊரே என்றும் உள்ள சொற்கள் அந்தந்த வாக்கியத்து எழுவாயாகத் தனித்து நிற்றல் போலவே, கடலே கழியே என்பனவும் எழுவாயாக முதலில் நின்று வாக்கியத்தைத் தொடங்குகின்றன. அதனாலேயே இவற்றைத் தனிச் சொல்லாக்கித் தனியே நிறுத்தி ஓதுமாறு பாட்டை அமைத்துள்ளார். இல்லையேல், இவற்றில் உள்ள ஏகாரமும் தனிச்சொல்லாக அமைத்த அமைப்பும் பயனின்றிப் போகின்றன.

இதே பாட்டில் முற்பகுதியில் இவ்வாறு தனிச் சொல்லாக ஏகாரம் பெற்று எழுவாய்களும் பயனிலைகளுமாக அமைந்த வாக்கியங்கள் இரண்டு உள்ளன.

வயலே, நெல்லின் வேலி நீடிய கரும்பின்
பாத்திப் பன்மலர்ப் பூத்த தும்பின ;
புறவே, புல்லருந்து பல்லாயத்தான்
வில்லிருந்த வெங்குறும்பின்று ;
கடலே, கால்தந்த கலன்எண்ணுவோர்
கானற் புன்னைச் சினைநிலைக் குந்து ;
கழியே, சிறுவெள் ளுப்பின் கொள்ளை சாற்றிப்
பெருங்கனன்னாட் டுமனெலிக்குந்து

*புறநானூறு, 46. †நற்றிணை, 348.

என அந்த இரண்டு வாக்கியங்களையும் 'உந்து' என முடியும் மற்ற இரண்டு வாக்கியங்களுடன் தொடர்ந்து ஓதின், உண்மை தெளிவாகின்றது. தனிச்சொல்லாக உள்ளவை எல்லாம் எழுவாய் எனவும், ஒவ்வொரு வாக்கியத்தின் முடிவிலும் பயனிலை உள்ளது எனவும் தெளிவாக உணரலாம். உரையாசிரியர்களின் கருத்துப்படி, நிலைக் குந்து ஒலிக்குந்து ஆகிய இரண்டையும் பெயரெச்சம் எனின், ததும்பின (ததும்பியவை) குறும்பின்று (குறும்பு உடையது) என்பவற்றைப் பெயரெசசம் என்று சொல்ல இடம் இல்லாமை காணலாம்.

நிலைக்குந்து ஒலிக்குநது என்பவை பெயரெச்சமாயின்,

> கடல்...நிலைக்கின்ற
> கழி...ஒலிக்கின்ற
> அத்தகைய நல்ல நாடு

என்பதுபோல் உள்ளது. பெயரெச்சமாக அமைந்த சொற்களுக்குப் பிறகு 'அன்ன' என்று உவமச்சொல் வரவேண்டுவ தில்லை; வரின் வாக்கிய அமைப்புக்கும் இடர்ப்பாடு ஆகின்றது.

(இ) 395-ஆம் பாட்டில்,

> நீர்க்கோழிக் கூப்பெயர்க்குந்து
> ...மென்சாயலார்...புள்ளிரீஇயுந்து
> ஆங்கப், பலநல்ல புலன்அணியும்...உறந்தை

எனத் தொடர்பு அமைந்துள்ளது.

> கோழி...கூவுகின்ற
> பெண்கள் ஓட்டுகின்ற
> அவ்வாறு அத்தகைய நல்ல நிலப்பகுதி

என அமைத்தால், பெயரெச்சத்திற்குப் பிறகு 'அவ்வாறு'

என்ற சொல்லும், 'அ' என்ற சுட்டும் அமைவது பொருந்தாது. அகரச்சுட்டுப் பொருந்தினும், 'ஆங்கு' என்ற சொல் ஒரு வாக்கியத்தின் இடையே பெயரெச்சத்தை அடுத்து வருதல் ஒரு சிறிதும் பொருந்தாது. சில கருத்துக் களைச் சொல்லி முடித்து, அவற்றிற்கு ஒரு முடிவுரை கொடுத்துப் புதிய தொடர் தொடங்கும் இடத்திலேயே 'ஆங்கு' போன்ற சொற்கள் அமைதல் தமிழ்மரபு. பெயர்க்குந்து முதலியவற்றைப் பெயரெச்சம் என்னுமல், வினைமுற்றுத் திரிந்த வினையாலணையும்பெயர்கள் எனக் கொள்ளின், ஒருவகை இடர்ப்பாடும் இன்றிப் பாட்டு ஆற்றொழுக்காய் இனிது அமைந்து நேரே பொருள் பயக்கின்றன.

(அது) கோழிகள் கூவுவது
பெண்கள் ஓட்டுவது
அவ்வாறு அந்தப் பல நல்ல நிலப்பகுதிகள் கொண்ட உறந்தை

எனின் சிறுதடையும் இல்லாமல் எவ்வாறு அமையுமோ அவ்வாறு அமைந்துள்ளது பாட்டு. ஒருமுறை இருமுறை படித்தாலேயே அந்த அமைப்புப் புலனாகும்.

மேற்குறித்த 386-ஆம் பாட்டில் வரும் 'அன்ன' என்ற உவமச்சொல்லும் இவ்வாறு கொள்வதாயின் பொருத்தமாக உள்ளது.

(ஈ) பெயரெச்சங்கள் திணைபால்இடம் காட்டாமலிருத்தல் தமிழ்முறை. பாயுந்து முதலிய சொற்களில் 'து' விகுதி எனக் கொண்டால், அது அஃறிணை ஒன்றன்பாலை உணர்த்துவதாகும். அப்போது அது பெயரெச்சம் என்று கூறல் இயலாது. வினையாலணையும்பெயர் எனக் கொள்ளின், திணை பால் இடம் காட்டும் விகுதி இன்றியமையாதது; ஆதலின் இவ் விகுதி பொருந்துகிறது. ஆயின் இதனோடு

இயையும் சொற்களும் அஃறிணை ஒன்றன்பாலாக இருத்தல் வேண்டுமே எனின், இத்தனைப் பாட்டுக்களிலும் இயையும் சொற்கள் எல்லாம் அஃறிணை ஒன்றன்பாலாகவே உள்ளன. மிழலை, நாஞ்சில், முசிறி, உறந்தை, கடல், கழி, பிடவூர், வாட்டாறு என்னும் சொற்கள் அஃறிணை ஒன்றன்பால் ஆவன. ஆதலின் பாய்வது மிழலை, ஒலிப்பது நாஞ்சில், மடிப்பது முசிறி, பறிப்பது உறந்தை, நிலைப்பது கடல், ஒலிப்பது கழி, பெயர்ப்பது பிடவூர், வழங்குவது வாட்டாறு என எல்லாம் அஃறிணை ஒன்றன்பாலாக, வினையாலணையும் பெயரும் அதனோடு இயையும் பெயருமாக அமைகின்றன.

(உ) செய்யும் என்னும் வாய்பாட்டுச் சொல், பால் காட்டும் விகுதிகளைப் பெற்றுப் பலவாறு திரிந்து வழங்குதலை மேலே கண்டோம். செய்ம்மன என்ற சொல் அஃறிணைப் பலவின்பால் வினைமுற்றாகிய செய்வன போன்றது எனவும் கண்டோம். செய்யுந்து என்பது அஃறிணை ஒன்றன்பாற் சொல்லாகிய 'செய்வது' போன்றது என்பதைக் கீழே காணலாம்.

செய்+ம்+அ+து > செய்+வ்+அ+து
> செய்வது
செய்+உம்+து > செய்யுந்து

முன்னதில் அகரம் சாரியையாக உள்ளது. பின்னதில் கால இடைச்சொல்லாகிய உம் என்பதில் உகர உயிர் கெடாமல் நிற்றலால், சாரியையாக வேறு உயிர் வேண்டாததாயிற்று.

பாய்+ம்+அ+து > பாய்+வ்+அ+து
> பாய்வது
பாய்+உம்+து > பாயுந்து

மற்றச் சொற்களையும் இவ்வாறே பிரித்துக் காணலாம்.

செய்கின்றார் முதலியவற்றில் உள்ளதுபோல், ஒலிக்குந்து, நிலைக்குந்து முதலியவற்றிலும் குகரம் சாரியையாக உள்ளது.

ஒலி + கு + உம் + து—ஒலிக்குந்து
நிலை + கு + உம் + து—நிலைக்குந்து

என்று மற்றச் சொற்களையும் பிரித்து உணரலாம்.

சொல்லின் வரலாறு அறிந்து இவ்வாறு பிரிக்கத் தவறிய காரணத்தால், வினையாலணையும் பெயர்களாக உள்ள இவற்றைச் சேனாவரையர் முதலிய உரையாசிரியர்களும் நன்னூலாரும் பெயரெச்சம் என்று கருதி மயங்கினர். காரணமில்லாமல் உம் ஈறு உந்து ஆகத் திரிந்தது என்றனர். திரு. சிவராஜபிள்ளையும் உந்து என்பதில் கால இடைச் சொல்லும் ஒன்றன்பால் விகுதியும் காணாமல், அந்த இந்த என்னும் சுட்டுக்களோடு உறவுதேட முனைந்தார்.

செய்யும், செய்கு, கொண்மார் முதல் பாயுந்து வரையில் உள்ள இச் சொற்கள் எல்லாவற்றிலும் எதிர்காலம் காட்டும் உம் அல்லது அதன் திரிபுகள் அமைந்திருத்தலைக் காணலாம். இவ்வாறு வரலாற்று முறையில் ஆராய்ந்தால், உண்மையான உறுப்புக்களைக் கண்டறிந்து பிழையின்றிப் பிரித்திடல் எளிதாதலும் காணலாம்.

**சென்றீ நின்மே**

புலியைப் பார்த்துப் பூனை சூடு போட்டுக்கொண்டது என்பார்கள். காலம் உணர்த்தாமல் வேறு பொருள் பற்றி வரும் உம் என்னும் விகுதியிலும் உயிர்கெட்டு மகரம்மட்டும் நிற்கும் இடங்கள் உண்டு. அது, காலம் உணர்த்தும் இடைச்சொல்லாகிய உம் என்பதில் நேரும் மாறுதலை ஒட்டி ஒப்புமையாக்கம் (analogy) என்னும் விதியால் ஏற்பட்டதாகக் கொள்ளலாம்.

சென்றீ,[1] நின்மே[2] எனப் பழைய சொற்கள் சில சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. இவற்றின் இறுதியில் உள்ள ற் ம் என்னும் மெய்யெழுத்துக்களும், ஈ ஏ என்னும் உயிரெழுத்துக்களும் என்ன என்ன பொருள் உணர்த்து கின்றன, எவ்வாறு அமைந்தன என்பவை தெளிவாகவில்லை. தொல்காப்பியனாரும் இவற்றைப் பொதுவாக இன்ன உயிர் என்று கூறி, அவ்வவற்றிற்குரிய மெய் என்று பொதுப்பட ஓதியுள்ளாரே அல்லாமல், விளக்கிக் கூறவில்லை.

> முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
> அந்நிலை மரபின் மெய்ஊர்ந்து வருமே.[3]

நன்னூலார்க்கும் இதைவிடத் தெளிவு ஏற்படாத காரணத் தால், இதையே இதே நூற்பாவால் கூறுகிறார்.[4] தொல்காப் பியனார் இதை வினையியலுள் கூறாமல் எச்சவியலுள் கூறு கிறார்; நன்னூலார் வினையியலுள்ளே கூறுகிறார்; இதுதான் வேறுபாடு.

இவற்றிற்கு உரையாசிரியர்களேனும் விளக்கம் தரு கின்றார்களா எனக் காண்போம்.

> முன்னிலைக்கண் ஆன ஈகார ஏகார இடைச்சொற்கள் முன்னிலைக்குப் பொருந்திய மெய்யை ஊர்ந்து வரும்...இவை இரண்டும் தத்தம் குறிப்பிற் பொருள் செய்யும் இடைச்சொல் என்பது; ஈண்டு எப்பொருளை விளக்கிநின்றனவோ எனின் புறத்துறவுநீர்மைப் பொருள்பட வந்த என்றவாறு.

என்பது இளம்பூரணர் விளக்கம்.[5]

---

1. சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே—அகநானூறு, 46.
2. அட்டில் ஓலை தொட்டனை நின்மே—நற்றிணை, 300.
3. தொல்காப்பியம், சொல். 451.
4. நன்னூல், 336.
5. தொல்காப்பியம், சொல். இளம்பூரணம், 445.

முன்னிலை வினைச்சொல்முன் வரும் ஈகாரமும் ஏகாரமும் அம் முன்னிலைச் சொற்கு ஏற்ற மெய் ஊர்ந்துவரும்... இவ் வெழுத்துப்பேறு புணர்ச்சி விகாரமாதலின் ஈண்டுக் கூறற்பாற்று அன்று எனின் :—அற்றன்று : இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி அப் பெயரோடு ஒற்றுமைப்பட்டு நின்றாற்போல முன்னிலை முன்னர் ஈயும் ஏயும் முன்னிலைச் சொல்லோடு ஒற்றுமைப்பட்டு நிற்றலான், நிலைமொழி வருமொழி செய்து புணர்க்கப்படாமையான், அம்மெய் புணர்ச்சி விகாரம் எனப்படா என்க

என்கிறார் சேனாவரையர்.[1]

இவற்றுள் ஈகாரம் புக்கீ உண்டீ உரைத்தீ சென்றீ எனக் கடதறவை ஊர்ந்து வரும் என்பது தோன்ற அந்நிலை மரபின் மெய் என்றார். ஏகாரம் மகரம் ஊர்ந்து வரும் இவை நிலைமொழி வருமொழி செய்து புணர்க்கப்படாமையின் புணர்ச்சி விகாரம் இன்றி முன்னிலைச் சொல் விகாரமாயிற்று.

என்று நச்சினார்க்கினியர் விளக்குகின்றார்.

முன்னிலை மரபின் மெய்யாவன உண் தின் என்னும் சொற்கண் ஈற்றெழுத்தோடும் பால்காட்டும் எழுத்தினைப் புணர்க்க இடையே வரும் மெய்யெழுத்து...இ ஈ ஆய் அன்றி இவையும் சிறுபான்மை வருமெனக் கொள்க.

என்கிறார் தெய்வச்சிலையார்.

‘ ஒருமை முன்னிலை மொழியிடத்து ’ என்கிறார் மயிலைநாதர்.[2]

இவை விகுதியுருபு அல்ல என்பதூஉம், ஏவற்கண் வரும் எழுத்துப்பேறு என்பதூஉம், அந்நிலை மரபின் மெய் என

1. தொல்காப்பியம், சேனாவரையம், 451.
2. நன்னூல், 336.

விதந்தமையின் அஃது அம்மொழியிறுதி மெய் அன்று என்பதுதூஉம் பெற்றாம்...

இவ் வெழுத்துப்பேறு, நடவாமடிசீ என்னும் சூத்திரத்தின் பிற் கூறாது ஈண்டுக் கூறினார். இவ்வாறு வரும் ஏவல்கள் பகுதிமாத்திரை யன்றி நிற்றலின் இவை முன்னிலை யொருமை விகுதி யுருபீற்று வினைமுற்றோ ஏவன்முற்றோ என்று ஐயுறுவார்க்கு ஐயமறுத்தற்கு. இவற்றிற்கு விகுதி யுருபின் பொருள் இன்மையின் முன்னிலை யசையாமென்க

என்கிறார் சங்கரநமச்சிவாயர்.[1]

தொல்காப்பியனார் முன்னிலைச் சொல் என்பதை மட்டும் உணர்த்தினார். ஒருமையா பன்மையா என்பதை உணர்த்தவில்லை. மயிலைநாதரும் சங்கரநமச்சிவாயரும் ஒருமை என்பதை வற்புறுத்துகின்றனர். அவர்களுள்ளும் சங்கரநமச்சிவாயர் இவை ஏவல்வினையா முற்றுவினையா என்ற ஐயப்பாடு தோன்றாவண்ணம் 'முன்னிலை ஏவல்முற்று' எனத் தெளிவாக்குகிறார். இளம்பூரணர் உரையிலும் சேனாவரையர் உரையிலும் இந்தக் குறிப்புக்கள் இல்லை.

தொல்காப்பியனார் முன்னிலை ஒருமை எனத் தெளிவாக ஓதாதது ஏன் ? ஏவல் என்றும் குறிக்காதது ஏன் ?

சேனாவரையர் இந்த வினைச்சொற்கள் முன்னிலை என்கிறார். ஆயின், இளம்பூரணர் ஈ ஏ என்னும் இடைச்சொற்கள் முன்னிலைக்கண் ஆனவை என்கிறார். இந்த வேறுபாடும் கருதத்தக்கது.

தொல்காப்பியனார் முன்னிலை ஒருமைக்கு ஓதிய விகுதிகள் இ ஐ ஆய்.

---

1. நன்னூல், 336.

முன்னிலைக் கிளவி
இ ஐ ஆய்என வரூஉம் மூன்றும்
ஒப்பத் தோன்றும் ஒருவர்க்கும் ஒன்றற்கும்.[1]

இவ்வாறே பன்மைக்கு இர் ஈர் மின் என மூன்று விகுதிகளை ஓதுகிறார்.

இர்ஈர் மின்என வரூஉம் மூன்றும்
பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்
சொல்லோ ரனைய என்மனார் புலவர்.[2]

இவற்றுள் சென்றீ, உண்டீ, உரைத்தீ என்பவற்றில் உள்ள ஈகாரம் முன்னிலை ஒருமை வினைமுற்றின் விகுதி எனக் கூறலாம். இகரம் ஒருமை விகுதியாக ஓதப்பட்டுள்ளமையால் ஈகாரமும் அதுவே ஆதல் பொருந்தும். வந்தனன் என்பதில் உள்ள அன் விகுதியே வந்தான் என்பதில் ஆன் விகுதி ஆகிறது. அவ்வாறே உரைத்தி உண்டி தின்றி[3] என்பவற்றில் உள்ள இகரமே உரைத்தீ உண்டீ தின்றீ என்பவற்றில் ஈகாரம் ஆகிறது. அன் ஆன் அள் ஆள்[4] அர் ஆர்[5] எனக் குறில்வடிவும் நெடில்வடிவுமாகப் படர்க்கைக்குத் தனித் தனியே எடுத்தோதும் தொல்காப்பியனார், இர் ஈர்[6] என முன்னிலைப் பன்மைக்கும் குறில்வடிவும் நெடில் வடிவும் தனித்தனியே ஓதுகின்றார். அவ்வாறே இ ஈ ஐ ஆய் என நான்கும் முன்னிலை ஒருமைக்கு ஓதியிருப்பின், ஈகாரத்தைப் பற்றிய தெளிவு ஏற்பட்டிருக்கும். ஈகார விகுதி பயின்று

1. தொல்காப்பியம், சொல். 223
2. ௸ 224
3. ௸
4. ௸ 205
5. ௸ 206
6. ௸ 224

வாராக் காரணத்தால் விட்டுவிடவே, இத் தடுமாற்றம் உரையாசிரியர்களுக்கு ஏற்படலாயிற்று.

இகரம் தடற ஊர்ந்து எதிர்காலம் பற்றிவரும் என்று சேனாவரையர் இகரவிகுதிக்கு எழுதியுள்ளார். ஈகாரத்திற்கும் அதுவே பொருந்துகிறது. தின்று என்பது அவர் அங்குக் காட்டும் சொல். சென்றீ என்பது இங்குக் காட்டும் சொல். பொருளிலோ காலத்திலோ இரண்டிற்கும் வேறுபாடு இல்லாதிருக்க, உரைத்தி உண்டி தின்றி என்பவை வேறுவகை என்றும், புக்கீ உண்டீ உரைத்தீ சென்றீ என்பது வேறுவகை என்றும் அவர் உரைக்கத் துணிந்தது வியப்பாக உள்ளது. முன்னவை, நிலைமொழி வருமொழி செய்து புணர்க்கப்படுவனவாம். பின்னவை, அவ்வாறு புணர்க்கப்படாதனவாம்! எழுத்துப் பேறும்!

இளம்பூரணர் 'முன்னிலைக்கண் ஆன ஈகார இடைச்சொல்' என்றதும், தெய்வச்சிலையார் 'இ ஐ ஆய் அன்றி இவையும் சிறுபான்மை வரும்' என்றதும் பொருந்துவனவாக உள்ளன.

'முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்' என்றவற்றில் ஈகாரத்தின் வரலாறு இகரத்தின் துணையால் நன்கு விளங்குகிறது.

ஆயின் ஏகாரத்தின் வரலாறு அவ்வாறு எளிதில் விளங்குவதில்லை. அதன்பொருட்டு மேலும் சில சொற்களை ஆராய்தல் வேண்டும்.

சென்றீ, நின்மே என்பவை இரண்டும் ஒரேவகையான சொற்கள் அல்ல. இளம்பூரணர் கருதுவதுபோல் இரண்டும் குறிப்பிற் பொருள் செய்யும் சொற்களும் அல்ல; தெய்வச்சிலையார் கருதுவதுபோல் இ ஐ ஆய் என்பவற்றோடு ஒருசேர வைக்கத் தக்கது ஈகாரம் மட்டுமே; ஏகாரம்

அவ்வாறு வைக்கத்தக்கது அன்று. இரண்டும் முன்னிலை ஒருமை மொழி என்கிறார் மயிலைநாதர் ; இரண்டனையும் அவ்வாறு ஒருமை என்று கொள்வதற்கும் இல்லை. இரண்டும் ஏவற்கண் வரும் எழுத்துப்பேறு என்கிறார் சங்கர நமச்சிவாயர் ; இரண்டும் ஏவலாயின் தொல்காப்பியனார் அதனை வெளிப்படக் கிளந்திருப்பார். இகரம் ஈகாரமாக நீண்டதென மேலே கண்டமையால், அது ஏவல் அன்று என்பது தெளிவாயிற்று.

சுருங்கக்கூறின், இரண்டனையும் ஒருங்குவைப்பதற்கு முன்னிலை என்பது தவிர வேறு காரணமே இல்லை. இரண்டனையும் தனித்தனியே வைத்து எண்ணியிருப்பின்,அவற்றின் வேறுபாடு புலனாகியிருக்கும் ; வரலாறும் ஒருவாறு விளங்கியிருக்கக்கூடும்.

சென்றீ என்பது தின்றி உரைத்தி முதலியவைபோல் முன்னிலை ஒருமை வினைமுற்று.

நின்மே என்பது நில்லும், நின்மின் என்பனபோல் ஏவல்முற்று என்பதை மேலே காண்போம்.

ஏவல்வினையாகவும் ஏனைவினையாகவும் உள்ள இரண்டனையும் தனித்தனியே பிரித்துணர்த்தாமல் கூட்டிக் குழப்பியமையே, தடுமாற்றத்திற்குக் காரணமாகும். எழுத்துப்பேறு, புணர்ச்சி விகாரமன்று, ஏவல், முன்னிலை ஒருமை முதலிய தடுமாற்றங்கள் பலவும் இரண்டனையும் சேர்த்தமையாலேயே விளைந்தன.

**மின் விகுதி**

ஏவல்வினையின் விகுதியை ஏனைவினையின் விகுதியினின்றும் பிரித்துத் தனித்து உணர்த்தும் தெளிவு பெற்றவர் பவணந்தியார்.

இர்ஈர் ஈற்ற இரண்டும் இருதிணைப்
பன்மை முன்னிலை மின்அவற்று ஏவல்

எனத் தெளிவாக ஓதிய பவணந்தியாரும், முன்னிலை ஈ ஏ இரண்டனையும் பிரிக்காமல் சேர்த்து ஓதிய தொல்காப்பிய நூற்பாவையே எடுத்துரைக்கின்றார்.

மற்றுமொன்று : முன்னிலைப் பன்மை ஏவல் விகுதி யாகிய 'மின்' தொல்காப்பியத்தில் கூறப்படுகிறது ; நன்னூலிலும் கூறப்படுகிறது. ஆயின் அதற்கு அடிப்படை யாய் அமைந்து வாழ்வு நல்கிய 'உம்' என்னும் ஏவல் விகுதி இரண்டு நூலுள்ளும் கூறப்படவில்லை.

தமிழ்மொழியில் அவ்விகுதி இருத்தலை 'உண்ணும், தின்னும் எனப் பன்மைக்கண் வரும் உம் ஈறு' என எடுத்துக்காட்டியுள்ளார் நச்சினார்க்கினியர்.*

மின் அவற்று ஏவல் என்றமையான், உண்ணும் தின்னும் நீர் என உம்மீற்றவாய் வரும் பன்மை ஏவல் புதியன என் பதூஉம், அவை புதியன புகுதலும் வழுவல என்பதனான் அமையும் என்பதூஉம் பெற்றாம்

எனச் சங்கரநமச்சிவாயரும் அதனை எடுத்துக்காட்டி யுள்ளார்.†

ஆனால் ஏவற்பன்மையில் வரும் உம் விகுதியைத் தொல்காப்பியனாரும் பவணந்தியாரும் கூறாத காரணத்தா லேயே, அதைப் புதியது எனக் கூறல் ஒண்ணாது. ஐரோப்பியர் இதற்குமுன் கண்டிராத காரணத்தாலேயே இந்தியாவையும் அமெரிக்காவையும் புதிய நாடுகள் என்றது போன்ற கூற்றே இது.

*தொல்காப்பியம், சொல், நச்சினார்க்கினியம், 226.
†நன்னூல், 337.

உண்ணுமின், செல்லுமின் என்பனவே பழைய வடிவங்கள். எதிர்காலம் உணர்த்தும் உம் என்னும் இடைச் சொல்லில் உகரம் கெட்டு வழங்குதலை மேலே கண்டோம். அதுபோலவே, ஏவற்பன்மை உணர்த்தும் இந்தச் சொற்களில் உள்ள உகரமும் கெட்டு வழங்குதல் பெரும்பான்மையாக உள்ளது. கொள்ளுமார் என்பது கொண்மார் எனத் திரிந்தாற்போல், செல்லுமின் கொள்ளுமின் நில்லுமின் என்பவை சென்மின், கொண்மின், நின்மின் எனத் திரிந்தன.

ஆகவே, மார் என்பது பிறழ்பிரிப்பால் (metanalysis) அமைந்ததுபோல், மின் என்பதும் பிறழ்பிரிப்பால் அமைந்த விகுதியே ஆகும்.

உண்ணுமின், உண்மின், செல்லுமின், சென்மின் என்பவற்றில் உள்ள ஏவற்பன்மை விகுதி 'உம்' என்பதே என்னும் உண்மை, இக்காலத்தும் அழியாமல் உள்ள ஏவற்பன்மைச் சொற்களால் உணரலாம்.

நீர் செல்லும், உண்ணும், நடவும்
நீங்கள் செல்லுங்கள், உண்ணுங்கள், நடவுங்கள்

என்பவற்றில் ஏவற்பன்மை உணர்த்துவது உம் விகுதி (அல்லது அதனோடு கள் விகுதிசேர்ந்தது) என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

ஏவற்பன்மையில் வரும் இந்த உம் விகுதி, முன்னிலைப் பன்மைப் பெயராகிய நீம் என்பதனோடு உறவுடையதாகும். நீம் என்பதே பழைய முன்னிலைப்பன்மை என்பதும், அதனோடு இர் விகுதி சேர்ந்து அமைந்த நீமிர், நீவிர், நீயிர் என்பன பிற்காலத்தன என்பதும், நீம் என்பதனுடன் கள் விகுதி சேர்ந்தமைந்ததே நீம்+கள் : நீங்கள் என்பதும்

மொழி நூலார் கொள்கை.[1] சீவகசிந்தாமணியில் நீம் என்ற சொல் காணப்படுதலும்,[2] மலையாளத்திலும் கன்னடத்திலும் நீம் என்ற முன்னிலைப் பன்மை வடிவங்கள் இருத்தலும் இதற்கு அரண் செய்யும் சான்றுக ளாகும். தொல்காப்பியனார் நீயிர் என்ற சொல்லுக்கும் நும் என்ற வேற்றுமைத் திரிபுக்கும் இடையே தொடர்புபடுத்தும் நீம் என்ற வடிவை உணர்த்தாமல், நும என்பது நீயிர் என்று ஆனதாக உணர்த்த முயன்று இடர்ப்படுதலும் இங்குக் கருதத்தக்க தாகும். நீம் என்பது இர் சேர்ந்து நீயிர் என்று ஆயிற்று எனவும், நீம் என்பதே நும் எனத் திரிந்தது எனவும் அவர் உணர்த்தியிருக்கவேண்டும். அவ்வாறு செய்யாமல்,

நும் என்பதில் உகரம் கெட்டது ;
பிறகு நம் என்று நின்றவற்றின் நகர மெய்யின்மேல் ஈ சேர்ந்து நீம் என்று ஆயிற்று ;
அதன்பிறகு இகரவுயிர் இடையே சேர்ந்து நீயிம் என்று ஆயிற்று ;
பிறகு நீயிம் என்பதில் ம் கெட்டு ர் வந்தது

என்கிறார் அவர்.

அல்லதன் மருங்கிற் சொல்லுங் காலை
உக்கெட நின்ற மெய்வயின் ஈவர
இஇடை நிலைஇ ஈறுகெட ரகரம்
நிற்றல் வேண்டும் புள்ளியொடு புணர்ந்தே[3]

என்பது தொல்காப்பியம்.

1 கால்டுவெல், ஒப்பிலக்கணம். வே. வேங்கடராஜுலு ரெட்டியார், திராவிட மொழிகளின் மூவிடப் பெயர், பக்கம், 20.
2. விமலையார் இலம்பகம், 44.
3. தொல்காப்பியம், எழுத்து, 326.

நும் நுங்கள் என்பவற்றில் நகரம் கெட்டு உம் உங்கள் என்பவை இக்காலத்தில் பயின்று வழங்குகின்றன.

பால் காட்டும் விகுதிகள் மூவிடப் பெயர்களின் திரிபுகளே என்பது மொழியியற் கொள்கை. யான் யாம் என்பவை திரிந்து ஏன் ஏம் (வந்தேன் வந்தேம்) என்னும் விகுதிகள் அமைந்தன. அவைபோலவே, நீ என்பதன் திரிபாக ஈ, இ என்னும் முன்னிலை ஒருமைவிகுதிகள் (சென்றீ, உண்டி) அமைந்ததை மேலே கண்டோம். நீம் என்பதன் திரிபாக அமைந்தது இந்த உம் விகுதி.

ஆகவே, முன்னிலைப் பன்மைக்கு உரிய உம் என்னும் சொல், ஏவற்பன்மையை உணர்த்த அமைந்தது மிகப் பொருத்தமே ஆகும்.

நீர் சொல்லுமின், சொன்மின்
நீர் சொல்லும், நீங்கள் சொல்லுங்கள்

என்னும் வழக்குகளில் ஏவற்பன்மையை உம் உணர்த்துதல் காணலாம்.

எனவே,

சொல்லுமின்—சொல்+உம்+இன்
சொன்மின்—சொல்+ம்+இன்

எனப் பிரித்தல் வேண்டுமே தவிர, மின் எனப் பிரித்து அதை விகுதி எனக் கூறலாகாது என்பது தெளிவாகிறது.

இனி இவற்றின் இறுதியில் உள்ள 'இன்' என்பது என்ன எனக் காணல்வேண்டும்.

ஒரு மொழியில் வேரூன்றிவிட்ட உருபுகளும் விகுதிகளும் மற்ற இடைச்சொற்களும் என்றும் நீங்காமல் நிலையான வாழ்வு பெறுகின்றன எனலாம். ஒருகாலத்தில் மறைந்து நீங்கியதுபோல் தோன்றினும், மற்றொரு

காலத்தில் சிறிது மாறிய வடிவத்துடன் எப்படியோ இடம் பெறுதலை மொழிவரலாற்றில் காணலாம். ஆகவே, மொழிக்கு அடிப்படையான இத்தகைய இடைச்சொற்கள் நிலைத்த வாழ்வு உடையவை என்றே கூறிவிடலாம். இந்த உண்மையை உள்ளத்தில் இருத்தி ஆராய்ந்தால், சொன்மின், சொல்லுமின் என்ற சொற்கள் பேச்சு வழக்கில் இல்லாதவைபோல் தோன்றினும் இன்றும் பேச்சு வழக்கில் நிலைத்திருத்தலைக் காணலாம்.

நீ சொல்
நீ சொல்லேன் (சொல்லென்)
நீர் சொல்லும்
நீர் சொல்லுமேன் (சொல்லுமென்)
நீங்கள் சொல்லுங்கள்
நீங்கள் சொல்லுங்களேன் (சொல்லுங்களென்)

முதலிய வாங்கியங்கள் பேச்சில் வழங்குதலைக் கூர்ந்து கேட்டால், ஏவல்வினைமுற்றை அடுத்து ஏன் அல்லது என் என்ற ஓர் இடைச்சொல் ஒலித்தலைக் கேட்கலாம். இவற்றுள்,

நீர் சொல்லுமென்

என்பதில் உள்ள சொல்லுமென் என்ற சொல், சொல்லுமின் என்ற சொல்லின் வடிவே ஆகும். அல்லது, சொல்லுமென் என்பது சொல்லுமின் எனத் திரிந்தது எனலாம். எ இ இந்த இரண்டு உயிரும் ஒன்று மற்றொன்றாகத் திரிவது திராவிட மொழிகளில் பெருவழக்காக இருத்தலைப் பின்வரும் சொற்களால் உணரலாம்.

எலி (தமிழ்)—இலி (கன்னடம்)
சிதல் (தமிழ்)—செதலு (தெலுங்கு)
சில (தமிழ்)—கெலவு (கன்னடம்)

இகரம் ஈகாரம் எகரம் ஏகாரம் இவை தம்முள் இனமாம்'*
என்று இலக்கணக்காரர் கூறுவதும் இங்குக் கருதத்தக்கது. பேச்சுத் தமிழில் இலை - எலை, இணை - எணை, இரை - எரை, இழை-எழை எனத் திரிந்து வழங்கும் சொற்கள் பலவற்றைக் காணலாம். ஆதலின் என் என்னும் இடைச்சொல் இன் எனத் திரிந்ததெனக் கொள்ளலாம்.

இனி இந்த இடைச்சொல் என் அல்லது இன் என்பது தொடக்கத்தில் என்ன பொருள் உணர்த்தியிருக்கக் கூடும் என்பதையும் ஆராய்வோம். ஒவ்வோர் இடைச்சொல்லும் முதலில் பொருளுடைய பெயர்ச்சொல்லாகவோ வினைச்சொல்லாகவோ இருந்து நாளடைவில் உரிமை இழந்து மற்றச் சொற்களுக்குத் துணைபுரியும் சொற்களாக மாறுகின்றன என்பது மொழியியலார் கண்ட உண்மை.[1] அவ்வாறே என் என்னும் இடைச்சொல்லுக்கும் தொடக்கப் பொருள் ஒன்று இருந்திருக்கவேண்டும். பின் வரும் வழக்குகளை நோக்கின், தொடக்கத்தில் அது 'என்ன' என்ற வினப் பொருளையே உணர்த்தியிருக்கக் கூடும் என்று தோன்றுகிறது.[2]

---

*யாப்பருங்கல விருத்தி, 53.

1. There is a tendency in some words to lose their independence and become dependent upon some other words to which they appear to be tacked on. To this class belong prepositions and conjunctions and personal terminations. They were originally as good flexible words as nouns and pronouns but are now merely reduced to a secondary importance, in drawing out the case and other relationships in sense.—P. D. Gune, An Introduction to Comparative Philology, p. 71.

2. வெளிநாட்டு அறிஞராகிய போப் என்பவர்க்கு இது எவ்வாறோ புலனாகியிருக்கிறது. 'என்பேரில் இரங்கும் என்'

போய்ச் சொல்வாயா ?—போய்ச் சொல்
போய்ச் சொல்வீர்களா ?—போய்ச் சொல்லுங்கள்
வருவீர்களா ?—வாருங்கள்
கேட்கிறீர்களா ?—கேளுங்கள்

ஏவலாகக் கூறவேண்டியவற்றையே, வினவாகக் கூறும் இந்த வழக்கம் ஆங்கிலம் முதலிய பிறமொழிகளிலும் இருத்தல் காணலாம்.

என்ன அய்யா, கேளும்—கேளும் அய்யா
ஏ(னு)ங்கள் வாங்கள்—வாருங்கள்
என்னங்க இதைப் பாருங்கள்—இதைப் பாருங்கள்

கேட்போரின் கருத்தைக் கவர்வதற்காக வினக்களைச் சேர்த்து ஏவற்சொற்களை அமைக்கும் பேச்சு வழக்குகள் இவை. மக்களின் பேச்சுவழக்கி லிருந்து இத்தகைய உண்மைகளை ஆராய்தல் பயனுடைய தாகும்.[1]

இவை போலவே, தொடக்கத்தில் வினப்பொருள் உணர்த்திவந்த ' என் ' என்ற சொல், காலப்போக்கில் தன் பொருளும் உரிமையும் இழந்து ஏவற்பன்மை அமைப்பதற்குத் துணைசெய்யும் இடைச்சொல்லாக மாறியிருத்தல்

என்பதை 'Pray have mercy on me' என மொழிபெயர்க்கிருர். மேலும், "Here என் - pray do, is either for ஏ emphatic or from ஏன் - why not" என்று குறிக்கிருர்.—G. U. Pope, An Handbook of the Ordinary Dialect of the Tamil Language, p. 153.

1. What we must do is to retrace the road over which the language has travelled, striving to recognise the turnings, and never forgetting that language being the work of the people, we must, to understand it, put off the logician and become one with the people ourselves. —M. Breal, Semantics, p. 288.

கூடும். ஆகவே, சொல்லும் என்ற சொல்லே என் பெற்று, சொல்லுமென் எனவும் சொல்லுமின் சொன்மின் எனவும் மாறியது எனக் கருத இடம் உள்ளது.

அவ்வாறாயின், மின் விகுதி என்பது பிழைபடப் பிரித்ததன் விளைவு எனவும், உம்+இன், அல்லது, ம்+இன் என்றே பிரிக்கத் தகும் எனவும் கூறலாம்.

**மியா**

கேண்மியா, சென்மியா முதலிய சொற்களிலும், மியா என்று பிரித்தல் பிறழ்பிரிப்பாக (metanalysis ஆக)த் தோன்றுகிறது. இந்தச் சொற்கள் முன்னிலை ஒருமையில் வழங்குவனவாக எடுத்துக்காட்டுக்கள் இருந்த போதிலும், பன்மையில் வழங்கிப் பின் வழுவமைதியாக ஒருமையில் வழங்குவன ஆயின எனக் கொள்ளலாம். அவ்வாறாயின்,

| | |
|---|---|
| கேளும்+யா | செல்லும்+யா |
| கேள்ம்+யா | செல்ம்+யா |
| கேண்ம்+(இ) யா | சென்ம்+(இ) யா |
| கேண்மியா | சென்மியா |

என்று உகரம் கெட்டு, யகரத்தின்முன் இகரம் பெற்று அமைந்தனவாகக் கூறலாம். உகரம் கெடுதலை மேலே கண்டோம் (கலுழும்> கலுழ்ம், செல்லுமின்> சென்மின்.) யகரத்தின்முன் இகரம் தோன்றுதல் தமிழில் இயற்கை. அவ்வாறாயின், இச் சொற்களும் ஏவற்பன்மை என்பதும், இவற்றில் உள்ள மகரமெய் உம் என்னும் ஏவல்விகுதியி லிருந்து அமைந்தது என்பதும் தெளிவாகிறது.

ஆயின், யா என்பது யாது ? மேலே என் என்பதற்கு ஒத்த வினாவாகக் கொள்ள இடம் தருகிறது.

இதுபோலவே, நின்மே என்ற சொல்லையும் ஆராயின்,

நில் + உம் + ஏ
நில் + ம் + ஏ
நின்மே

என அமைந்ததாகக் கொள்ளலாம். அதுவும் ஏவற்பொருளுடையது எனவும், பன்மைச் சொல் ஒருமையில் வழங்குவது வழுவமைதி எனவும் கொள்ளலாம். இங்கும் ஏ என்னும் இறுதி ஏன் என்னும் வினாவின் ஈறுகெட்டு நின்றவடிவு எனலாம்.

| | |
|---|---|
| நில்லும் + ஏன் | சொல்லும் + ஏன் |
| நீர் நில்லுமேன் | நீர் சொல்லுமேன் |

என வழங்கும் இக்காலத்துச் சொற்களுடன் ஒத்த அமைப்பும் பொருளும் நின்மே என்பதற்கு இருத்தலை உணரலாம்.

ஏகாரத்தைப் பொருளுணர்த்தாத அசையிடைச் சொல் எனவும் கொள்ளலாம்.

**மோ என்னும் அசைச்சொல்**

இவ்வாறே மொழிமோ[1] என்ற சொல்லையும்,

மொழி + உம் + ஓ
மொழி + ம் + ஓ
மொழிமோ

என்று அமைந்ததாகக் கொள்ளலாம். இவ்வாறன்றிப் பிழற்பிரிப்பால் (metanalysis) மொழி + மோ எனப் பிரித்தது பொருந்தவில்லை. புறநானூற்றில் 48-ம் பாட்டில்

எம்மும் உள்ளுமோ முதுவாய் இரவல

என்னும் அடியில்,

---

[1]காமம் செப்பாது கண்டது மொழிமோ—குறுந்தொகை, 2.

உள்+உம்+ஓ

எனப் பிரித்தற்கு ஏற்றவாறே சொல் அமைந்திருக்கிறது. இங்கு உம் என்பதில் உயிர் கெடவில்லை. இங்கு இச்சொல் முன்னிலை ஒருமையில் வழங்குதலை எடுத்துக்காட்டி இதன் வரலாற்றை மறைப்பதில் பயனில்லை. இதன் முன்னிலைப் பொருளை உணர்த்துவது 'உம்' என்னும் முன்னிலை விகுதியே ஆதலின், வழுவமைதி எனக் கொள்வதே பொருந்தும். மக்களின் மொழியில் தருக்க முறைப்படி முழுதும் அமைந்திருக்கும் என எதிர்பார்த்தல் கூடாது என்பது அறிஞர் கொள்கையாகும்.

நின்மே என்பதைத் தொல்காப்பியனார் 'முன்னிலை முன்னர் ஏ' எனக் குறித்தது போலவே, மியா, மோ என்பவற்றையும் முன்னிலைக்கு உரியவை எனக் குறிக்கிறார்.

மியாஇக மோமதி இகும்சின் என்னும்
ஆவயின் ஆறும் முன்னிலை அசைச்சொல்.[1]

தொண்ணூறு, தொள்ளாயிரம்

பிழைபடப் பிரித்தல் போலவே பிழைபடப் பொருத்தலும் தமிழில் உள்ளது.

எழு+பத்து—எழுபஃது, எழுபது
எட்டு+பத்து+எண்பஃது, எண்பது

என்பவை போலவே,

ஒன்பது+பத்து—ஒன்பஃது, ஒன்பது

என ஆவதற்கு இடம் இல்லை. ஒன்பஃது, ஒன்பது என்ற சொற்கள் ஒன்பதையே குறிக்கின்றன ; ஒன்பது முறை பத்து ஆதலைக் குறிக்கவில்லை. ஆகவே முன்னோர் அங்கே

[1] தொல்காப்பியம், சொல் 274.

வேறு சொல்லை அமைத்தனர். ஒன்பது என்பதைக் குறிக்கத் தொண்டு என்ற சொல் ஒன்று உள்ளது. அதைச் சேர்த்து அமைத்தனர்.

தொண்டு+பத்து—தொம்பஃது, தொம்பது . எனச் சொற்கள் அமைந்திருக்கவேண்டும். ஆனால் அவை வழங்கவில்லை.

அதற்கு மாறாக, பத்தின் இடத்தில் நூறும் நூற்றின் இடத்தில் ஆயிரமும் அமைத்து, ஒன்பது பத்தைத் தொண்ணூறு என்றும், ஒன்பது நூற்றைத் தொள்ளாயிரம் என்றும் வழங்குகின்றனர். தொண்ணூறு என்பது ஒன்பது நூறு அன்று, நூற்றுக்குப் பத்துக் குறைந்தது ; தொள்ளாயிரம் என்பது ஒன்பது ஆயிரம் அன்று ; ஆயிரத்திற்கு நூறு குறைந்ததே ஆகும்.

இது மக்களின் மனவியல்பையே காட்டுகிறது. இருபத்தெட்டாந் தேதியன்று, அடுத்த முதல் தேதிக்கு இன்னும் இரண்டுநாள் உள்ளன என்று எண்ணுவது மனத்தின் இயல்பு. எழுபத்தெட்டு ரூபாய் சேர்த்த ஒருவன், அந்தத் தொகையை விட்டு எண்பதுக்கு இரண்டு குறைவு என்றே எண்ணுகிறான். அவை போலவே,

ஒன்று, இரண்டு, மூன்று,...எட்டு, தொண்டு, பத்து

என்று இருந்த பழைய எண்முறையில் பத்துக்கு முற்பட்ட தொண்டு* என்ற பழைய எண் மெல்ல மறைந்து, ஒன்று குறைந்த பத்து என்ற பொருளை உடைய ஒன்பது என்ற சொல் வந்து அமைந்தது.

ஒன்று இரண்டு...எட்டு, ஒன்பது, பத்து

என எண்ணும் முறை அமைந்துவிட்டது.

---

*தொண்டுபடு திவவின் :

தொண்டு - ஒன்பது. மலைபடுகடாம், 21.

சில ஊர்களில் வாணிகத் துறையில் முகந்து அளப்பவர் ஒன்று இரண்டு எனக் கூறுமல், லாபம் இரண்டு மூன்று நான்கு என எண்ணுதல் காணலாம். அவர்களுடைய மொழியில் ஒன்று என்பதற்கு ஈடாக 'லாபம்' என்ற சொல் வழங்குதலுக்குக் காரணம் என்ன? 'லாபம்' வர வேண்டும் என்று ஆவலுறும் நம்பிக்கை, நாளடைவில் 'லாபம்' வருவதற்கும் இதுவே வழி என்றும், ஒன்று இரண்டு என எண்ணினுல் ஊதியம் வராது என்றும் படிப்படியே மூட நம்பிக்கை ஆகியுள்ளது. அதுபோலவே, பத்து நிரம்புவதை ஆவலுடன் எதிர்பார்க்கும் மனத்திற்கு ஏழு எட்டு தொண்டு என்று எண்ணுவதைவிட, ஏழு எட்டு ஒன்பது என்று எண்ணுவது ஒருவகை மகிழ்ச்சி தந்தது; பத்தை நெருங்கிவிட்டோம் என்ற நம்பிக்கை பிறப்பதால் அது மக்களிடையே செல்வாக்குப் பெற்று எண்ணுப் பெயராகவே வாழ்வு பெற்றது. எண்ணுப் பெயர் எளிதில் மாறுமோ, எவ்வாறு தொண்டு மறைந்து ஒன்பது வந்திருக்கக் கூடும் என ஐயுறலாம். இது இயற்கை. தமிழர்கள் சங்ககாலத்தில் பயில வழங்கிய குணக்கு, குடக்கு என்னும் சொற்கள் இன்று பழைய இலக்கியம் கற்காதவர்க்கு விளங்காத சொற்களாகிவிட்டன. திசைகளைக் குறிக்கும் சொற்களும் அடிக்கடி வழங்கி மொழியில் வேரூன்றும் சொற்கள். அவைகளும் மாறிவிட்டன; பழந்தமிழர் கேட்டிராத கிழக்கு மேற்கு என்னும் சொற்கள் பிற்காலத்தில் செல்வாக்குப் பெற்று, குணக்குக்கும் குடக்குக்கும் வாழ்வு இல்லாமல் செய்துவிட்டன. அவ்வாறே ஒன்பது என்னும் நம்பிக்கை தரும் சொல் செல்வாக்குப் பெற்றதும், தொண்டு என்னும் பழைய சொல் வாழ்வு இழந்துவிட்டது.

பத்தை நினைத்து ஒன்பது என்ற மனம், மேலும் செல்வாக்குடன் வேறுசில சொற்களையும் மாற்றியது. அந்த

மாறுதலில் தவறுகள் குடிபுகுந்தன. தனவந்தர் என்ற வட சொல்லின் நினைவால் சிலர் செல்வந்தர் என்ற தவருன சொல்லைப் படைத்து எழுதவில்லையா? அதுபோன்ற தவறு கள் நேர்ந்தன.

பத்துப் பத்தாக எண்ணிவரும்போது,

எழுபது எண்பது தொண்பது நூறு.

என்று எண்ணவேண்டும். தொண்டுபத்து—தொண்பது என்று ஆவது இயற்கை. ஆனல் பழைய நினைவு - ஒன்று குறைந்த பத்து என்று அமைத்த நினைவு-இதையும் நூற்றிற் குக் குறைந்தது என்று அமைக்கத் தூண்டியது.

எழுபது எண்பது தொண்ணூறு நூறு

என்று எண்ணும் வழக்கம் பிறந்தது.

இவ்வாறே நூறு நூருக எண்ணும் தேவை ஏற்பட்ட போதும்,

எழுநூறு எண்ணூறு தொண்ணூறு ஆயிரம்

என்று எண்ணும் போக்கு மாறி,

எழுநூறு எண்ணூறு தொள்ளாயிரம் ஆயிரம்

என்று எண்ணும் தவறு செல்வாக்குப் பெற்றது. ஆகவே, ஒன்பது என்பதில் பத்து இருப்பதுபோல், தொண்ணூறு என்பதில் நூறு என்ற சொல்லும் தொள்ளாயிரம் என்பதில் ஆயிரம் என்ற சொல்லும் தவருக இடம் பெற்றன. ஒப்புமையாக்கம் (analogy) தவருன சொற்களும் தொடர் களும் அமைவதற்கும் காரணம் ஆகும் என்பதற்கு இவை சான்றுகளாகும்.

தமிழில் இடம் பெற்ற இத் தவறுகள் கன்னடத்திலும் தெலுங்கிலும் இல்லை.

90 தொண்ணூறு—தமிழ்
தொம்பத்து—கன்னடம்
தொம்பை—தெலுங்கு

900 தொள்ளாயிரம்—தமிழ்
தொம்பைநூறு—கன்னடம்
தொம்ம நூறு—தெலுங்கு

தெலுங்கும் கன்னடமும் போலவே,

9 : ஒன்பது
90 : தொண்பது
900 : தொண்ணூறு
9000 : தொள்ளாயிரம்

என்று அமைய வேண்டிய தமிழ் எண்ணுப் பெயர்களில் தொண்பது தொண்ணூறு என மாற, தொண்ணூறு தொள்ளாயிரம் என மாறிவிட்டது.

நேர்ந்த இத் தவறுகளைத் தவறுகள் எனச் சொல்லிச் செல்லாமல், இவற்றிற்குக் காரணம் கூறிக் காக்க முயன்ற தொல்காப்பியனார் மேலும் சில சிறு தவறுகள் செய்துள்ளார் ; அவரைப் பின்பற்றிய பவணந்தியாரும் அதே தவறுகள் செய்துள்ளார்.

தொண்ணூறு என்பது எப்படி அமைந்தது ? தொல்காப்பியனார் தரும் விளக்கம் வருமாறு :—

ஒன்பான் ஒகரமிசைத் தகரம் ஒற்றும்
முந்தை ஒற்றே ணகாரம் இரட்டும்
பத்தென் கிளவி ஆய்த பகரங் கெட
நிற்றல் வேண்டும் ஊகாரக் கிளவி
ஒற்றிய தகரம் றகாரம் ஆகும்.[1]

---

[1]தொல்காபியம், எழுத்து. 445.

ஒன்பஃது என்பதில் ஒ என்னும் உயிருடன் த் என்ற மெய் சேரும் ;

தொன்பஃது என்பதில் இரண்டாவதாக உள்ள ன் என்பது ண்ண் ஆகுமாம் ;

தொண்ண்பஃது என்பதில் ப என்ற உயிர்மெய்யும் ஃ என்ற ஆய்தமும் கெடுமாம்.

அவற்றினிடத்தில் ஊ என்ற உயிர் நிற்குமாம்.

தொண்ணூது என்று திரிந்த அதன் இறுதியில் உள்ள தகரம் றகரமாகுமாம்.

தொண்ணூது என்பது தொண்ணூறு ஆகுமாம்.

இவ்வாறே தொள்ளாயிரம் என்பதற்குக் கூறப்படும் விதியும் வியப்பானதாக உள்ளது.

ஒன்பான் முதனிலை முந்துகிளந் தற்றே
முந்தை ஒற்றே ளகாரம் இரட்டும்
நூறென் கிளவி நகார மெய்கெட
ஊஆ ஆகும் இயற்கைத்து என்ப
ஆயிடை வருதல் இகார ரகாரம்
ஈறுமெய் கெடுத்து மகாரம் ஒற்றும்.1

ஒன்பது + நூறு
தொன் நூறு
தொள்ள் நூறு
தொள்ள் ஊறு
தொள்ள் ஆறு
தொள்ள் ஆ இாறு
தொள்ள் ஆ இரம்
தொள்ளாயிரம்

என இத்தனைத் திரிபுகள் ஏற்படுவதாகக் கூறுகிறார் தொல்

1தொல்காப்பிய, எழுத்து 463.

காப்பியனார். சொற்கள் வளர்ந்த வரலாற்றை உணர்த்த முயலாமையால் நேர்ந்த இடர்ப்பாடுகள் இவை.

இவ்வாறே இன்னும் சில தொடர்களுக்கும் சொற்களுக்கும் கூறும் புணர்ச்சிவிதிகள், மொழியியல் ஆராய்ச்சிக்குப் பொருந்துவனவாக இல்லை. சொற்களின் வரலாற்றையும் வழங்குமுறையையும் ஆராயின், பெரியோர் செய்த சிறு பிழைகளும் விளங்கும்; சொற்களின் உண்மை வடிவங்களும் திரிபின் காரணங்களும் புலப்படும்.

இப் பிழைகளை ஆராய்வதால் பெரியோர்க்குச் சிறுமை ஏற்படுதலும் இல்லை; பிழை காண்போர்க்குப் பெருமை ஏற்படுதலும் இல்லை. சொற்களைப் பற்றிய உண்மைகள் ஓரளவு விளங்குதல் கூடும். அன்றியும்,

> அரியகற்று ஆசற்றார் கண்ணும் தெரியுங்கால்
> இன்மை அரிதே வெளிறு

என்று திருவள்ளுவர் உணர்த்துவது எவ்வளவு உண்மை என்பது மேலும் தெளிவாகும்.

# பெண்ணுரிமை

எத்தனையோ பழக்க வழக்கங்கள் மக்களின் வாழ்வில் வேரூன்றியுள்ளன. அவற்றில் பல ஒரு காலத்தில் ஒரு நாட்டுக்குத் தேவையாக இருந்து, பிறகு மற்றொரு காலத்திற்கோ வேறொரு நாட்டிற்கோ தேவை இல்லாமற் போகின்றன. தேவை இல்லாமற் போதல்மட்டும் அல்லாமல், பொருந்தாமலும் போகின்றன. பழங்காலத்துக் குத்து விளக்கு இக்காலத்தில் தேவை இல்லை; பழங்காலத்து எழுத்தாணியோ இக்காலத்திற்குத் தேவை இல்லாதது மட்டும் அல்லாமல் பொருந்தாமலும் உள்ளது. இவை நாம் நன்கு அறிந்தவை. நம் வாழ்வில் நாம் அறியாமலே வேரூன்றியுள்ள சில பழக்கவழக்கங்கள் உள்ளன. அவை தேவை அற்றவை, பொருந்தாதவை எனச் சிலர் முன்வந்து எடுத்துக்காட்டும் வரையில் நாம் உணர்வதே இல்லை. அவற்றுள்ளும், நாகரிகமான மக்களிடையே உள்ள பழக்க வழக்கங்களானால், அவற்றின் குறையை நாம் உணர்வதே இல்லை. அவற்றின் அடிப்படையில் மூட நம்பிக்கையே குடிகொண்டிருந்த போதிலும், அவற்றை உயர்வு உடையவை என்றே மதிக்கிறோம். மொழித்துறையிலும் இத்தகையவை சில உள்ளன.

ஒரு காலத்தில் பெண் உரிமை அற்றவளாக இருந்தாள். உடல்வலிமைக்குப் பெருமதிப்பு இருந்த காலத்தில்—அறிவு நுட்பத்திற்கும் கலையுணர்வுக்கும் பண்பாட்டிற்கும் மதிப்பு ஏற்படாமல் உடல்வலிமை மட்டும் சிறப்புற்றிருந்த காலத்தில்—ஆண் உயர்ந்தவன் என்றும், பெண் தாழ்ந்தவள் என்றும் கருத்து இருந்துவந்தது. ஆண் உரிமை உடையவன்

என்றும், பெண் உரிமை அற்றவள் என்றும் எல்லோரும் எண்ணி வாழ்ந்துவந்தனர். நாகரிகம் வளர வளர இந்த நிலை மாறியது. பெண் துணைவியாகவும் தாயாகவும் விளங்கும் நிலைகள் போற்றப்பட்டன. குடும்பத்தில் பெண்ணுக்குத் தலைமை கிடைத்தது; வெளியிடங்களிலும் தலைமை கிடைத்தது. பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும் பெண்ணுக்கும் உரியவை ஆயின. இவ்வாறு படிப்படியாகப் பெண்ணுரிமை வளர்ந்தது.

ஆனால், "நீ யார் மகன்?" என்று ஒருவனைக் கேட்டால், அவன் உடனே தந்தையின் பெயரைத்தான் சொல்வான். பெண்ணுரிமையே பேசும் ஒருவனாக இருப்பினும் அவன் இவ்வாறு தந்தையின் பெயரையே சொல்வான். இது ஏன்? "யார் மகள்" என்று எவ்வளவு படித்த பெண்ணைக் கேட்டாலும், அவள் தயங்காமல் கூறுவது தந்தையின் பெயரே ஆகும். "நான் மங்கையர்க்கரசியின் மகள்," "நான் தையல்நாயகியின் மகள்" என்று எந்தப் பெண்ணும் கல்லூரிகளிலோ நீதிமன்றங்களிலோ தன்னைப் பற்றிச் சொல்லிக்கொள்வதில்லை. எவ்வளவு புரட்சியுள்ளம் படைத்த பெண்ணும் தந்தையின் பெயரையே சொல்கிறாள். தலைப்பெழுத்தாகப் பெற்றோரின் முதலெழுத்தைக் குறிக்கும் போதும் தந்தையின் பெயரில் உள்ள முதலெழுத்தையே குறிக்கின்றாள். 'மு. கோமளவல்லி' என்று ஒரு பெண்ணின் பெயர் இருந்தால் (திருமணம் ஆகாத பெண்ணின்) அந்தத் தலைப்பெழுத்து 'முனியம்மாவின் மகள்' என்று உணர்த்தாமல் 'முத்துச்சாமியின் மகள்' என்றே உணர்த்துகிறது.

பெண்கள் பொதுவாக உரிமையற்று வாழ்ந்த பழங்காலத்துப் பழக்கத்தையே இது காட்டுகிறது.

இதற்கு ஒரு காரணம் கற்பித்து அமைதி கூறலாம். ஒருகுடும்பத்தில் தாய் வெளியே பலருடன் பழகுவது குறைவு ; தந்தையே சுற்றுப்புறம் அறியப் பழகி வாழ் கிறன் ; ஆகையால் தன்னை அறிமுகப்படுத்தும் பெயரின் தலைப்பெழுத்துக் கொண்டு தந்தையை உணர்த்துவது பய னுடையது ; அதனுல் இந்தப் பழக்கம் உள்ளது என்று அமைதி கூறலாம். அது அவ்வளவாகப் பொருந்தாது. உலகறிய வாழும் தந்தையர் மிகச் சிலரே ; மற்றத் தந்தையர் மக்கள் பலர் அறியும் நிலையில் இல்லாமல் அடக்கமான வாழ்வு நடத்துகின்றவர்களே. அவர்களின் பெயரைக் குறித்தலும் ஒன்றே ; அந்தக் குடும்பத்துத் தாய்மார்களின் பெயரைக் குறித்தலும் ஒன்றே. வேறுபாடு ஒன்றும் இல்லை. ஒருவர் பெயரைக் குறிக்காமல், தாய் தந்தை இரு வர் பெயரையும் குறிக்கலாம். கந்தய்யாவுக்கும் வள்ளி யம்மைக்கும் பிறந்த மகள், தன் பெயரை எழுதும்போது, க. வ. அலர்விழி, அல்லது, வ. க. அலர்விழி என்று எழுத லாம். அவ்வாறும் செய்யாமல், தந்தையின் பெயரை உணர்த்தி அந்த ஓரெழுத்தைமட்டுமே எழுதுகிறள் ; க. அலர்விழி என்று குறிக்கிருள்.

இன்றைய குடும்பத்தில் உள்ள பெண்களின் நிலையே இதுதானே என்று ஆராய்ந்தால், அது உண்மை அன்று எனக் காண்கிறேம். அலர்விழியின் தாயே அந்தக் குடும்பத்து வரவு செலவைக் கவனிக்கிருள். முதல்தேதி யன்று கந்தய்யா கையெழுத்திட்டுச் சம்பளம் வாங்குகிறர் என்ற ஒன்று தவிர, மற்ற எல்லா உரிமையும் பணத்தைப் பொறுத்தவரையில் வள்ளியம்மையிடமே உள்ளது. குடும்ப ஆட்சியும் அவள்கையிலேயே உள்ளது. அதனுல், அந்தக் குடும்பத்தில் உறவுகொண்டு அடிக்கடி வந்து பழகுவோரில் பெரும்பாலோர் வள்ளியம்மையின் நட்பும் சுற்றமுமே

ஆவர். கந்தய்யாவின் உறவினர் அவ்வளவாக நெருங்குவதும் இல்லை. தாயுறவே செழித்துவரும் குடும்பம் அது. அலர்விழியைக் கல்லூரியில் சேர்த்துப் படிக்கவைப்பதிலும் தந்தை அவ்வளவாக ஊக்கம் கொள்வதில்லை. தாயே ஆர்வம் கொண்டு எண்ணியதை முடித்து வெற்றி பெறுகிறாள். இவ்வாறு இருப்பதால், அந்தக் குடும்பத்தில் ஆணின் ஆட்சி தலைகாட்டுவதாகக் கூறல் இயலாது. ஆயினும் அந்தப் பெண், க. அலர்விழி என்றே பெயர் எழுதுகிறாள் எனின், அது பழங்காலத்துப் பழக்கமாக வந்த குத்துவிளக்குப் போன்றதே ஆகும். மண்ணெண்ணெய் விளக்கோ, மின் விளக்கோ இல்லாத ஊர் என்று காரணம் கூற முனையாமல், விட முடியாமல் ஒட்டிவரும் பழைய பழக்கம் என்று கூறுவதே பொருந்தும்.

இந்தப் பெண் கல்லூரிமேடை ஏறி ஆங்கிலத்தில் பேசும் போது, 'Ladies and gentlemen' என்று முதலில் பெண்களையே விளித்துப் பேசுகிறாள். அந்த ஆங்கில மேடையில் ஆண்கள் ஏறிப் பேசும்போதும், அவ்வாறே முதலில் பெண்களை விளித்துப் பேசுகிறார்கள். ஆண்கள் பலரும் பெண் ஒருத்தியுமாக உள்ள ஆங்கிலக் கூட்டமாயின், அந்தப் பெண்ணின் பெயரை முன்னே சொல்லி விளிக்கவேண்டும் என்பது ஆங்கில மரபு. அந்த மரபைப் போற்றும் பழக்கம் உடையவள் அலர்விழி.

அலர்விழியின் திருமணம் நடப்பதாக வைத்துக்கொள்வோம். பழைய முறைப்படி அச்சிடும் திருமண அழைப்பாயின், "இங்ஙனம், தங்கள் அன்புள்ள, சொ. கந்தய்யா" என்று அச்சிடப்படும். புதுமுறைப்படி அச்சிடும் அழைப்பாயின்,

இங்ஙனம், தங்கள் அன்புள்ள,
க. வள்ளியம்மை
சொ. கந்தய்யா

என்று இருவர் பெயரும் அச்சிடப்படும். அவற்றுள்ளும் குடும்பத்தலைவியின் பெயரே முன்னே இருக்கும். ஆங்கில அழைப்பிதழாக இருந்தால், Mrs. and Mr. Kandayya என்று குடும்பத் தலைவியின் பெயரையே முதலில் குறிப்பிடுவர்.

இந்த அளவிற்குப் பெண்ணுரிமை காணப்படுகிறது. நடைமுறையில் இவ்வளவு முன்னேற்றம் ஏற்பட்ட போதும், பழைய பழக்கங்களில் இன்னும் உரிமை குறைந்த, அல்லது, உரிமை அற்ற வாழ்வின் அறிகுறிகள் உள்ளன.

எடுத்துக்காட்டாகக் கூறத்தக்கது ஒன்று. க. அலர்விழி என்ற அந்தப் பெண், ம. நன்னன் என்ற இளைஞனை மணப்பதாக வைத்துக்கொள்வோம். உடனே அவள் ந. அலர்விழி என்று தலைப்பெழுத்தை மாற்றிக்கொள்வாள். தந்தைபெயரை விட்டுக் கணவன்பெயரின் குறிப்பாக 'ந' என்ற எழுத்தைக் கொள்வாள். ஆனால் நன்னன் அவ்வாறு செய்யாமல் 'ம. நன்னன்' என்று பழையபடியே எழுதுவான். தன் துணைவி செய்துகொண்ட மாறுதல்போல் இவன் செய்துகொள்வ தில்லை. ஒத்த உரிமை இருத்தலைப் புலப்படுத்துவதானால், இவன் 'அ. நன்னன்' என்று குறிக்க வேண்டும். அவள் ஒரு தந்தையின் மகள் என்ற நிலையை விட்டு, ஒருவனுடைய துணைவியானதைப் பெயரிலேயே புலப்படுத்துவாள்; இவனோ, பழையபடியே ஒரு தந்தையின் மகனாகவே பெயரில் விளங்க விரும்புவான்.

இது ஒருவகை. மற்றொரு வகையாகப் பெயரில் மாறுதல் செய்துகொள்வதும் உண்டு. அதாவது: கணவன் பெயர் அவ்வாறே இருக்க, மனைவிமட்டும் தன் பெயருடன் கணவன் பெயரையும் சேர்த்துக்கொள்வாள். வரதராசன் என்பவனை மணந்த ராதா என்பவள், தன் பெயரை ராதா வரதராசன் என்று மாற்றுகிறாள்; அதையும் சுருக்கி

ரா. வரதராசன் என்று அமைக்கிறாள். நேற்றுவரையில் ராதா என்று கையெழுத்து இட்டு வந்தவள், திருமணமானதும் இன்றே ரா. வரதராசன் என்று கையெழுத்திடுகிறாள். அவள் பெண்பால்; ஆனால் அவள்பெயரோ ஆண்பாலுக்கு உரிய 'அன்' விகுதி உடையதாக வரதராசன் என்று கையெழுத்தில் உள்ளது.

இது புதிய முறை; ஆங்கில நாட்டாருடன் பழகிப் பழகி அவர்களைப் பார்த்துக் கற்ற 'முற்போக்கான' முறை. பெண்பெயர் ஆண்பெயராக மாறும் இந்தச் சீர்திருத்த முறை பெண்ணுரிமை அற்ற பழங்காலப் பழக்கத்தினையே புலப்படுத்துகிறது. தன் பெயரால் தான் வாழும் உரிமையும் இல்லாத ஒரு நிலையைக் காட்டுகிறது; அல்லது, மகளாக வாழ்ந்த அடிமை வாழ்வு தொலைந்தது என்று அந்தப் பழைய பெயரை மாற்றியமைத்ததாகக் கூறலாம். ஆனால் அவ்வாறு கூறுவதற்கு இடம் இல்லை. ஏன் எனின், புதிய பெயர் தன் உரிமைப் பெயராக இல்லாமல், வேறொருவனுடைய பெயராகவே உள்ளது.

இல்லறத்தார் ஒருவர் துறவியாகும்போது, தம் பழைய பெயரைத் துறந்து, புதிய பெயரை ஏற்கிறார்; அதில் உரிமை உள்ளதுபோல் பெண்ணின் பெயர்மாற்றத்தில் உரிமை மணம் கமழவில்லை. அரச குடும்ப மக்களுள் ஒருவனாக இருந்தவன் முடி சூடி அரசாளத் தொடங்கும் நாளில் தன் பெயரை மாற்றிக்கொள்வதிலும், புதிய வாழ்வு பற்றிய உரிமை விளங்குகிறது. பெண்ணின் பெயர்மாற்றத்தில் இத்தகைய உரிமைமணம் இல்லை.

இவ்வாறு மணமான பெண்கள் பெயரை மாற்றிக் கொள்வதைக் குறித்து மேற்கு நாட்டு மகளிர் நெடுங்காலம் உரிமையுணர்ச்சியோடு எண்ணிப்பார்க்கவே இல்லை. அண்மையில் மகளிர் இயக்கங்கள் நடந்தபோது இதைப் பற்றி

எண்ணினர்; இவ்வாறு கணவன்பெயரை வைத்துக்கொள்வது, ஒரு பெண் கணவனுடைய உடைமையாவதையே குறிக்கிறது என்று சிலர் எதிர்க்கவும் எதிர்த்தனர்.*

இத்தகைய எதிர்ப்பு மேன்மேலும் வளரவில்லை. காரணம், இது வெறும் பெயரில் உள்ள குறையே தவிர, நடைமுறை வாழ்க்கையில் பெண்ணுரிமைக்கு ஒரு குறையும் இல்லை. குடும்ப ஆட்சி, பணப்பொறுப்பு, உலகமதிப்பு முதலியவை எல்லாம் இருக்கும்போது, பெயரில் சிறு குறை இருப்பதால் இடர் ஒன்றும் இல்லை என்று விட்டுவிடுகின்றனர்.

பெயர்களைப் பற்றிப் பொழுதுபோக்காகச சிறிது எண்ணிப் பார்க்க வல்லவர்களுக்கு மட்டுமே இந்தக் குறை புலப்படும். தமிழில் மனைவியின் பெயரைக் கூறும்போது மேற்கண்ட முறையில் கூறுதல் செவியில் பொருத்தமாக ஒலிக்கவில்லை. "இந்த அம்மையார் யார்?" என்ற வினவுக்கு விடையாக, "இவர் திரு. நன்னன்" என்றால் செவி வெறுக்கிறது. (திருமதி என்பதில் உள்ள 'மதி' யின் கதையும் வெறுக்கத்தக்கதே). இதுவும் ஆங்கிலத்தில் உள்ள பழக்கத்தை ஒட்டி அமைந்ததே. Mrs. Nannan, Mrs. Edward என்று ஆங்கிலத்தில் கூறினால் பொருந்துவதுபோல் கேட்கிறது. ஆயினும், அங்கும் Mr. Alarvizhi, Mr. Lily, Mr. Mary என்று கணவன்மாரைக் குறிப்

---

*It is well known that many women of the women's movement have of late years protested against this custom, reading in it an implication that by the change of name the married woman is somehow stamped as the property of her husband, and surrenders her innermost nature as a self-existing individual.

—Otto Jespersen, Mankind Nation and Individual, p. 175.

பிடுவதில்லை. கணவனை ஒட்டி மனைவிக்குப் பெயர் வழங்கு கிறது. ஆனால் மனைவியை ஒட்டிக் கணவனுக்குப் பெயர் வைத்தல் இல்லை. மனைவி உலகப் புகழ் பெற்றவளாகவும் கணவன் மூலைவீட்டில் கிடப்பவனாகவும் வாழும் குடும்பங் கள் சில உள்ளன. அந்தக் குடும்பங்களிலும், கணவனை மனைவியின் பெயரால் Mr. Lakshmi முதலியனபோல் அழைப்பதில்லை. சொல்லுலகத்தில் பெண்ணுரிமை இல் லாத குறையையே இது காட்டுகிறது.

ஆங்கிலத்தில் உள்ள Chairman என்ற ஆண்பாற் சொல்லுக்கு நிகரான பெண்பாற் சொல் இல்லை. ஆதலால், நகர்மன்றம் முதலியவற்றில் பெண் ஒருத்தி தலைமை ஏற்கும் போதும், அவளை Chairman என்னும் ஆண்பாற் சொல்லா லேயே குறிப்பிடவேண்டி யுள்ளது. தமிழில் தலைவன் தலைவி என்னும் சொற்கள் இருபாலார்க்கும் அமைந்துள்ள ஒத்த உரிமையைப் புலப்படுத்துகின்றன. கிழவன் கிழத்தி முதலாய பழங்காலச் சொற்களும் அத்தகையனவே. தமிழ்ச சொற்கள் சிலவற்றை ஆராயின்-சிறப்பாகக் குடும் பச் சொற்களை ஆராயின், ஆணுரிமை இல்லாத நிலையை எண்ணியே இரங்கவேண்டி யுள்ளது. மனைவி என்னும் உரிமைப் பெயர்க்கு நிகராக மனைவன் என்று சொல்வதற்கு இடம் இல்லை. இல்லாள் என்பதுபோல், இல்லான் என்று சொல்லின், வறுமை உடையவன் என்று பொருள் தருகின் றதே தவிர, இல்வாழ்க்கைக்கு உரிமை உடையவன் என்னும் பொருள் தருவதில்லை.

தமிழில் பெண்ணுரிமைக்குச் சான்றான சொற்கள் இவ்வளவு இருந்தபோதிலும், காலப் போக்கில் சில தவறு கள் இடம் பெற்றுவிட்டன.

ஆங்கிலேயர் ஒருவர் சில காலம் என்னிடம் தமிழ் கற்றுக்கொண்டார்.

அவன்—ஆண்பால் (ஒருமை)
அவள்—பெண்பால் (ஒருமை)
அவர், அவர்கள்—பலர்பால் (பன்மை)
நீ—முன்னிலை ஒருமை
நீர், நீங்கள்—முன்னிலைப் பன்மை

முதலிய பாகுபாடுகளை எல்லாம் படிப்படியாகக் கற்றுக் கொண்டார். தமிழிலேயே பேசவும் பழகினார். தமிழர் பேசுவதைக் கேட்டுப் பொருளுணரவும் பயின்றார். இவ்வாறு கற்றுவந்த அந்த ஆண்டில் தமிழ்த்திருநாளாகிய பொங்கலன்று விருந்ினராக வீட்டுக்கு வருமாறு அவரை அழைத்தேன். அவரும் அழைப்பை ஏற்று அன்புடன் வந்தார். உணவு முடிந்தபின் கூடத்தில் அமர்ந்து நெடு நேரம் பேசிக்கொண் டிருந்தோம். இடையிடையே நானும் என் மனைவியும் பேசிய பேச்சுக்களை நன்றாகக் கவனித்திருந்தார் என்று தெரிந்தது. ஒருமுறை அவளுடன் ஏதோ பேசியபின், அவள் எழுந்து தெருப்பக்கமாகச் சென்றாள். அப்போது அந்த ஆங்கிலேயர் என்னைப் பார்த்து, “ ஒரே ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன். மன்னிக்க வேண்டும் ” என்றார்.

“ தடை இல்லாமல் கேளுங்கள். தயங்க வேண்டா ” என்றேன்.

“ உங்கள் மனைவி உங்களிடம் பேசும்போதெல்லாம், நீங்கள் நீங்கள் என்று சொல்கிறார். நீங்கள் பேசும் போது, அவரைப் பார்த்து நீ நீ என்று சொல்கிறீர்கள் இது ஏன் ?” என்றார்.

“ பழக்கம் ” என்று சொல்லிப் புன்முறுவல் கொண்டேன்.

“ பழகிவிட்டால் கெட்டது நல்லதாகிவிடுமா ?” என்றார்.

"இதில் என்ன கெட்டது இருக்கிறது?" என்றேன்.

"நீங்கள் எனக்குப் பாடம் சொல்லிக்கொடுத்தபோது ஒருநாள் சொன்னீர்களே. வேலைக்காரர், சிறுபிள்ளைகள் இவர்களைப் பார்த்துப் பேசும்போதுதான் 'நீ' என்று பேசலாம். 'நீ' என்பது முன்னிலை ஒருமையாக இருந்தாலும், உயர்வு இல்லாதது. 'நீங்கள்' என்பது பன்மையாக இருந்தாலும், ஒருவரைப் பார்த்து மதிப்பாகப் பேசும்போது அதைத்தான் சொல்லவேண்டும் என்று கற்றுக் கொடுத்தீர்கள்" என்று பேச்சை நிறுத்தினார்.

உடனே எனக்கு அவருடைய கருத்து விளங்கிவிட்டது. என் பேச்சில் - மனைவியை நோக்கி நான் பேசிய பேச்சில் - இருந்த குற்றம் எனக்கு விளங்கிவிட்டது. அவருக்கு என்ன சொல்வது என்று தெரியாமல் திகைத்தேன்.

அவரே மறுபடியும் என்னை நோக்கி, "நீங்கள் எப்போதும் மனைவியைப் பார்த்து 'நீங்கள்' என்று பேசுவதில்லையா?" என்றார்.

"இல்லை" என்றேன்.

"அவர்மட்டும் உங்களை எப்போதும் 'நீ' என்று சொல்லக் கூடாது அல்லவா?" என்றார்.

"சொல்லலாம். எங்கள் குடும்பத்தில் இல்லை. நாகரிகம் இல்லாத குடும்பங்களில் கிராமங்களில் உண்டு. எங்கள் குடும்பங்களில் மனைவி கணவனைப் பார்த்து 'நீ' என்று சொல்லமாட்டாள்" என்றேன்.

"உங்களுக்குள் பழக்கமாகிவிட் டிருக்கலாம். ஆனால் எனக்கு இது பொருத்தமாகவே தெரியவில்லை. கணவன் மனைவி என்றால் வாழ்க்கையில் சமம்; ஒரே நிலைதான். இவர்களுக்குள் உயர்வு தாழ்வு எப்படி இருக்கமுடியும்?" என்றார்.

" உங்கள் மொழியில் - ஆங்கிலத்தில் - தாழ்ந்த சொல், உயர்ந்த சொல் என்று இரண்டு இல்லை. ஒருமை பன்மை வேறுபாடும் இல்லை. எல்லாரையும் எந்த நிலையிலும் you என்ற ஒரே சொல்லால் குறிக்கிறீர்கள். அதனால் உங்களுக்கு இந்தச் சிக்கல் இல்லை " என்றேன்.

" அவருக்கு இதைச் சொல்லலாமா ?" என்றார்.

" எவருக்கு ?" என்று விளங்காமல் கேட்டேன்.

" உங்கள் மனைவிக்கு " என்றார்.

எனக்குச் சிரிப்பு வந்தது.

" ஏன் சிரிக்கிறீர்கள் ?" என்றார்.

" அவருக்கு என்று நீங்கள் சொன்னது விளங்கவில்லை. அதனால் சிரித்தேன். நாங்கள் மனைவியைப் பற்றிப் பேசும் போது ' அவள் ' என்றுதான் குறிப்பிடுவோம் ; ' அவர் ' என்று சொல்லமாட்டோம் " என்றேன்.

" ஆமாம், அதையும் கவனித்தேன். நீங்கள் உங்கள் மனைவியை மரியாதை இல்லாமல் ' அவள் ' என்று சொல்கிறீர்கள். நாங்கள் அப்படி மரியாதை இல்லாமல் பேசலாமா?" என்றார். சிறிது பொறுத்து, "நாங்கள் பேசும்போது எப்படிப் பேசுவது ?" என்று கேட்டார்.

" அவர் என்று சொல்லாமல், அவர்கள் என்று சொல்வது வழக்கம். பக்கத்து வீட்டு நண்பரின் மனைவியைப் பற்றி நான் பேசநேர்ந்தால், ' அவர்கள் நல்லவர்கள் ' அல்லது ' அந்த அம்மா நல்லவர்கள் ' என்றுதான் பேசுவேன் " என்றேன்.

" அப்படியானால், அவர் என்பது ஆண்பாற் சொல்லாக இருக்கிறது. இரண்டு பாலுக்கும் பொது என்று சொன்னீர்களே " என்றார்.

" இலக்கணம் அப்படி " என்றேன்.

சிரித்தார். "இலக்கணம் வேறு, வழக்கம் வேறு என்று சொல்கிறீர்கள்" என்றார்.

பிறகு வேறு என்னவோ பற்றிப் பேசிக்கொண்டிருந்து சிறிது நேரம் கழித்து விடைபெற்றார்.

ஆங்கிலத்தில் இந்தக் குறை இல்லை, தமிழில்மட்டும் உள்ளதே என்ற எண்ணம் உள்ளத்தை உறுத்தது.

திடீரென்று ஆங்கிலப் பெண்கள் மாநாடு ஒன்று எப்போதோ கூடியதைப் பற்றி எங்கோ படித்தது நினைவுக்கு வந்தது. அதில் ஓர் அம்மையார் ஆண்களின் கொடுமை வாழ்வின் சட்டங்களில் உள்ளது போலவே இலக்கண விதிகளிலும் உள்ளது என்று கடுமையாகத் தாக்கியிருந்தாள்; தவறு, தவறு - தாக்கியிருந்தார். ஆங்கிலத்தில் படர்க்கை ஆண்பால் இடப்பெயராகிய (masculine pronoun) he என்பதன் வேற்றுமைத் திரிபுகளாக his, him என இரண்டு சொல் இருப்பதாகவும், பெண்பால் இடப் பெயராகிய (feminine pronoun) she என்பதற்குமட்டும் her என்ற ஒரே சொல் இருப்பதாகவும், ஆண்கள் தம்மை ஒப்பானவர்களாக மதித்து உரிமை தராததே இதற்குக் காரணம் என்பதாகவும் சொற்பொழிவு ஆற்றினாளாம். தமிழ் கற்ற அந்த ஆங்கிலேயர் எங்கள் வீட்டில் இருந்தபோதே இந்த மாநாட்டுச் செய்தி நினைவுக்கு வந்திருந்தால், அவர்க்கு இதை எடுத்துச்சொல்லி ஆறுதலடைந்திருப்பேன்.

போனது போகட்டும் என்று அந்த எண்ணத்தை விட்டேன். ஏதேனும் படித்துச் சிறிது மறந்திருக்கலாம் என்று மேசைமேல் இருந்த ஒரு கதைப் புத்தகத்தை எடுத்துப் படித்தேன்.

> நல்ல எண்ணத்தோடு பொல்லாங்கு செய்யும் பெண்களுள் அவள் ஒருத்தி. உலகத்தில் வாழ வேண்டுமானால் அதற்கு ஒரு வழி உண்டு என்றும், அவரவரைத் தக்கபடி அடக்கி

ஆள்வதே அந்த ஒரு வழி என்றும் உள்ளத்தில் உறுதியான நம்பிக்கை அவளுக்கு உண்டு. அவள் இட்ட கோட்டைக் கடக்காத கடப்பாடு உடையவர் அவளுடைய கணவர். யாராவது ஒருவர் விட்டுக்கொடுத்தால்தான் குடும்பத்தில் ஒத்துப் போக முடியும் என்பது அவர் தம்முடைய வாழ்க்கையில் கற்ற ஒரே பாடம்.

இந்தப் பகுதியைப் படித்ததும் வெறுப்புக் கொண்டு அந்தக் கதைநூலை அப்படியே மூடி வைத்துவிட்டேன். அந்த நூலின் ஆசிரியர்க்கு அந்தக் குடும்பத்துக் கணவனும் மனைவியும் (அல்லது, கணவரும் மனைவியாரும்) ஒரே நிகரானவர்கள். அந்த இருவருள் ஒருவரை அவர் உயர்வாக மதிக்கவேண்டிய காரணமும் இல்லை. மற்றொருவரைத் தாழ்வாகக் கருதவேண்டிய காரணமும் இல்லை. இருவரையும் அவன் அவள் என்று கதை எழுதிச்சென்றிருக்கலாம். அல்லது, அவர் அவர் என்றாவது, அவர்கள் அவர்கள் என்றாவது இருவரையும் உயர்வாகக் குறித்தே எழுதியிருக்கலாம். இருவரும் அப்படி ஒருவகையிலும் உயர்வுடைய மக்களாகத் தெரியவில்லை. இருவரும் கீழ்மக்களே ஆதலால், அவன் அவள் என்றே எழுதியிருக்கலாம். இப்படி ஒரே குடும்பத்தில ஆணை உயர்வாகவும் பெண்ணைத் தாழ்வாகவும் மதித்து அந்த ஆசிரியர் எழுதியது பொருந்தாது என்று வெறுப்போடு அந்தப் புத்தகத்தை மூடினேன்.

மறுபடியும் மனம் புத்தகத்தையே நாடியது. வேறொரு புத்தகத்தை எடுத்தேன். அதுவும் கதைப் புத்தகமாகவே வந்தது. திறந்தேன். ஏதோ ஒரு பக்கம் படிக்கலாம் என்று படித்தேன்.

"அம்மா பார்த்தால் என்ன நினைப்பாள்" என்று அஞ்சியே நான் அவளோடு பழகாமல் அடங்கி ஒழுகினேன். தவறு செய்ய அஞ்சி அடங்குவதுபோல் அடங்கி நடந்

*தேன். "அப்பா கேட்டால் என்ன நினைப்பார்?" என்ற எண்ணம் வந்ததும் உள்ள முயற்சியும் போய்......*

இந்த வாக்கியத்தையும் படித்துமுடிக்காமல் புத்தகத்தை மூடினேன். முன்பே படித்த கதை அது. ஆதலால் கதை நிகழ்ச்சி இன்ன பகுதி என்று தெளிவாகத் தெரிந்துகொண்டேன். புத்தகத்தை வெறுப்புடன் மூடிய காரணம் வேறு. முன் படித்த கதையில் வரும் கணவனும் மனைவியும் கீழ்மக்கள். இந்தக் கதையில் வரும் அம்மாவும் அப்பாவும் நல்ல மேன்மக்கள். முன்னைய கதையில் நூலாசிரியர் கணவன் மனைவி இருவரைப் பற்றியும் அவர் அவள் என்று குறித்துக் கதை சொன்னார். இந்தக் கதையில் நூலாசிரியர் நேரே சொல்லவில்லை. ஆகையால் அவருக்குப் பொறுப்பு இல்லை. அந்தப் பெற்றோரைப் பற்றி அவர்களின் மகனே சொல்வதாகக் கதை எழுதுகிறார். மகனும் படித்துப் பண்பட்ட உயர்ந்த மகன். அந்த மகன் அம்மாவைக் குறிப்பிடும்போது "என்ன நினைப்பாள்" என்கிறான். அப்பாவைக் குறிப்பிடும்போது "என்ன நினைப்பார்" என்கிறான். வயிற்றில் பிறந்த மகனும் தந்தையை மதிக்கும் அளவிற்குத் தாயை மதிப்பதில்லை. தந்தை ஆண். தாய் பெண். இது தான் காரணமா? அந்த மகன், மொழியைக் கற்கத் தொடங்குவதற்குத் தாயே காரணம். அதனால்தான் அவன் பேசும் மொழியைத் தாய்மொழி என்று சொல்கிறான்; தகப்பன் மொழி என்று சொல்வதில்லை. மொழிக்குப் பெயரும் புகழும் தரும் அளவிற்குத் தாயின் தொண்டு பாராட்டப் பட்டிருந்தும், தந்தைக்கு நிகரான நிலையை அந்தத் தாய் பெறவில்லை. இதையே அவனுடைய தாய் அவனுக்குக் கற்பித்து வளர்த்த தாய்மொழி தெரிவிக்கிறது.

